இந் நூலில், யான் இராமனது குணங்களை விதந்தெடுத்துக் கூறியுள்ள பல பகுதிகளைப் பொதுவாகவும், இராமன் வாலியை மறைந்து நின்று கொன்ற செயல் சம்பந்தமாக விவரித்திருக்கும் வாலிவத நியாயப் பகுதியைச் சிறப்பாகவும் நோக்கினோர் சிலர், யான் வெளியிட்டுள்ள 'இராமாயண உள்ளுறை பொருளென்னும் தென்னிந்திய சாதி வரலாறு'* என்ற நூலின்கண் கூறியிருக்கிற இராமனைப் பற்றிய குற்ற விவரணத்தோடு இந் நூலில் கூறப்பட்டுள்ள குண விவரணம் முற்றும் மாறியிருப்பதற்குக் காரணம் வினவினர். அவ்வினா, வேறு பலர் மனத்தும் எழலாம். இராமாயண உள்ளுறை பொருளில், ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, சரித்திர முறையாக, இராமாயணத்தை ஆராய்ந்து இராமனைப்பற்றிக் கூறியதை யான் அறிந்தபடி விளக்கினது போல, இந்நூலில், கம்பர், சமய முறையாக, இராமனைப்பற்றிக் கூறியவைகளை என் அறிவுக்கு எட்டினமட்டும் விளக்கி யிருக்கின்றேன்.

## குணங் குற்றங்கள்

கம்பராமாயண சாரத்திலே சேர்த்தற்குரிய சில கவிகளின் நயம் எனக்குப் புலப்படாமையால், அவைகள் சேர்க்கப்படாமல் விட்டிருக்கலாம்; அவ்வாறே சேர்த்தற்குரிய நயம் இல்லாதவைகள் சில, எனது பகுத்தறிவுக் குறைவாற் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

பொதுவாக, எல்லா நூல்களும், விசேடமாகக் கம்பராமாயணம் போன்ற ஆழமுடைய நூல்களும் படிப்பவரது இயற்கை அறிவு, கல்வி அறிவு, கேள்வி அறிவு, ஆராய்ச்சி அறிவு, அநுபவ அறிவு இவைகளுக்குத் தக்கவாறு பொருள் புலப்படுவனவாம். ஆதலால், யான் எழுதிய உரை, என் அறிவளவேயாய்ப் பல சிறந்த பொருள்களை விட்டிருந்தலும் அநேக பொருள்களைத் தப்பாகக் கொண்டிருத்தலும் இயல்பே. குற்றங்களை நீக்கிக் குறைகளை நிரப்பிக்கொள்ளுமாறு அறிஞரை வேண்டிக்கொள்கின்றேன்.

---

* The Tamilian Antiquary No. 2, A Critical Review of the Story of the Ramayana & An Account of the South Indian Castes by Mr. V. P. Subramania Mudaliar, published in 1908 by 'The Tamilian Archaeological Society', and republished of late, by the South India Saiva Siddhanta Publishing Society.

இந் நூலிலே தகுதி யின்றிச் சேர்க்கப்பட்டிருக்கின்ற தனி இன் கவிகளும் தொடர்ச்சிப்பட்ட இன் கவிகளும் இவை இவை என்றும், தகுதி யிருந்தும் சேர்க்கப்படாது விடப்பட்டவை தனிக் கவியினத்தில் இன்னவை இன்னவை, தொடர் கவியினத்தில் இன்னின்னவை என்றும் காரணத்தோடு காட்டியும், பொருள் அரும் பதவுரை விசேட வுரைகளில் உள்ள குற்றங்கள் இவை, குறைகள் இவை யென்று விளக்கியும் தயைசெய்து தெரிவிக்கும்படி அறிஞரை வேண்டிக்கொள்ளுகின்றேன்.

## நன்றியுரை

இந் நூலுக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் 'செந்தமிழ்'த் திங்கள் வெளியீட்டில் தாராளமாக இடம் அளித்தும், யான் வேண்டிக்கொண்ட காலங்களில் திருத்தங்கள் குறிப்பித்தும் உதவினவரான 'செந்தமிழ்'த் தலைமை யாசிரியர் திருநாராயணையங்காரவர்களுக்கும், உதவி யாசிரியர் T. K. ராமாநுஜையங்காரவர்களுக்கும், இந் நூலில் பால காண்டத்தைக் கவனித்துப் படித்து பல குறிப்புக்கள் எழுதி யுதவியிருக்கின்ற வண்ணார்பேட்டை வக்கீல் T. K. சிதம்பரநாத முதலியாரவர்கள், B. A., B. L., (Ex-commissioner, H. R. E. Board), அந்தக் காண்டத்திலும் அயோத்தியா காண்டத்திலுமுள்ள சில கவிகளுக்கு விசேட வுரை வரைந்து உபகரித்த தூத்துக்குடி கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியன் அவர்கள், ஆகிய இருவருக்கும், இக் காண்டத்தைச் செவ்வையாக அச்சிடுதற்கான முறைகளைக் குறிப்பிட்டும் பாட்டுப் பகுதிகளுக்கும் வசனப் பகுதிகளுக்கும் தலைப்புக்கள் எழுதியும் மற்றையோருடன் புருபுகள் திருத்தியும் உதவிய தூத்துக்குடி டிஸ்ட்ரிக்ட் முன்சீப் V. T. பழனியப்ப முதலியார், B. A., B. L., அவர்களுக்கும், புருபுகள் திருத்தி உபகரித்த ராதாபுரம் டிப்டி தாசில்தார் T. M. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள், B. A., தூத்துக்குடி வக்கீல் A. ராமமூர்த்தி ராவ் அவர்கள், B. A., B. L., சென்னைச் சர்வகலாசாலை ரீடர் S. வையாபுரிப் பிள்ளை அவர்கள், B. A., B. L., அக்கலாசாலை ஸீனியர் லெக்சரர் R. P. சேதுப்பிள்ளையவர்கள், B. A., B. L., ஆகியவர்களுக்கும் எனது நன்றியறிவு பெரிதும் உரியதாயுள்ளது.

இப் புத்தகத்தை மிக்க சிரத்தையோடு பதிப்பித்து, அரும் பத அகராதி, பாட்டு முதற்குறிப்பகராதி முதலியவைகளைச் சித் தஞ்செய்து பல வகையிலும் செவ்வையுறச் செய்த பதிப்பாசிரியர் வக்கீல் M. P. S. துரைசாமி முதலியார், B. A., B. L., அவர் களுக்கும் எனது மனமார்ந்த வந்தனங்கள் உரியன.

இந்நூல், 'செந்தமிழ்'ழில் வெளியாகி வருவதை அப்போதப் போது பார்த்து மகிழ்ச்சியுற்ற அமயங்களில் அம்மகிழ்ச்சியை எனக்குத் தெரிவித்து ஊக்கமூட்டிய உபகாரத்துடன் முகவுரை யளிக்கும் பேருபகாரமும் புரிந்துள்ள மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் சாமிநாதையரவர்களுக்கும், ஆங் கில முகவுரை அளித்து உதவிய சுவாமி விபுலாநந்தஜி மஹாராஜ் B. Sc. (Lond.) அவர்களுக்கும் யான் மிக்க கடப்பாடுடையேன்.

இந்நூலை உரிமையாக அங்கீகரித்தருளிய திருப்பனந்தாள் மடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் சுவாமிக ளவர்களுக்கு எனது அத்தியந்த வந்தனம் உரியதாகின்றது.

இந் நூலைத் தங்கள் வெளியீடாக வெளியிட்ட சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும், இதனை நன்கு பதிப்பித்த ஹிலால் பிரஸ் அதிபரவர்களுக்கும் எனது நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

வெள்ளகால் P. O.<br>தென்காசித் தாலுகா

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

# துணை நூற்பட்டி*

| | | |
|---|---|---|
| 1. | பால காண்டம்:— | இராமசுவாமி நாயுடு உரையுடன், சர்வசித்து ௵. |
| 2. | ,, | அ. குமாரசுவாமிப் பிள்ளை, த. கனகசுந்தரம் பிள்ளை அரும்பதவுரையுடன், காலயுக்தி ௵. |
| 3. | ,, | வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், அட்சய ௵. |
| 4. | ,, சுருக்கம்:— | வ. வெ. சுப்பிரமணிய ஐயர் அரும்பொருள் விளக்கத்துடன், 1917 கி. பி. |
| 5. | அயோத்தியா காண்டம்:— | வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், விபவ ௵ (1928). |
| 6. | ,, | சண்முகம் பிள்ளை உரையுடன், 1919. |
| 7. | ,, | சுப்பராய செட்டியார் உரையுடன், 1904. |
| 8. | ,, | சேஷ சாஸ்திரியார் உரையுடன், ஸர்வதாரி ௵. |
| 9. | ஆரணிய காண்டம்:— | எம். ஆர். கந்தசாமிக் கவிராயர், எஸ். வெங்கடராயலு நாயுடு, உரையுடன், 1900. |
| 10 | ,, | வை மு. சடகோபராமாநுஜாச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியார் உரையுடன், ப்லவங்க ௵. |
| 11. | கிஷ்கிந்தா காண்டம்:— | ஷை இருவர், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், விரோதிகிருத் ௵. |
| 12. | ,, | பண்டித சவரிராயர், பால ஸரஸ்வதி கிர்ஷ்ணமாச்சாரியார், மூலமும் பாட பேதங்களும். |

* பாட்டுக்களின் பாட நிர்ணயத்திற்கும் பொருள் காணுதற்கும் உதவிய நூல்களின் விவரணம். (Bibliography.)

13. சுந்தர காண்டம் :— வி. கோவிந்தப் பிள்ளை உரையுடன், விளம்பி ௵.

14. ,, வை. மு. சடகோபராமாநுஜாச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியார், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர், உரையுடன், ரக்தாக்ஷி ௵ (1924).

15. ,, ௸ இரண்டாம் பதிப்பு, ஆங்கிரஸ ௵ (1932).

16. ,, பண்டிதபி ஆர் கிர்ஷ்ணமாச்சார்யர், மூலம், கதைச் சுருக்கம், ஆங்கில முகவுரையுடன், ஸ்ரீவாணி விலாசம் பிரஸ், 1907.

17. யுத்தகாண்டம் :— வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், இரண்டு பகுதிகள், ஆங்கிரஸ ௵ (1932).

18. கம்பராமாயண அருங்கவி விளக்கம்:—கவித்தலம் துரைசாமி மூப்பனார், சர்வதாரி ௵.

19. ஏழு காண்டமும் மூலம் மட்டும்:—அ. கந்தசாமி முதலியார், தாது, இரத்தாட்சி.

20. ,, அ. சுந்தரநாத பிள்ளை, 1911. இரண்டு பகுதிகள்.

21. ,, அ. இரங்கசாமி முதலியார், 1914 இரண்டு பகுதிகள்.

22. வால்மீகி ராமாயண வசனம்:—பண்டித நடேச சாஸ்திரியார் மொழிபெயர்ப்பு.

23. கம்பராமாயண ஓலைச்சுவடி:—திருநெல்வேலிக் கவிராயர் வீட்டுப் பிரதி.

# மேற்கோள் விளக்கம்

| | |
|---|---|
| அ. கு. | அ. குமாரசுவாமிப் பிள்ளை : பாலகாண்டம் |
| இ. நா. | இராமசுவாமி நாயுடு : பாலகாண்டம் |
| உரி. நி. | உரிச்சொல் நிகண்டு |
| ஐங்குறு. | ஐங்குறுநூறு |
| ச. அ. | சங்க அகராதி |
| சிந்தா. | சிந்தாமணி |
| சூடா. | சூடாமணி நிகண்டு |
| த. அ. | தமிழ் அகராதி |
| து. மூ. | துரைசாமி மூப்பனார் : கம்பராமாயண அருங்கவி விளக்கம் |
| நாலடி. | நாலடியார் |
| பத்துப்பா. | பத்துப்பாட்டு |
| பரிபா. | பரிபாடல் |
| பிங்கல. | பிங்கல நிகண்டு |
| புற. நா. | புறநானூறு |
| புறப். வெண். மாலை | புறப்பொருள் வெண்பா மாலை |
| மணிமேகலை | மணிமேகலை |
| திரு. ச. | திருமயிலை சண்முகம் பிள்ளை : அயோத்தியா காண்டம், உரையுடன் |
| வை. மு. கோ. | வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் : அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், உரையுடன் |
| சோ. சு. | சோடசாவதானம் சுப்பராய செட்டியார் : அயோத்தியா காண்டம், உரையுடன் |
| பெருங்கதை | பெருங்கதை |
| இ. அ. | இலக்கியச்சொல் அகராதி |
| குறள் | திருக்குறள் |
| நான்மணிக்கடிகை | நான்மணிக்கடிகை |
| கந்தபு. | கந்தபுராணம் |
| திருவாச. | திருவாசகம் |
| கலி. | கலித்தொகை |
| நைடதம் | நைடதம் |
| குற்றாலத்தலபுராணம் | திருக்குற்றாலத் தலபுராணம் |
| திருமுருகாற்றுப்படை | திருமுருகாற்றுப்படை |
| திருவிளையாடற்புராணம் | திருவிளையாடற் புராணம் |
| மு. ரா. க. | மு. ரா. கந்தசாமிக் கவிராயர் |
| க. ரா. சா. | கம்பராமாயண சாரம் |
| திருமூலர் | திருமூலர் |
| சிங்கை வெண்பா | சிங்கை வெண்பா |
| திருவேங்கடமாலை | திருவேங்கடமாலை |

குமரகுருபரர்
திரிகூடராசப்பக் கவிராயர்
நளவெண்பா
கலிங்கத்துப்பரணி
தணிகைப்புராணம்
நன்னூல்
நீதிநெறி விளக்கம்
சுவர்க்கநீக்கம்
சீவகசிந்தாமணி
தாயுமானவர்
‘தமிழர் நேசன்’
Paradise Lost

குமரகுருபரர்
திரிகூடராசப்பக் கவிராயர்
நளவெண்பா
கலிங்கத்துப்பரணி
தணிகைப்புராணம்
நன்னூல்
நீதிநெறி விளக்கம்
சுவர்க்கநீக்கம்
சீவகசிந்தாமணி
தாயுமானவர்
‘தமிழர் நேசன்’
Paradise Lost

---

## படல அட்டவணை



| வரிசை எண் | பெயர் | பக்கம் | பாட்டு | |
|---|---|---|---|---|
| | | | மொத்த எண் | தேர்ந்தெடுத்த எண் |
| 1 | விராதன் வதைப் படலம் | 1 | 73 | 2 |
| 2 | சரபங்கர் பிறப்பு நீங்கு படலம் | 10 | 44 | – |
| 3 | அகத்தியப் படலம் | 12 | 59 | 1 |
| 4 | சடாயுகாண் படலம் | 18 | 48 | 4 |
| 5 | சூர்ப்பநகைப் படலம் | 30 | 143 | 19 |
| 6 | கரன் வதைப் படலம் | 70 | 192 | 10 |
| 7 | மாரீசன் வதைப் படலம் | 88 | 252 | 25 |
| 8 | சடாயு உயிர் நீத்த படலம் | 146 | 225 | 15 |
| 9 | அயோமுகிப் படலம் | 181 | 101 | 4 |
| 10 | கவந்தப் படலம் | 189 | 58 | 1 |
| 11 | சவரி பிறப்புநீங்கு படலம் | 192 | 9 | – |

# பாட்டு முதற்குறிப்பகராதி

[ எண்—பக்கவெண் ]


அதிசய 175
அலங்கார 23

ஆக்கினேன் 87
ஆண்டப்பிறை 131
ஆரவனென்ன 97
ஆரவாழ்க்கையின் 83
ஆவுக்காயினு 13
ஆற்றவெங் 154

இங்கொர் 80
இந்திரன் 109
இருவினை 153
இன்னபோ 89

ஈசனுர் 102

உயரும் 57
உளைவுறு 149

எவன்செய 38
எழுதரு 44
என்வயி 96
என்றவ 152
என்றூரம் 172
என்னைத்தரு 186

ஏக்கமிங் 82
ஏற்றவளை 61

ஒளிறுவேற் 71

ஓதிம 33

காந்தில 40
கரனைய 118
கலைமான் 141
கற்றையஞ் 37

காடுகொண்ட 73
காமர 99

குலைவுற 156

கைகளற்றுகு 190
கைத்தசிந்தையன் 167

சிந்தையி 36
சிவனுமலர்த் 64
சிற்றிடைச் 120

செம்புகாட்டிய 81

தந்தாதையரைத் 170
தயிருடைக்கு 25

தாமுறு 42

தெவ்வுலகத்துங் 103

தேர்தந்த 113

தோளையே 105

நிருதர்த 46
நில்லாவுலகின் 142

பண்புற 48
பரவலருங் 19

பாக்கியத்தா 174
பாகத்தி 110

பிரிந்த 183
பிரிபவர் 188
பிள்ளைபோற் 112

புவியினுக் 30
புன்சொற் 165

பூப்பொதி 148
பூவராவு 79

பெருங்குலா 68

பேதியாது 1

பொருதிறத் 52
பொன்மய 123
பொன்னுருவப் 66
பொன்னோக்கியர் 160

மங்கையர் 90
மஞ்சொக்கு 100
மண்ணகங் 178
மருவினிய 27
மருவொன்று 47

மாண்டேனே 171
மாரருள 93
மாரியாக்கிய 74

முருடார்ங் 132

யாமது 181

வச்சையா 77
வன்பணை 124

வாணிலை 39

விதியது 122
வில்லிய 34
வில்லொக்கு 106

வெஞ்சுற்ற 139

வேதங்க 5

# அரும்பத அகராதி

[எண்—பாட்டெண். பதப் பொருளைப் பாட்டுப் பொருட் கீழ்ப் பார்க்க.]


அகம், 8
அங்கம், 45
அடுத்து, 24
அடுதல், 27
அணங்கு, 42, 70
அணி, 8
அதிசயம், 75
அந்தகாரம், 57, 58
அந்தணன், 49
அநங்கன், 12, 44
அபிமானம், 78
அம்மா, 41
அமுது, 5
அயர்த்தல், 55
அயர்தல், 22
அயல், 6, 35
அயிர், 6
அயில், 28
அரவம், 65
அரவிந்தம், 19
அரி, 27
அருமை, 16, 30
அல்லி, 10
அலக்கண், 66
அலகு, 67
அலங்காரம், 5
அலச, 13
அலமரல், 22
அலர்தல், 4
அவம், 13
அவி, 8
அழலல், 23
அளகம், 43
அளாவி, 8
அளித்தல், 11
அறுகுறை, 28
அறைதல், 2

ஆக்கிய, 29
ஆகம், 49
ஆசை, 60
ஆடுதல், 28
ஆண்டு, 56
ஆம், 16, 30, 68
ஆர, 35
ஆழ், 5
ஆழி, 41
ஆற்ற, 66
ஆற்றல், 55
ஆறு, 44

இகல், 23, 34
இடர், 80
இடைதல், 31
இணை, 15, 33
இது, 19
இம்பர், 51
இயல், 10
இரவலர், 4
இருமை, 15
இழுதை, 44
இறுதல், 12
இறைவன், 39
இன்று, 73

ஈர்த்தல், 57
ஈர்தல், 58

உகுதல், 59, 81
உடுபதி, 4
உந்தி, 11
உய்த்தல், 70
உயிர்ப்பு, 79
உரன், 52
உரு, 19, 21, 65

உரும், 64
உருவம், 1, 25
உலவை, 28
உழக்கல், 23
உழை, 9
உழைத்தல், 22
உளைவு, 63
உற்ற, 40
உற்றது, 27
உற, 7, 20, 33
உறு, 26, 63
உறுதல், 81
உறைதல், 3
உன்னல், 37

எண், 20
எதிர், 66
எயிறு, 18, 63, 64
எல்வி, 10
எவன், 13
எழுதல், 17, 40
ன், 4

ஏது, 72
ஏமம், 16
ஏலல், 73
ஏழைமை, 42
ஏற்ற, 23
ஏற்றம், 66
ஏறு, 38

ஐ, 43

ஒதுங்கல், 9
ஒரு, 21, 24
ஒருவுதல், 18
ஒழுக்கம், 8
ஒளிறுதல், 27
ஒன்றுதல், 19

ஓதம், 21
ஓதி, 43
ஓதிமம், 9
ஓளி, 64

கங்குல், 77
கடிதல், 52
கண்ணோட்டம், 58
கணை, 24, 29
கதழ்தல், 28
கதிர், 14, 76
கந்து, 57
கமலம், 10
கரத்தல், 15
கரபத்திரம், 57
கரம், கரவு, 4
கலாம், 26
கலை, 60
கழல், 25, 80
கள், 42
களம், 70
கற்பம், 78
கற்றை, 12
கனிந்த, 42

காடு, 28
காத்தல், 16, 62
காமம், 68
காமர், 77
காமரம், 42
காய்தல், 12
கார், 28
காறும், 12
கானம், 10

கிள்ளை, 50

குமரன், 61
குருதி, 81
குலா, 26
குலிகம், 41
குலிசம், 24
குலைவு, 66
குவளை, 10
குழை, 70, 79
குளித்தல், 32, 33
குளிறுதல், 27
குறி, 58

கூசுதல், 30
கூற்றம், 66
கூற்று, 6

கெழுதல், 23, 65

கைத்தல், 70

கொச்சை, 30
கொழுமை, 32

கோல், 30
கோள், 27

சசி, 48
சமம், 34
சவி, 8

சான்றோர், 73

சித்தர், 38
சிந்தை, 11, 53
சிரம், 45
சிறுமை, 20

சுடர், 46, 58
சுற்றம், 59

சூடு, 28
சூல், 23

செய்தல், 13
செயிர், 6

சேடி, 42
சேண், 14
சேர்தல், 38

சையம், 81

சோர்தல், 22
சோரி, 29

தகை, 3
தகைமை, 44, 45
தட, 10, 33
தடிதல், 6
தண்மை, 5
தந்த, 51
தரம், 48
தருதல், 15
தளை, 63
தன்மை, 44, 55
தனயர், 71

தாதை, 71
தார், 51
தாரம், 73

திகைப்பு, 31
திணை, 8
திரு, 19
திருகல், 23
திறம், 21
திறம்புதல், 6
திறல், 38

தீர்தல், 43
தீர்ந்தது, 11

துமித்தல், 73
துறை, 23, 37
துன்னல், 37

தெரிந்த, 77
தெரியல், 77
தெவ், 45
தெவ்வர், 35
தெறுதல், 24

தேம்பு, 2, 77
தேற்றுதல், 77

தொடர்தல், 28
தொன்மை, 22, 29

நகுதல், 18
நகை, 77
நண்பு, 5
நயனம், 11
நலம், 5, 18, 32
நலி, 6, 55
நவம், 13
நளினம், 13
நன்மை, 48, 68

நாட்டம், 13
நாண், 14
நாமம், 53
நாயகன், 5, 14
நாறுதல், 44

நிச்சயம், 30
நிமிர், 1
நிரத்தல், 42
நிரம்புதல், 51
நிருதர், 29
நிலை, 5, 61

நீத்து, 4, 77
நீர், 51

நுகர்தல், 32
நுடங்கல், 10
நுதல், 3

நெடிது, 20
நெடுமை, 4
நெறி; 8

நேயம், 5
நேர், 47, 61
நேர்தல், 71

நோக்குதல். 68
நோற்றல், 13

பகுவாய், 69
பங்கயம், 49
படி, 19
படிவம், 2
படுதல், 27
படைக்குநர், 20
பண்பு, 4, 20
பணம், 45
பணை, 56
பயந்தது, 18
பயிலல், 80
பரம், 15
பரவல், 4
பருவரல், 80
பழுது, 17
பனி, 4

பாக்கியம், 4, 74
பாகம், 49
பாங்கர், 10

பிடி, 27
பிணி, 44
பிணிப்ப, 44
பிரிதல், 7
பிழை, 22
பிழைத்தல், 50
பிள்ளை, 50
பிளிறல், 27
பிறங்கல், 20, 29
பிறழ்தல், 1

புக்கு, 7
புகல், 32, 69
புகுந்தது, 40
புரந்தரன், 15, 31
புரை, 29
புல், 14. 47
புல்லுதல், 32
புலம், 8
புலன், 68
புவனம், 24
புழை, 25
புன்கண், 68
புன்மை, 55, 69, 72
புனல், 76

பூ, 31
பூண், 67
பூத்தல், 9
பூதம், 2
பூவை, 20

பெண்மை, 17
பெயர்த்தும், 12
பெயர்தல், 22
பெற்றி, 27, 59

பேதம், 1
பேதித்தல், 1
பேர், 29

பொதி, 62
பொருட்டு, 40
பொருதல், 21, 25, 79
பொருள், 8, 25
பொலம், 79
பொழுது, 17
பொறி, 54
பொறுத்தல், 72
பொறை, 4
பொன், 41, 49, 79
பொன்று, 31

போதகம், 9
போதல், 34

மகுடம், 64
மஞ்சு, 43
மடுத்தல், 35
மயம், 55
மரு, 19
மருங்கு, 10, 25
மருங்குல், 14
மழை, 43
மறுக்கு, 59
மன், 61

மா, 27
மாகம், 49
மாயம், 72
மாரன், 39
மாரி, 29
மால், 76
மாற்றவள், 23

மிசை, 14

மீ, 14, 28

முடிதல், 36
முந்திய, 11
முந்து, 71
முரலும், 42
முருடு, 58
முளைத்தல், 63
முற்றுதல், 62
முறுவல், 9, 63
முறைமுறை, 37
முனிதல், 62
முனை, 31

வச்சை, 30
வஞ்சகர், 70
வடி, 29
வடித்த, 18
வடிதல், 41
வதிதல், 55
வயங்குதல், 14
வயின், 29, 40
வரி, 23
வரித்தல், 66
வரிதல், 18
வரை, 29, 76
வல், 73
வல்லி, 10
வலம், 55
வலயம், 6
வழங்குதல், 42
வழி, 68
வழுத்துதல், 46
வளை, 23, 30
வற்று, 47
வன்மை, 16
வனம், 29

வாக்கு, 36
வார், 51 80
வாரி, 70
வாழ்வு, 4
வாள், 14, 18
வாளா, 17
வாளி, 55, 73
வான், 3

விஞ்சை, 37
விடம், 56
விதி, 54
விரவுதல், 81

விரிஞ்சன் 1
விலங்கு, 5

வீங்கு, 10

வெகுளி, 64
வெம், 34, 45, 59
வெம்புதல், 33
வெரிந், 33
வெறி, 35

வேதியர், 1
வேய், 40
வேனில், 56

# கம்பராமாயண சாரம்

## ரணிய காண்டம்

[ இராமன் தண்டகாரணியத்திற் சேர்வது முதலிய செய்திகளைக் கூறுவது ]

### 1. . விராதன் வதைப் படலம்

[ இராமன் விராதனைக் கொன்றதைக் கூறுவது ]

கடவுள் வாழ்த்து

**1.** பேதி யாதுநிமிர் பேதவுரு வம் பிறழ்கிலா
ஓதி யோதி யுண ருந்தோறு முணர்ச்சி யுதவும்
வேதம் வேதியர் வி ரிஞ்சன் முத லோர் தெரிகிலா
ஆதி தேவரவ ரெம் மறிவி னுக் கறிவரோ

கொண்டுகூட்டு* : *பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலாத(வரும்), ஓதி ஓதி உணரும் தொறும் உணர்ச்சி உதவு(பவரு)ம், வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலாத(வருமான) ஆதி தேவர் எம் அறிவினுக்கு அறிவு (ஆனவர்).*

பொருள் : *சூக்குமமாயிருந்த ஐம்பெரும் பூதங்களை அவற்றின் தன்மை வேறுபடாமலே தூலமாகத் தோன்றி வளருகின்ற பலவேறு வகைப்பட்ட சராசர வடிவங்களாகக் காரியப்படச் செய்து, அவ் வடிவங்களிலே தாம் கலந்திருந்தும் தமது தத்துவாதீதத் தன்மை மாறுபடாதவரும், சமய நூல்களை மேலும் மேலும் படித் தறியுந்தோறும் மெய்யுணர்வை அதிகமதிகமாக அளித்தருள்பவரும், வேதங்களும் வேதியரும் வேதன் முதலோரும் அறியமாட்டாதவருமாகிய ஆதிபகவனே எமது அறிவுக்கு அறிவானவர்.*

பேதியாமை - '*அனலின் வெம்மையும், நீரின் தண்மையும் போல அவ்வவற்றின் தன்மை அவ்வப்பொருள்களினின்றும் வேறுபடாதிருத்தல்.*' —வை. மு. கோ. '*பேத உருவம் என்றது - தேவர், மக்கள், விலங்கு, புள்,*

---

* *அந்துவயம் - உரை முறை* (Prose order).

ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்று சொல்லப்பட்ட சராசர ரூபம்'.—வை. மு. கோ. 'கற்றதனாலாய பயன்' என்ற குறளுரையிற்போல, 'ஓதி ஓதி' என்பதன் முன் 'நூல்கள்' சொல்லெச்சமாக வருவித்துப் பொருள் கூறப்பட்டது. உணர்ச்சி, மெய்யுணர்வாகிய தத்துவ ஞானத்தைக் குறித்தது. வேத மென்பதற்குச் செய்யவேண்டிய விதிகளையும் விலக்கவேண்டிய விலக்குக்களையும் அறிவிப்ப தென்பது பொருள். வேதியர், அவை விதிக்கின்ற நெறிக்கண்ணே ஒழுகுவோர். விரிஞ்சன் - பிரமன். பிறழ்கிலா(த), உதவும், தெரிகிலா(த) ஆதிதேவரென இயைக்க. எம், ஈண்டுத் தனித் தன்மைப்பன்மை; கவிஞர் இங்ஙனங் கூறுதல் மரபு. இனி, உலகினரையுந் தம்மொடு கூட்டி யுரைத்தா ரெனினும் அமையும். பிறழாத என்னும் பொருளுடைய 'பிறழ்கிலாத' என்பதில் 'கில்' பொருள் குறியாத இடைச் சொல்லாகவும், தெரியமாட்டாத எனப் பொருள்படும் 'தெரிகிலாத' என்பதில் 'கில்' ஆற்ற லுணர்த்தும் இடைச்சொல்லாகவும் நிற்கின்றமை காண்க. 'அவர்', பகுதிப்பொருள் விகுதி*.

'ஓதி ஓதி உணருந்தொறும் உணர்ச்சி உதவும்' என்பதை 'வேத'த்துக்கு விசேடணமாக்கிப், 'பலமுறை பாராயணஞ் செய்து ஆசார்யோபதேசத்தாலே உளங்கொண்ட பொருள்களைச் சிந்தித்துத் தெளியும் பொழுதெல்லாம் மெய்யுணர்வை மேலும் மேலும் கொடுக்கின்ற வேதம்' என்றும் —(மு. ரா. க.), 'ஆதிதேவ'ருக்கு அடையாக்கித், 'தமது திருநாமங்களைப் பல முறை உச்சரித்துத் தியானஞ்செய்யும் பொழுதெல்லாம் தத்துவஞானத்தைக் கொடுக்கும் ஆதிதேவர்' (—வை. மு. கோ.) என்றும் பொருள் கூறுவர்.

மேலே எடுத்துக் கூறிய உரைப்படி இரண்டாம் அடியை யன்றி முதலடியையும் வேதம் என்பது கொண்டு முடிவதாக்கி, '(மூலமான தான் தனது இயற்கை) மாறுபடாமல் (மேலே கிளைத்து) வளர்ந்த (சாகைகளான) பலவகைப்பட்ட (அங்க) வடிவங்கள் (தன்னுடனும் அவை தம்முள்ளும்) மாறுபடுதல் இல்லாத வேதம்' என்று பொருள் கொள்ளலாம்.

உயிர்களின் அறிவு தானாக அறியாமல் இறைவன் அறிவிக்க அறிவதாதலால் இறைவனை 'எம்மறிவினுக்கறிவு' என்றார்.

'எம் அறிவினுக்கு அறிவு என்றது "பத்துடை அடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்றவாறு பத்தராகிய எமக்கு அறியப்படுமவனென்றபடி. அறியப்படு பொருளை "அறிவு" என்றது, ஆகுபெயர். அரோ, ஈற்றசை.'—வை. மு. கோ. (க)

---

* க. ரா. சா. பாலகாண்டம், முதற் பாட்டின் குறிப்பைப் பார்க்க.

## இராமன் தண்டக வனத்தைச் சார்தல்

[. *பரதன் முதலியோர் விடைபெற்றுச் சென்ற பின்பு, இராம லக்குமணர் சீதையுடன் அத்திரி முனிவனது ஆச்சிரமத்தை அடைந்து அவனை அடிபணிந்தார்கள். அவன், தனது உற்றா ரனைவரும் ஒருங்கே உற்றாற்போல, உவகை மீக்கூர்ந்து, 'நீங்கள் இவ்வளவு தூரம் வந்து காட்சி அளித்தது, இங்கே யுள்ள முனிவர் களுக்கு எளிதிற் கிடைப்பதன்று; அது, எங்களில் யாவர் செய்த தவப்பயனோ, அறியேம். உங்கள் அருமையான வருகையானது, இமையோர் முதலிய எல்லா உலகத்தோரும் ஒருங்கு வந்ததை ஒக்கும்' என்று மனமுருகி முகமன் மொழிந்தான். அன்று அந்த ஆச்சிரமத்தில் அமர்ந்து, அங்கே திரிமூர்த்திகளையும் சிசுக்களாகச் செய்த அரிய கற்புடைய அநசூயை ஆகிய அம் முனிவனது மனைவியால் ஆடையாபரணாதிகளைக்கொண்டு அலங்காரஞ் செய்யப் பெற்றிருந்த சீதையுடன் மறுநாள் இராம லக்குமணர் தண்டக வனத்தைச் சார்ந்தார்கள்.* ]

## விரா்தன் எதிர்ப்படல்

[ *அவர்கள் அந்த வனத்தில் அடிவைத்த உடனே, விராத னென்னும் இராக்கதன் எதிர்ப்பட்டான். அவன் மண்ணிலுள்ளா னெனினும், விண்ணிலுள்ள தேவர் கண்ணினும் கருத்தினும் உள்ளா னென்னும்படி, அவர்களுக்கு அவனிடத் துண்டான அச்சத்தினால் அவர்கள் எப்போதும் அவனையே நெஞ்சில் நினைந்து அவன் உருவெளித்தோற்றத்தை அகலாது கண்ணிற் காணுவா ராயினர்.* ]

## விராதன் போர்

[ *அவன், இராம லக்குமணரை நோக்கி 'நில்லுங்கள், நில்லுங் கள்' என்று சொல்லி, அதை அவர்கள் கேட்குமுன், சீதையை எடுத்து விண்வழிச் சென்றான். அவர்கள் சீறித், தோளிலிருந்த வில்லை இடக் கையிற் பிடித்துத், தூணியிலிருந்த அம்பை வலக் கையில் எடுத்துப் போர் செய்யப் புகுந்து, 'அடா! இது வஞ்சனை! திரும்பு!' என்றார்கள். அவன், 'உங்கள் அம்பு என்னை என் செய் யும்? யான் அம்பில்லாமலே எல்லா உலகங்களையும் வெல்லுவேன்.*

எளிதிற் கொல்லக்கூடிய உங்களைக் கொல்லாது விட்டு உங்களுக்கு உயிர் தந்தேன். இவளை விட்டுப் போங்கள்' என்றான். இராமன், 'இவன் போரென்ப தறியான்; தெரிவிப்பேன்' என்று, வில்லை வளைத்து, நாணேற்றிக் குணத்தொனி செய்தான். கரிய இராமன் தெறித்த நாணொலி கார்மேகம் இடித்த இடிபோலக் கேட்ட விராதன் 'இவன் எளியனல்ல' னென்றெண்ணிப், பூனை வாயிற் புகுந்த கிளிபோலக் கதறும் சீதையைப் பூமியில் விட்டுக், கோபத்தோடு கொடிய சூலாயுதத்தை எறிந்தான். அதனை இராமன் ஓரம்பால் இரண்டு துண்டங்களாகக் கண்டித்து விழுவித்தான். அவன் மலைகளை வேரோடு பேர்த்து ஒன்றின்பி னொன்றாய் விசையாக எறிந்தான். அவைகள், இராமன் விட்ட அம்புகளால் தாக்குண்டு திரும்பி விராதன் மீது விழ, வீழ்ந்த இடங்களெல்லாம் ஆழ்ந்த காயங்களாயின. மலைகளாற் பயனில்லையென்று ஒரு மராமரத்தை ஒடித்து இராமனைப் புடைக்க எதிர்த்து வந்தான். அதனை இராமன் ஓர் அம்பால் அறுத்தெறிந்து அவன் தோளிலும் மார்பிலும் அழுந்தும்படி பல அம்புகள் விட்டான், முள்ளம்பன்றி தன் உடலில் முளைத்த முள்ளுகள் பல திசைகளிலும் சிதறும்படி உதறுஞ் செயல்போல, அவன் தன் உடம்பை விசையாகக் குலுக்கி அவ்வம்புகளைத் தெறித்தோடச் செய்தான். அழுந்த விட்ட அம்புகள் அவ்வாறாகக் கண்ட இராமன், அவன் உடம்பை ஊடுருவிப் போகும்படி வேறு சரங்கள் விட்டான். அதனால் அருவி வழியும் பெரிய மலைபோலக் குருதி சோர நின்ற அவன் உணர்வு சோரக் கண்டு, இராமனும் இலக்குமணனும், 'இவன் கைகளிருந்தால் இன்னும் போர் புரிவானாதலின் அவைகளை வெட்டி விடுவ' மென்று, தம் வாளை யுருவிக் கொண்டு அவன் தோளி லேறினர். அப்போது அவனுக்கு உணர்வு திரும்பிவர, அவர்களைச் சுமந்தபடியே சுற்றித் திரிந்தான். அவனது சோரி சோரும் பார மேனி மேரு நேர, வீர ரிருவரும் மேரு மீது சாரி போகும் சூரிய சந்திர ரொத்தனர்.

சீதை, சேவல் பிடியுண்ட அன்னம் போலப், புலம்பி விழுந்து, திரும்ப எழுந்து, தொடர்ந்து நடந்து, 'என்னை உண்டு அவர்களை விடு' என்று இரந்தாள். அவள் துன்புறுதலை இலக்குமணன் கண்டு, 'சீதை துயர்கூர நீ விளையாடலாமோ! இவனை விரைவிற் கொல்லல் வேண்டு' மென, இராமன் அவனைக் காலால் உதைக்க

*அவன் கீழே விழுந்தான். இரு வீரரும், அவன் விழும்போது அவன் தோள்களை வெட்டிவிட்டுத் தூரமாகக் குதித்தார்கள். அவன் கடுங் கோபங்கொண்டு, இரண்டு கோள்களை ஒரு பாம்பு அடுத்தாற்போல, அவர்களை அடுத்தான். இராமன் 'இவனைப் புதைத்துவிடுவோ' மென, இலக்குமணன் குழிதோண்ட, அந்தக் குழியில் விழும்படி, அன்பர் கருதியதைக் கருதியவாறே அருளும் திருவடிகளால், இராமன் விராதனை உதைத்து வீழ்த்தினன். வீழ்த்தவே, அவன், தன்னை இராக்கதனாகுமாறு குபேரன் கொடுத்த சாபம் தீர, முட்டையுள்ளிருந்து பறவை வெளிப்படல் போல, இராக்கத சரீரத்தினின்று திவ்விய தேகியாய் வெளிப்பட்டு, முன்னைப் பிறவியின் நினைவு முற்றும் உறப்பெற்று இராமனைத் தோத்திரஞ் செய்வானானன்.* ]

## விராதன் இராமனைத் தோத்திரித்தல்

**2.** வேதங்க ளறைகின்ற வுலகெங்கும் விரிந்தனவுன
பாதங்க ளிவையென்னிற் படிவங்க ளெப்படியோ
ஓதங்கொள் கடலன்றி யொன்றினோ டொன்றோவ்வாப்
பூதங்க டொறுமுறைந்தா லவையுன்னைப் பொறுக்குமோ

கொண்டுகூட்டு: *'உன் பாதங்கள், வேதங்கள் அறைகின்ற. இவை உலகு எங்கும் விரிந்தன என்னில், படிவங்கள் எப்படியோ! ஓதம் கொள் கடல் அன்றி ஒன்றினோடு ஒன்று ஒவ்வாப் பூதங்கள் தொறும் உறைந்தால், அவை உன்னைப் பொறுக்குமோ!'*

பொருள்: *'(என்மேல் ஏறியும் உதைத்தும் என்னைத் தீண்டியதனால் என்னைக் கடைத்தேறச் செய்த) உனது பாதங்கள் வேதங்களால் துதிக்கப்படுகின்றன. இப் பாதங்கள் (இப்போது இவ்வளவு சிறியனவாய்த் தோன்றிடினும், முன் நீ திரிவிக்கிரமாவதாரம் செய்தருளிய காலத்தில்) உலகங்களெல்லாம் பரவி, அவைகள் அனைத்தையும் பொத்தி மறைக்கும்படி அவ்வளவு பெரிய பரிமாணமுடையனவா யிருந்தன என்றால், அப்படிப்பட்ட பாதங்களை அவயவமாக உடைய உனது முழுத் திருமேனி எப்படி (எத்துணைப் பரிமாணமுடையது) என்பேன்! (நீ வெளிப்படையாய்க் கடலிலே பள்ளிகொண்டு உறைகின்றாய்.) அந்தக் கடல் எதன் அமிசமோ, அதுவாகிய அப்பு அன்றிப் பிருதிவி முதலிய*

மற்றைப் பூதங்கள் தோறும் கரந்து உறைகின்றாய். அப்படி உறைந்தால், அப் பூதங்கள் உன்னைத் தாங்க வல்லனவோ! (உண்மையிலே தம்மைத் தாங்கும் கோபுரத்தைத் தாம் தாங்குவனவாகத் தோன்றும் பிரதிமைகள் போலப் பூதங்கள் உன்னைத் தாங்குவனவா யில்லாததனோடு உன்னால் தாங்கப்படுவனவா யிருக்கின்றன; அப்படியிருக்கவும், அவைகள் உன்னைத் தாங்குவனவாகத் தோன்றுகின்றனவே; ஏனெனில், அப் பூதங்களின் பெயரைத் தாமுங் கொண்டனவாய்ச், சடையாற் செய்யப் பட்டு "விநோதமாகக் காட்டப்படும் சடைப் பூதங்களினுட் புகுந்த மனிதனே அவற்றைத் தாங்கிச் செலுத்துதல் போல, ஐம் பெரும் பூதங்களினுள் உறைகின்ற நீயே அவற்றைத் தாங்கு கின்றா யென்பது'' '.

அறைதல், இங்கே புகழ்தல். சொல்லலும், அதன் பரியாய பதங்களாகிய உரைத்தல், பகர்தல் முதலியவைகளும் புகழ்தல் என்று பொருள் படப் பாட்டுக்களில் வருதல் பெருவழக்கு.

'வேதங்கள் அறைகின்ற' என்பது 'வேதங்களால் அறையப்படுகின்றன' என்ற பொருளில் வந்தது, 'நெடுமாற னடித்தார் அடிமாற நடித்தார்' என்னும் மடக்கில் 'நெடுமாறன் அடித்தார்' என்பது 'நெடுமாறனால் அடிக்கப் பட்டார்' என்ற பொருளில் வந்ததுபோல. 'வேதங்களால்' என்பது ஆல் உருபு தொக்கு 'வேதங்கள்' என வந்தது. 'அறையப்படுகின்றன' (அறை அ படு கின்று அன் அ) என்பது அகரச் சாரியையும் படு விகுதியும் அன் சாரியையும் பெறாது 'அறைகின்ற' என நின்றது. 'பாதங்கள் இவை' என்பது 'இந்தப் பாதங்கள்' என்று பொருள்படும். 'தனது அருகிலிருப்பது பற்றி "இவை" என்று சுட்டினான்'.—வை. மு. கோ. படிவம் - உடல். 'படிவங்கள்' என்பதில் 'கள்' பன்மை விகுதி யன்று, அசை: 'கைப்பொருள் கொடுத்தும்' என்ற சிந்தாமணிப் பாட்டில், 'பொய்ப்பொருள் பிறகள்' என்பதில் 'கள்' அசையாக நிற்றல் காண்க. ஓதம் - அலை; ஈரம்; வெள்ளம்.

'பூதங்கள் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. நிலம் — நிலையாயிருத்தலும், கந்தமுடையதாதலும்; நீர் — பாய்ந்தோடுதலும், குளிர்ந்த பரிசமுடையதாதலும்; தீ — மேல்நோக்கி எரிதலும், சுடும் பரிசமுடையதாதலும்; காற்று — பத்துத் திசைகளிலும் வீசுதலும், உருவமின்றிப் பரிசமுடையதாதலும், விசும்பு — எங்கும் பரவி யிருத்தலும், சப்த குணமுடையதாதலுமாகிய தன்மை வேறுபாடுகளைப்பற்றி, "ஒன்றினோடொன்றொவ்வாப் பூதங்கள்" என்றான்.'—வை. மு. கோ.

இக் காண்டத்தின் முந்திய இரண்டுரைகாரரும் 'அறைகின்ற' என்பதை வினைமுற்ருகக் கொள்ளாமல் பெயரெச்சமாகக் கொண்டார்; அவ்வாறு கொண்டு, அதனை நேராகச் சொற்கிடக்கை முறைப்படி 'உலகு' என்பதனேடு பொருத்தினல், பொருள் சிறவாதுபோதல் கருதி, மாருகப் 'பாதங்கள்' என்பதனேடு வலிந்து பொருத்திப் பொருள் செய்தார்: அவர்கள், 'படிவம்' என்பதற்கு 'அவயவம்' என்று உரை கூறினர்; அதற்கு அப்பொருள் அகராதிகள் நிகண்டுகள் முதலியவைகளில் காணப்படவில்லை; படிவத்தை அவயவத்துக்கு ஆகுபெயராகக் கொண்டார் போலும். அப்பொருள் சிறந்ததாகத் தோன்றவில்லை.

இந்த உரைக்கும் முந்திய இரண்டுரைகளுக்கும் உள்ள எல்லா வேற்றுமைகளையும் தெரிந்துகொள்ளும்படி ஒன்ருெடொன்று பொருளொற்றுமையுடைய அந்த உரைகளின் பொழிப்பை இதன் கீழே தருகின்றேன்:—

'எல்லா வேதங்களாலும் துதிக்கப்படுகின்ற இந்த உனது திருவடிகளே உலக முழுதும் பரந்தன வென்ருல், மற்றைத் திருவவயவங்கள் எத்தன்மையனவோ? குளிர்ச்சியைக் கொண்ட கடலில் மாத்திரமே யல்லாமல், ஒன்ருேடொன்று தம்மில் ஒத்திராத மற்றைப் பூதங்களிலும் (நீ) வாசஞ் செய்தால், அந்தப் பூதங்கள் உன்னைத் தாங்க வல்லனவோ? (வல்லனவல்ல)'.

விராதன், யாருடைய பாதம் பட்டதனல் தன் சாபம் நீங்கிப் பூர்வ சென்ம ஞானம் வரப்பெற்ருனே, அந்த இராமனை நோக்கி, எங்கு முள்ள பரம்பொருள் அவனிடம் முனைத்து நின்று அவன் பாத பரிசத்தால் தனக்குச் சாப விமோசனஞ் செய்தருளியதை நன்றியறிவுடன் நினைந்து, தனது சாப நீக்கத்துக்கு நேரான ஏதுவாகிய அந்தப் பாதங்களை அன்பொடு நோக்கி, அப்பாதஙகளே, முன் திரிவிக்கிரம மூர்த்தியின் பாதங்களாய் மண்ணையும் விண்ணையும் அளந்த காலத்தில் அவை முழுதும் வியாபித்தமையை நினைவு கூர்ந்து 'உலகெங்கும் விரிந்தன உன் பாதங்கள்' என்ருன்.

அவ்வாறு வியாபித்த பாதங்களை நினையவே, அவற்றை உறுப்புக்களாக உடைய அவற்றினும் பெரிய உறுப்புக்கள் பலஉடைய முழு உடலம் எவ்வளவு பெரிதா யிருக்குமென்று பாவிக்கப் புகுந்து, பாதங்கள் முற்றப் பாவிக்க முடியாதனவாயினும் ஒருவாறு பாவிக்க முயலவாவது இயலுவனவா யிருந்தவாறு, அவ் வுடலம் எவ்வாறும் பாவிக்க முடியா திருந்ததை உணர்ந்து, அது இப்படிப்பட்ட தென்று எண்ணவும் இயம்பவும் இயலாத தென்பது குறிக்க, 'படிவங்கள் எப்படியோ!' என்ருன்.

விராதன், மெய்யுணர் வெய்தியபோது, தனக்குச் சாபநிக்கிரகஞ் செய்த பாதங்களை முதற்கண் நினைத்தல் இயல்பு. அவ் வியல்புபற்றிக் கம்பர்

விராதனை அப் பாதங்களைத் துதித்தலை முதற்கட் செய்வா ரூக்கினர். ஆக்கியவர், அப் பாதங்களை அவன்முகமாகச் சிறப்பிப்பாராக, பாதங் களுக்குப் பிராச மென்னும் எதுகையாகவுள்ள 'வேதங்கள்' மனத்தெழ, 'வேதங்கள்' என விராதனது தோத்திரப் பாட்டுக்களில் முதலாவது பாட்டைப் பாடத் தொடங்கி, 'வேதங்கள் அறைகின்ற' என அப்பாதங்களை விசேடித்து அவ் விசேடணத்தால் நிரப்பியது போக எஞ்சிநின்ற முதலடிப் பகுதியை, அப் பாதங்களின் மகத்துவத்தைப் புலப்படுத்தும் செயலாகிய 'உலகெங்கும் விரிந்தன' என்ற விவரணத்தால் நிரப்பியிருக்கின்ரு ரெனப் பாட்டுப் பாடும் வழக்கமுடையார் பாவனையிற் படுமாறு இப் பாட்டின் தொடக்கம் இருத்தல் காண்க.

ஊன்றிநோக்கு மிடமெல்லாம் இவ்வாறு சிறந்த இயற்கையான பொருத்தமுடையனவாகக் கம்பர் கவிக ளியற்றியிருத்தலைக் காண்பார், அவர் உலக கவிகளுள் உயர்ந்த மகாகவிகளுட் சிறந்த பரம மகா கவி யெனற்பால ரெனப், பலமொழிப் பயிற்சியுடைய சில கம்பராமாயண ஆராய்ச்சியாளர் சாற்றுதற்குத் தக்க காரணங்கள் உளவெனக் கருதுவார். (உ)

[ 'முதலை காலைக் கௌவ, "மூலமே!" யென்றழைத்த மும் மத யானைக்கு முன் போந்து காத்த மூர்த்தி நீயே அன்ரே! தக்க துணை வேறின்றித் தனக்குத்தானே துணையாய்த் தருமத்தைக் காக்குந் தயாபரனே! சருவ சமயங்களுக்கும் அவரவர் ஆராதிக் கும் தெய்வங்களை அதிட்டித்து நின்று அத் தெய்வங்களின் வாயி லாக அருளுகின்ற சமயாதீத தற்பரனே! அத் தெய்வங்கள் உன்னலன்றித் தாமே செய்யக்கூடிய தொன்றுண்டோ! பிரமாதி தேவர் முதலிய எல்லா உயிர்களுக்கும் தாயுண்டு, உனக்குத் தாய் உன்னையன்றி யுண்டோ! நீயே மும்மூர்த்திகளுக்கும் மூலமான முதற் பொருள்!

'உலகத்துள்ள எல்லாச் சமயங்களும் உன்னையே பொரு ளாகக்கொண்டும் உன்னை அறியாதன. எல்லாச் சமயங்களும், மேலான வீட்டு நிலைக்களமாகிய உன்பாற் செலுத்தும் சோபானங் கள். அவ்வம் மதாநுட்டானங்கள் அவ்வச் சோபானப் படிகள். நீ சமயாதீதன் (உன்னை அடைந்தவர் சமயங்கடந்தவ ரென்ற படி). அந்தச் சமயங்கள் அறியாதவாறு அவைகளுக்கு வேறு ஒளியாநின்ருய்; வெளியாய் நின்ருல், தீங்குண்டோ? இந்த மாயா லீலை யேனோ?

'கன்றுகள் தாய்களை அறியும்; தாய்கள் கன்றுகளை அறியும்; அவ்வாறாகத், தாயாகிய நீ கன்றுகளாகிய எல்லா உயிர்களையும் அறிந்திருக்க, அவைகள் உன்னை அறியாதிருத்தல் ஏனோ? இதுவும் உன் மாய விளையாட்டே.

'எல்லாத் தேவர்களும் தத்தம் வினை நீங்கத் தவ முயலா நிற்ப, நீயோ நீங்குதற்குரிய வினையில்லா யென்பது விளங்க உறங்காநின்றாய். உறங்கினும் உணர்வு நீங்காயா யுள்ளாய்!

'உன் தேவியருள் நிலமகளை ஆதிசேடனாகத் தலையால் தாங்கினாய்; பன்றியாக எயிற்றின்* மேலேந்தினாய்; கண்ணனாகக் கனிவாயால் விழுங்கினாய்; திரிவிக்கிரமனாகத் திருவடியா லளந்தாய்; இந்த ஓரவாரமான † செயல்களை மாற்றவளாகிய திருமகள் தெரிந்தால் சீற்றமுறாளோ?

'நீ வேதங்களை வேதனுக்கு ஓதினாய். அவைகளை உனக்கு ஓதினா ரொருவரையும் காணோம். அவர்கள் ஒழிந்து போனாரோ?

'அடியேனது அரிய தவத்தால் நீ க்ஷீரசாகரத்தினின்று நீங்கி வந்தாயாதலால், யான் ஜென்மசாகரத்தினின்று நீங்கி உய்ந்தேனாயினேன்.' ]

### விராதன் வரலாறு

[ இவ்வாறு துதித்த விராதனை நோக்கி, இராமன், 'உன் வரலாறு கூறு' என, அவன், 'என் பேர் தும்புரு; ஊர் அளகை. அங்கே நடனசாலையில் ஆடலோடு பாடல்செய்த அரம்பைமீது ஆசையுற்றேன். அதனால், குபேரன், கோபங்கொண்டு, என்னை "அரக்கனாய்ப் பிறப்பையாக" என்று சாபங்கொடுத்து, அந்தப் பிறவி உன் திருவடி தீண்டத் தீரும் என்று சாபவிடையும் தந்தான். அவ்வாறே இராக்கதனாகப் பிறந்து, இன்றுவரையும் நன்றிது தீதிது என்று நாடியறியும் பகுத்தறிவின்றிப் பாவமே தேடினேன். தீயேன் தெரியாது திருவடிகளுக்குச் செய்த தீங்குகளைத் தாங்கியருள்க' என்று சாற்றிப் போனான்.

இராமன் முதலிய மூவரும் முனிவர்கள் வாழும் ஒரு சோலையை உற்று அங்கே அன்றைப் பகல் அமர்ந்திருந்தார்கள். ]

---

* எயிறு - பல்; பன்றியின் பல்லாகிய கொம்பைக் குறித்தது.

† ஓரவாரம் - ஒருதலைச்சாய்வு.

## 2. சரபங்கர் பிறப்பு நீங்கு படலம்

[ சரபங்கமுனி இராமபிரானைத் தரிசித்துப் பிறப்பு நீங்கப்பெற்று முத்தியடைந்ததை மொழிவது]

### இராமன் சரபங்கர் ஆச்சிரமம் அடைதல்

[ இராமன் முதலியோர் பகலிலே தங்கியிருந்த தபோவனத்தினின்று புறப்பட்டு மாலையிலே சரபங்கமுனிவன் வாழ்ந்த ஆச்சிரமத்துக்குச் சென்றார்கள். அப்போது அங்கே இந்திரன் வந்திருந்தான். அவனை அந்த அருந்தவன் வந்தவாறு யாதென, அவன், 'உன் தவத்துக்கு உவந்து பிரமன் உன்னைத் தன்னுலகுக்கு அழைத்து வரப் பணித்தான்' என்றான். முனிவன், 'பிரமலோக வாழ்க்கையைப் பெரிதாகக் கருதேன்; அழிவில்லாத பரமபதம் அடைவதே அரிய தவத்தின் முடிவு' என்றான். இந்திரன் விடை பெற்று வெளியே வந்தான்.

அப்போது அவ் ஆச்சிரமத்தை அணுகிய இராமன் முதலியோர், அங்குள்ள ஆரவாரத்தைக் கேட்டுச் சற்றே நின்று, அதன் காரணம் யாதென நாடலுற்று, வெள்ளை யானை நிற்கக் கண்டு, இந்திரன் வந்திருக்கிறானென்று ஊகித்துணர்ந்தார்கள். ]

### இந்திரன் இராமனைத் துதித்தல்

[ இராமன், சீதா லக்குமணரை நிறுத்திவிட்டுத் தனியே சரபங்கமுனி தங்கும் தவச்சாலையைச் சமீபித்தபோது, அவனை இந்திரன் கண்டு, தனக்குப் பகைவரை வென்றும், வேதப் பொருளை ஓதி அறநெறி உணர்த்தி ஒழுகுவித்தும், செல்வம் அளித்தும், ஞானம் அருளியும், கண்ணும் உயிரும் போன்று காக்கும் கடவுளென்று கருத்துள் உணர்ந்து, துதிப்பானாயினான்:—

'எல்லாப் பொருள்களினுங் கலந்தும் அவற்றின் குணம் பற்றாயாய் அப்பொருள்களாற் கலக்கப்படாது சாட்சி மாத்திரமாய் நிற்கும் தனிப்பரஞ்சுடரே! பற்றற்றார் பற்றே! அருளுக் குறையுளே! அறிவுக் கறிவே! ஆதியில் அடியேங்களுக்கு அருள் சுரந்தருளிய வரப்படியே அவனியில் அவதரித்தாய். அன்றி, உன் பொன்னடிகளைப் பூமி பொருந்தத் தக்க புண்ணியமுடையதோ!

'உனது பரநிலையை நோக்கினால், உனக்குப் பகையும் உறவும் இல்லை; ஒளியும் இல்லை இருளும் இல்லை; இளமை முதுமை இல்லை; முதல் இடை கடை இல்லை; முன் பின் இல்லை; இவ்வாறாகவும் நீ வில்லேந்தித் திருவடி வருந்தத் தரையிடை நடந்து எங்களைக் காவாநின்றாய். காவா தொழிந்தால் உனக்குப் பழி உண்டாமோ! கடலிலே பள்ளிகொண்ட நீ அங்கே கண் வளராயாய் எங்கள் பொருட்டு இங்கே வந்தாயே. யாங்கள் செய்யக் கூடிய கைம்மாறு யாதேனும் உண்டோ! ஒன்றும் இல்லையே!

'அளப்பான் பிரமனேயாக, அகிலாண்டமும் நாழியாக, பல்லூழிகாலம் அளக்கும் காலமாக, அளந்தாலும், ஒருசிறிதும் அளக்கலாகாத அநந்த கல்யாண குணங்களையுடைய புருடோத்தமனே! சுரராகிய யாங்களும் அசுரர்களாகிய எங்கள் பகைவரும் உன் மக்களே! இருதிறத்தேங்களோடும் நீ கைவருந்தக் கடைந்த அமுதத்தை எங்களுக்கேயீந்தாய். அவர்கள் உன் மக்களல்லரோ! எம்பெருமானே! எல்லா மக்களும் உன் மக்களே யாயினும் அவர்களுள் நன்மைகருதி நன்மைசெய்வார் நல்ல பயனையும் தீமை கருதித் தீமைசெய்வார் தீய பயனையும் அடையச் செய்கின்றாய்'.

இவ்வாறு துதித்து இந்திரன் விடைபெற்றுத் தன் இருப்பிடத்துக் கேகினான். ]

### சரபங்கர் பிறப்பு நீங்குதல்

[ சரபங்கமுனி, இராமபிரானை எதிர்கொண்டு இனிது வரவேற்று, அன்பு மிகுந்து ஆனந்தக்கண்ணீர் பொழிந்து இன்ப அழுகை அழுது, சீதாலக்குமணரையும் 'இனிது வருக'வென மனமுருக அழைத்துக்கொண்டு, ஆச்சிரமத்துள்ளே சென்றான். அங்கே அவர்கள் அவனது அறவுரைகளைச் சிரவணஞ்செய்து * அந்த இரவு தங்கியிருந்தார்கள். இரவுகழிய, சூரியன், பூமி தேவியை மூடியிருந்த இருட் போர்வையைத் தனது கிரணக் கைகளினால் நீக்கிக்கொண்டு தழுவ, இன்ப உதயம் † இனிது உற்றது.

கேட்டு. † இன்பமான உதயகாலம்; சுகாரம்பம் (தொனிப் பொருள்).

அப்போது அந்த முனிவன் அக்கினியை வளர்க்க, இராமன் எதற்காகவென, 'எரிபுக விடை தருக' என, 'யான் வந்த சமயத்தில் இது செய்வானேன்?' என, 'என், தவம் முற்றுப்பெற்று இருவினையும் நீங்கினேன்; செய்தவம் முற்றினார்க்கு எய்துவதாகிய உனது தெரிசனமும் சித்திக்கப் பெற்றேன்; இனிச் செய்ய நின்றது பரமபத மடைதலன்றி யொன்று மின்று; திருவருள் செய்தருள்க' என்று பத்தினியுடனே அக்கினி முழுகினான்.

அந்திம காலத்தில் இறைவனது எண்ணிறந்த திருநாமங்களில் ஒரு நாமத்தை ஓதுவார் பேறே எண்ண அரியதென்றால், அந்த அமையத்திலே அவனை நேராகக் காணப்பெற்றார் அடையும் பேறு இன்னதென எண்ண எளிதோ! எண்ணரியதைச் சொல்லரிய தென்பானேன்! ]



## 3. அகத்தியப் படலம்

[ இராமன் சீதா லக்குமணருடன் அகத்திய முனிவனை அடைந்ததைக் கூறுவது]

### தன்னைக் கண்டு மகிழ்ச்சி யடைந்த முனிவர்களுக்கு இராமன் அபய மளித்தல்

[ இராமன் முதலியோர், சரபங்க முனிபுங்கவனது முடிவை நினைந்து வருந்திய மனத்தினராய், அவனிருந்த ஆச்சிரமத்தை அகன்று, பல வனங்களும், மலைகளும், அருவிச்சாரல்களும், காட்டாறுகளும் கடந்து தண்டகாரணியத்தைச் சார்ந்தார்கள். அரக்கரால் வருந்தியிருந்த அந்த வனவாச முனிவோர்கள், வன்மையான கோடையால் வாடி வதங்கியிருந்த மரங்கள் மழை வரக் கண்டாற் போலவும், வெய்ய மிருகங்களுக்கு வெருண்டிருந்த கன்றுகள் தாய்ப்பசுவைச் சந்தித்தாற் போலவும், வெள்ளத்தால் இழுக்கப்பட்டு அமிழ்த்தப்படுவோர் தோணியைக் காணலுற்றாற் போலவும், இராமனைக் கண்டு மறுக்கம் அகன்று மகிழ்ச்சி யடைந்தார்கள். அவர்கள், முயன்ற மாதவம் முற்றி, அஞ்ஞானம்

அகன்று, பிறவிச் சிறையினின்று விடுதலைபெற்று வீடுசேர்ந்தார் போன்றார்கள். இராமன் அவர்கள் ஒவ்வொருவரையும் வணங்க, அவர்கள் அனைவரும் தனித்தனி அவனுக்கு ஆசிவழங்கினார்கள். பின்பு, அவர்கள், அவனை, அழைத்துக்கொண்டு சென்று, ஒரு சாலையில் இனிதிருக்கச்செய்து தத்தம் சாலை சார்ந்தார்கள்.

சிறிதுபொழுது சென்றபின், அவர்கள் அனைவரும் கூடிவந்து, மீண்டும் அவனைக் காண, அவன், 'எனக்கு இட்டருளும் கட்டளை யாது?' என, 'இரக்கமற்ற அரக்கர் வருத்த ஆற்றேமாய்*, எங்கள் கடன்களை ஆற்றேமாயினேம்†; வலிய புலிகள் பல உலவும் வனத்துள் அகப்பட்ட மான்கள் போல வருந்தாநின்று தப்பும் வழியையே யெப்பொழுதும் எண்ணிச் செய்தற்குரிய தவத்தைச் செய்யகிலேம்; வேதம் ஓதுகிலேம்; ஓதுவார்க்கு ஓதுவிக்ககிலேம்; இம்மட்டோ, அக்கினி வளர்த்தலும் ஆற்றகிலேமாய் அந்தணரே யும் அல்லேமாயினேம்: எங்களைக் காக்கும் இந்திரன், தன்னையே காக்கமாட்டானாய், இராக்கதர்க்கு ஏவலனாகி, இன்னல் எய்தி இருக் கின்றான். எங்கள் இடுக்கண் களைபவர் எவரும் இலர். இப்படிப் பட்ட சமயத்தில், நீ, யாங்கள் இயற்றிய தவப்பயனாய், எங்கள் துன்ப இருள் தொலைக்கும் சூரியனாய்த் தோன்றினாய்' என்றார்கள்.

அவன், 'இராக்கதர், என்னைச் சரணடைந்து தம் தீத் தொழிலைத் தவிர்க்காராயின், அவர்கள் அண்டத்துக்கு அப்புறம் சென்றாலும், என் அம்புக் கிரையாவர். உங்கள் துன்பந் தொலைக் குந் தொண்டினை இயற்றும் பெரும் பாக்கியம் பெற்றேனாதலால், யான் நாடகன்று காடடைந்தது நன்மையாய் முடிந்தது. சாதுக்க ளாகிய உங்களைத் துன்புறுத்தும் துட்டரைத் தொலைக்கும் முயற்சியிற் சித்திபெறாது செத்தேனாயினும் சிறந்ததே. இவ் வாறு இறந்திடலினும் பிறந்ததனாற் பெறும் பேறு பிறிது யாது உளது?' என்று பின்னும் கூறுவான்: ]

3. ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்
யாவர்க் கானு மெளியவர்க் காயினும்
சாவப் பெற்றவ ரேதகை வானுறை
தேவர்க் குந்தொழுந் தேவர்க ளாகுவார்

* தாங்கமாட்டாதவராய். † செய்யாதவராயினேம்.

கொண்டுகூட்டு : 'ஆவுக்கு ஆயினும், அந்தணர்க்கு ஆயினும், எளிய வாகரு ஆயினும், யாவர்க்கு ஆயினும், சாவப்பெற்றவர் தகை வான் உறை தேவர்க்கும் தொழும் தேவாகள் ஆகுவார்'.

பொருள் : 'பசுக்களைக் காத்தற்காயினும், அந்தணரைக் காத்தற்காயினும், ஏழைகளைக் காத்தற்காயினும், இவர்களே யல்லாமல் வேறு எவரையும் காத்தற்காயினும், செத்திடப் பெற்றவர் தேவர்களும் வணங்கும் தேவதேவராவர்.'

ஆ - பசு. ஆனும், ஆயினும் என்பதன் விகாரம். தகை - பெருமை. வான் - விண்ணுலகம். உறைதல் - வசித்தல். செய்யுளாதலால், 'எளியவர்க்காயினும்' என்பதன் பின் நிற்றற்பாலதாகிய 'யாவர்க்கானும்' என்பது முன் நின்றது.

பசுக்கள், தாம் பெறும் தாழ்வான புல்லுக்கும் தண்ணீருக்கும் கைம்மாறுகக், குழந்தைகளும் நோயாளரும் ஏனையோரும் உண்டு உரம் பெறுமாறு விண்ணமுதம் போன்று மண்ணமுதமான மேலான பாலை அளிப்பதேயன்றி, வயல்களை உழுது பண்படுத்திச், சாணத்தாலும் மூத்திரத்தாலும் உரப்படுத்திப், பயிர் செழித்து வளரப்பண்ணிச் சிறந்த விளைவுண்டாக்கி, விளைந்த பொருள்களைச் சுமந்தும், அப் பொருள்களேனும் மக்களேனும் ஏறிய பண்டிகளை யிழுத்தும், வேண்டுமிடங்களுக்குச் சென்று கொண்டு போய்ச் சேர்த்தும், பயன்படும் எருதுகளை யீன்று உதவுவனவாய், மழை போல மக்கள் வாழ்வுக்கு இன்றியமையாத சிறப்புடையனவா யிருத்தல் பற்றி 'ஆவுக்காயினும்' என்பது முதற்கட் கூறப்பட்டது.

'உடம்பார் அழியில் உயிரார் அழிவார் - திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்' (—திருமூலர்) என்றவாறு உயிர்க்கு ஆதாரமான உடம்பின் நன்மைக்குப் பசு மேற்கூறியபடி ஆதாரமாயிருத்தல் போல, அந்தணர், உயிரின் நன்மைக்கு ஆதாரமாய் மெய்ஞ்ஞானத்தை உதவுதல்பற்றி 'அந்தணர்க்காயினும்' என்பது 'ஆவுக்காயினும்' என்பதற்கு அடுத்ததாகக் கூறப்பட்டது.

அந்தணரென்றது,—மும்மூர்த்திகளைக் காட்டிலும் பஞ்சபூதங்களைக் காட்டிலும் (அம்மூர்த்திகளுக்கும் பூதங்களுக்கும் மேலாயும் அப்பாலாயுமுள்ள) பரம்பொருளைக் காட்டினும் பெருமையுடையோர் என்ற கருத்துப் பட வுள்ள

கரிய மாலினும் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேல் உறை வானினும்
விரியும் பூதம்ஓர் ஐந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி உள்ளத்தால் *

* க. ரா. சா, அயோத்தியா காண்டம், 13-ம் பாட்டின் குறிப்பைப் பார்க்க.

என்ற பாட்டில் அவ்விதந் தேர்தல் பெற்ற அந்தணரைக் குறித்ததென்க. அந்தணனென்பதன் பரியாய பதமாகிய பிராமணன் என்பதற்குப் பிரம ஞானமுடையவ னென்பது பொருளாயிருத்தல் இங்கே நினைவுகூர்தற் குரியது. ஏனைய அந்தண ரெனப்படுவார் 'யாவர்க் கானும்' என்ற பகுப்புள் அடங்குவர்.

ஐம்பூதங்களுக்கும் மும்மூர்த்திகளுக்குமே யன்றிப் பரம்பொரு ளுக்குமே பெரியர் அந்தண ரென்றது எதனுலெனில், ஐந்தவித்தலும் யோகப்பயிற்சியும் தத்துவ உணர்வும் உடையராய், வேறுபடும் தன்மை யுடைய மும்மூர்த்திகளையும் ஐம்பூதங்களையும், வேறுபடாத இயல்புடைய மெய்ப்பொருளான பரம்பொருளையும், ஐயம் திரிபு மயக்கமின்றி அறிந்து, அந்த மூவகைப் பொருள்களையும், உலகத்தோர்க்கு உணர்த்தி னோர் அந்தணர்; அவ ரின்றேல், அவைகள் உண்மையில் இருந்தும் காரியத் தில் இல்லாதனவேயாம். ஆதலால், அவ் வந்தணர் அப்பொருள்களினும் பெரியரென உபசரித்துக் கூறுதற்குரிய ரென்பதனு லென்க. (௫)

[ மேலும் இராமன் அம்முனிவரை நோக்கி, 'மும்மூர்த்தி களே முன்னின்று காக்கினும், அறத்தொடு மாறுபட்ட அரக் கரை அடியோ டழிப்பேன். அஞ்சாதீர்கள்!' என்றான்.

எனவே, அம்முனிவர்கள் துன்பம் நீங்கி, இன்பம் ஓங்கி, ஆடிப் பாடி, 'உன் வனவாச வருடம் பதினன்கில் இறந்தனபோக எஞ்சியவைகளை இங்கேயே யிருந்து கழித்து எங்களைக் காப்பா யாக' என, இராமன் இசைந்து அங்கே தங்குவானாயினன். ]

இராமன் அகத்தியன் இருந்த வனத்தை அடைதல்

[ அவன் பத்து வருடகாலம் அங்கே வாழ்ந்தான். பின்பு, அம் முனிவர்கள், 'நீ அகத்தியன்பால் அடைதலால் அநுகூலம் உண்டாகும்' என்றார்கள். அவன் அந்த முனிவனைக் காணப் புறப்பட்டு, வழியிலே சுதீக்கண முனிவனது ஆச்சிரமத்தை அடைந்து அவனை அடிபணிய, அவன் ஆசி கூறி, நல்வரவேற்று, 'இங்கே யினிதிருப்பாயாக' என, இருந்தான். இருந்தவனுக்கு விருந்தினர்க்குச் செய்வன செய்து, 'நீ இங்கே எழுந்தருள யான் எத்தவஞ் செய்தேனே!' என, 'உன்னினும் உயர்ந்த தபோ தனரும் இல்லை, உன் அருள் பெற்ற என்னினும் மிக்க இல் வாழ்வாரும் இல்லை' என்றான். அவன், 'என் தவமெல்லாம்

தக்கணையாகத் தருகின்றேன், கொள்வாயாக' என, இராமன் ஏற்றுக்கொண்டு, 'உன் தவச் செல்வத்தைப் பெற்ற எனக்கு ஒரு குறை உளது, அது அகத்தியனைக் காணுத குறை' என, அவன், 'நல்லதை நினைந்தாய், நானும் அதனைச் சொல்ல உன்னினேன்; அவனை அடைவாயாக. அடைந்தபின், நீ அடையத்தக்க பேறுகளுள் அடையாத தொன்றுமின்றும். அவன் உன் வரவை ஆவலுடன் எதிர்பார்த் திருக்கின்றான்; உங்கள் சேர்க்கை தேவர்க்கும் யாவர்க்கும் நலம் பயக்கும்' என்று கூறிச், செல்லும் வழியும் சொல்லி, ஆசி வழங்க, இராமன் விடைபெற்று வழிச்சென்று அகத்தியன் இருந்த வனத்தைத அடைந்தான். ]

அக்த்தியன் இராமனுக்கு ஆசியளித்து ஆயுதங்கள் வழங்கல்

[ திரிவிக்கிரம மூர்த்தியின் திருவடிகள் சென்ற இடமெல்லாம் செந்தமிழின் சீர்த்தி சென்று பரவச்செய்து திருமால் அளந்த உலகமெல்லாம் தமிழால் அளந்தவனும், மாதவர் பலரை வஞ்சனையாற் கொன்றுதின்ற வாதாபி இல்வலன் என்னும் அசுர சகோதரரைச் சாடராக்கினி யென்னும் வயிற்றழலாலும் நேத்திராக்கினி யென்னும் கண்ணழலாலும் முறையே எரித் தொழித்தவனும், வேலையுள் ஒளித்திருந்த விருத்திராசுரன் வெளிப்படும் படி 'வேலையை உண்டருள்க' வென விண்ணவர்கோமான் வேண்ட, உண்டு, அவன் அவனைக் கொன்றபின், 'மீள உமிழ்ந்தருள்க' வென மீண்டும் வேண்ட உமிழ்ந்தவனும், சூரியாதி கிரகங்களின் கதி தடைப்பட வீறி வளர்ந்து விண்ணை முட்டிநின்ற விந்த மலையை மண்ணின் மட்டமாக அதன் அகங்காரம் அகன்றொழிய அகங்கையால் அமிழ்த்தி அடக்கியவனும், இமயமலை மீது சிவ பெருமான் திருமணங் காணச்சென்ற தேவர் முதலியோர் திரண்டதனுல் வடதிசை தாழத் தென்திசை உயர, அவ் இறைவன் ஆணைப்படியே, தென்றிசைக்குச் சென்று, அப் பெருமான் கைலை மலையில் வீற்றிருத்தல் போலப், பொதியமலையில் அவனுக்குச் சமானமாக வீற்றிருந்து, பூமியைச் சமப்படுத்தியவனுமான மகத்துவமுடையவன், அகத்திய முனிவரன்.

அவன், தன்னுடைய வனத்துள் இராமன் வந்தானென்று தெரிந்து, 'விண்ணுலகத்தும், மண்ணுலகத்தும், வேறுலகத்தும்

எங்கும் இருக்குமென்று இதயத்தினால் எண்ணப்படுகின்றதும் கண்ணாற் காணப்படாததுமான பொருள், என் கண்கள் கண்டு களிக்க இங்கே எய்தப்பெறுவே' னென்றும், 'வேதங்களாலும் வேதாவாலும் அறியப்படாத பொருள், வெளிப்படையாக என் முன் எய்தி என் எதிர்நின்று என்னோடு உரையாடப்பெறுவே' னென்றும் இனிது கருதி, இராமனைக் காணுதற் கெழுந்த பேரு வகைக்கடல் பிரளயக் கடல்போலப் பெருக எதிர்கொண்டு சென்று நன்கு வரவேற்றான். இராமன் வணங்கினான். அகத்தியன் அன்பு மீதூர ஆனந்தக் கண்ணீர் சோர ஆலிங்கனஞ்செய்து ஆசீர்வதித் தான்.

பின்பு, அவன் இராமனைத் தன் ஆச்சிரமத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் விருந்து அருந்துவித்து, 'யான் இருக்கும் இடத் துக்கு இனிது வந்து எனது தவத்தை நிறைவுபெறச் செய்தாய்' என்றான். இராமன் மீண்டும் வணங்கி, 'உன் அருளை உம்பரும் உற்றிலர், யான் நிரம்பப் பெற்றேன். ஆதலால், அனைத்துல கத்தையும் வென்றேனானேன்; இனி யான் அடையப்பெறாத நன்மை யாதுளது!' என்றான். முனிவன் உவந்து, 'இங்கே உறைவாயாக' என்றான். இராமன், 'வெய்ய அரக்கரை வேரோ டழிக்கும் விரதம் பூண்டுளேன்; அவர்கள் வருந் திசையில் இருந்து வாழ்தல் நன்றென எண்ணுகின்றேன். உன் கருத்து யாதோ?' என்றான். அவன், 'நீ கருதியது சரியே. இந்த வில் விட்டுணு வின் வில். இதனை இந்த அம்பறாத்தூணியோடுங் கைக்கொள்வா யாக' என்று அதனைக் கொடுத்து, ஒப்புயர்வற்ற ஒரு வாளையும், முப்புரமெரித்த அம்பையும் ஈந்தான். ஈந்து, 'மலைகளும் வனங் களும் மருங்கில் உடையதாய் ஆறு ஊடுசெல்லப் பெற்றதாய்ப் பல வளங்களும் படைத்த பஞ்சவடி என்ற ஒரு சிறந்த இடம் உள்ளது. அங்கே போய்த் தங்குவாயாக' என்றான். இராமன், சீதா லக்குமணருடன் தொழுது விடைகொண்டு அகத்தியன் மனம் பின் தொடரப் புறப்பட்டுப் போனான். ]

# 4. சடாயுகாண் படலம்

[இராம சீதா லக்குமணர் சடாயுவைப் பார்த்ததைக் கூறுவது]

சடாயு ராமர் சந்திப்பு

[ பஞ்சவடியை நோக்கிச் சீதையுடன் வழிச்சென்ற இராம லக்குமணர், பல காதங்கள் கடந்தபோது, சூரியன், தன்னுடைய கிரணங்கள் திரண்டு இரண்டு சிறகுகளாக, ஒரு பறவை உருக்கொண்டு உதயகிரி உச்சியில் உற்றாற்போலப், பொன்னிறம் படைத்த கழுகரசனாகிய சடாயு ஒரு குன்றின்மேல் இருக்கக் கண்டார்கள். அவன், தனது பென்னம் பெரிய பொன்னிற மேனி மேரு நேர, தலை அந்த மலைச் சிகரம் ஒப்ப, மணிமுடி அச்சிகரத்தில் விளங்கும் சூரியன் போல, வீற்றிருந்தான். அவன் கழுத்தில் அணிந்திருந்த பலநிறம் படைத்த நவமணி மாலை, நாநாவித வருணங்களோடுகூடிய நவக்கிரகங்கள் விளங்கும் துருவ சக்கரம் போலச், சுடர்விட்டுத் துலங்கியது. அவன், தினமும் அசுரர்களை உடல்வேறு உயிர்வேறாகப் பிரித்து, உயிரை எமனுக்கு விருந்தாக்கி, உடலைத் தனக்கு உணவாகக் கொள்வோன். பல யுகங் கண்ட பழையோன்.

அவனை, இராம லக்குமணர், ஓர் அரக்கன் உருமாறியுள்ளானோ வென்று ஐயுற்றுக் கோபங்கொண்டு கூர்ந்து நோக்கினார்கள். அவன், 'இவர் சடைமுடியும் மரவுரியும் தரித்திருத்தலை நோக்கினால், தவசியர் போல்கின்றார்; வில்லேந்தியிருத்தலை நோக்கினால் வீரர் போல்கின்றார்; தேவரோ, யாவரோ, தேர்கிலேன்; மும்மூர்த்திகளும் எனக்கு ஒளிப்பாரல்லர்; இவ்விருவர் அம்மூவரில் எவ்விருவருமல்லர்; மன்மதனை, அவன் ஈசன் கண்ணால் எரிந்து உரு இழக்குமுன் பார்த்திருக்கின்றேன்; அழகில் அவன் இவர்கள் காற்றாளுக்கும் ஒப்பாகான்; இவர்கள் திரிலோகங்களையுஞ் செயித்துத் தம் அடிப்படுத்து ஆளுதற்குரிய அங்க லக்கணமுடையார்; திருமகளினும் சிறந்த ஒருமகளுடன் வந்த இவர்கள் எவரோ தெரியேன்; இவர்கள் கருங்குன்றமும் செங்குன்றமும் ஒருங்கு விளங்குதல் போன்ற கம்பீரமான காட்சியுடையராய், நிறவேற்றுமை யுள்ளாரெனினும் உருவொற்றுமை

*உடையராய்ச் சம்பராசுர சங்கார சமயத்தில் என்னை நண்பனாகக் கொண்ட சக்கரவர்த்தியை ஒத்திருக்கின்றனர்' என்று கருதி, அதனால் அவருக்கு அன்பினனாகி, அவரை நோக்கி, 'நீவிர் யாவிர்?' என்றான். அவர்கள், அவனை அரக்கனென அயிர்த்தன ராயினும், உண்மையன்றி ஒன்றும் உரையா உத்தம ராதலால், தம்மை உள்ளபடி உணர்த்துவாராய், 'நாங்கள் தசரத சக்கரவர்த்தி தநயர்' என்றார்கள். என்றவுடனே, எழுந்த மகிழ்ச்சியினால், அவன் அவர்களை ஆலிங்கனம் செய்யும் ஆசை தூண்டக் குன்றி னின்று தரையில் இறங்கிச், 'சக்கரவர்த்தி தைரியமா யிருக்கி றானா?' என்று சேமம் வினவினான். அவர்கள், 'மறந்தும் பொய் கூறாத மன்னவன், உண்மையைக் காக்க உயிரை நீத்து உம்பருல குற்றான்' என்றார்கள். எனவே, அவன் மூர்ச்சித்து வீழ்ந்தான். அவர்கள் அவனைக் கைகளால் தழுவி யெடுத்துக் கண்ணீரால் கழுவக், கண்ணீர் தண்ணீர்போல மூர்ச்சை தெளிவிக்க, உறங்கி னோன் விழித்தெழுந்தாற் போல, உணர்வு மீண்டெழுந்து துன் பத்திலழுந்தி அகங் குழைந்தழிய அரற்றுவானாயினான்.* ]

### தசரதன் மரணத்துக்குச் சடாயு வருந்தல்

4\. பரவலருங் கொடைக்குநின்றன் பனிக்குடைக்கும்
　　பொறைக்குநெடும் பண்பு தோற்ற
கரவலருங் கற்பகமு முடுபதியுங்
　　கடலிடமுங் களித்து வாழப்
புரவலர்தம் புரவலனே பொய்ப்பகையே
　　மெய்க்கணியே புகழின் வாழ்வே
இரவலரு நல்லறமும் யானுமினி
　　யென்படநீத் தேகி னையே

**கொண்டுகூட்டு:** *'புரவலர்தம் புரவலனே! பொய்ப்பகையே! மெய்க் கணியே! புகழின் வாழ்வே! பரவல் அரும் நின் கொடைக்கும், பனிக் குடைக்கும், பொறைக்கும், நெடும் பண்பு தோற்ற கரம் (உடைய) அலரும் கற்பகமும், உடுபதியும், கடல் இடமும், களித்து வாழ, இரவலரும் நல்லற மும் யானும், இனி என் பட நீத்து ஏகினை!*

**பொருள்:** *'அரசர்க்கரசே! பொய்க்குச் சத்துருவே! மெய்க் குப் பூணே! புகழுக்கு உறைவிடமே! (தசரதா!) உன்னுடைய*

இனிய கவிகளில் நயமிக்க பகுதி இறுதியடியில் அமையப் பாடுதல், சுவை யாவும் துறைபோய தொல்கவிஞர் முறை. இதனை, இந் நூலில், வேறு பல இடங்களிற்போல, இப் பாட்டிலன்றி, இதற்கடுத்த இரண்டு பாட்டுக்களிலும் காணலாம். இப் பாட்டின் இறுதியடிப் பொருளோடு பிற அடிப் பொருள்கள் இனிது பொருந்தியிருத்தல் இதன்பின் விவகரித்து விரிக்கப்படுவதனால் விளங்கும்.

'புரவலர்தம் புரவலனே' முதலிய சிறப்புடைய விளித்தொடர், சடாயு தசரதன்பாற் கண்ட அருமையான குணங்களுள்ளே அருமையானவை களை ஒரு வகை பற்றி ஆறு முறை அடுக்கிக் கூறியன என்னலாம். அவை வருமாறு :

(1) சடாயு தசரதன்பால் முதற்கண் அறிந்தது, அவன் தன்னை நண்ப னாகக் கொண்டு, தன் துணைவலியால் (விண்முழுதாளியாகிய இந்திரனை வென்றிருந்த) சம்பராசுரனைச் சங்கரித்த சமயத்தில் விளங்கிய வீரமாதலால், அந்த வீரம் தன் மனத்துள் முதற்கண் முனைத்தெழ, அவ் வீரத்தால் அவன் மண்ணரசர்க்கேயன்றி விண்ணரசர்க்கும் மேலான வேந்தானானென்பது கருதிப் 'புரவலர்தம் புரவலனே' என்றானென்றும், அவன், நீதிக்குப் பகையாகிய பொய்யைச் சாவினும் அதிகமாக வெறுத்து விலக்கி, அந்த நீதிக்குத் துணையாகிய மெய்யை உயிரினும் மிக்கதாக விரும்பிப் போற்றி யது கருதிப் 'பொய்ப்பகையே மெய்க்கணியே' என்றா னென்றும், அவனோடு தான் நெருங்கிப் பழகிய நெடுங்காலம் முழுவதிலும் தன் பிழை களையெல்லாம் அவன் அன்புமீதூர்ந்து பொறுத்ததும், 'இனையான் அடக் கமே அடக்கம்' ஆதல்போல ஆற்றலுடையான் பொறுமையே பொறுமையா மென்பதும், 'பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும் புகழ்' என்பதும் கருதிப் 'புகழின் வாழ்வே' என்றானென்றும், பொருள் விரித்துரைத் தற்குப் பொருத்தமாக மேலே எடுத்துக்கொண்ட விளித்தொடர் இருத்தல் காண்க.

(2)அவ் விளித்தொடர் வரிசைப்படியே, தசரதன் புரவலர்தம் புரவலன் ஆயினமையால் அகில உலகத்தின் அனைத்துச் செல்வத்தையும் அடைந்து, இரவலர் எதனை எதனை இரப்பினும் அவர்க்கு அதனை அதனை அளித்து வந்தமையையும், பொய்ப் பகையாய் மெய்க்கணியாய்ப் பொல்லாரை வீழ்வித்து நல்லாரை வாழ்வித்து நல்லறத்தை நன்கு காத்தமையையும் புகழ்க் கேதுவான பொறுமையால் தன் நட்பை வளர்த்தமையையும் நினைந்து, (3) அந்த இரவலர்க்கும் அறத்துக்கும் தனக்கும் முறையே தாரகமாயிருந்த . (4) அவன் கொடையும் குடையும் பொறுமையும் அவ னோடு மறைய, (5) அந்தக் கொடை, குடை, பொறுமைகளுக்கு முறையே

பகையான கற்பகமும் சந்திரனும் பூமியும் களிப்புற்று வாழவும், (6) அவற்றுக்கு முறையே உறவான இரவலரும் அறமும் தானும் கவலையுற்று வீழவும், அவன் இறந்தானே யென்று இரங்கிச் சடாயு புலம்பினு னென்று கொண்டு மூன்றும் அடியில் உள்ள விளித்தொடர் மற்றை மூன்றடிகளோடும் முறைப்பட்ட பொருட்டொடர்புடையதா யிருத்தல் கவனிக்கத் தக்கது. (ச)

5. அலங்கார மேனவுலகுக் கமுதளிக்குந்
தனிக்குடையா யாழி சூழ்ந்த
நிலங்காவ லதுகிடக்க நிலையாத
நிலையுடையே னேய நெஞ்சின்
நலங்காண வேகினையோ நாயகனே
தீவினையே னண்பி னின்றும்
விலங்கானே னாதலினால் விலங்கினே
னின்னுமுயிர் விட்டி லேனால்

கொண்டுகூட்டு: 'நாயகனே! (உனக்கு இது) அலங்காரம் என, உலகுக்கு அமுது அளிக்கும் தனிக் குடையாய்! (நீ ஏகினால்) ஆழி சூழ்ந்த நிலம் காவல் கிடக்க, நிலையாத (மாறும்) நிலை(மை) யுடையேன் (ஆன என்) நேயம் (உடைய) நெஞ்சின் நலம் காண ஏகினையோ! தீவினையேன் விலங்கானேன் ஆதலினால், நண்பின் நின்றும் விலங்கினேன். இன்னும் உயிர் விட்டிலேன்.

பொருள்: 'உலக நாயகனே! (சிங்காதனத்தில் அரசு வீற்றிருக்கும் உனது கிரீடத்துக்கு மேலே விளங்கி அந்தக் கிரீடம் போல உனக்கு இது) அழகு செய்வதென்று (இதன் தொழில் புலப்படாமல் தோற்ற மட்டும் புலப்பட்டோர்) சொல்லாநிற்க, உலகத்தோருக்கு அமுதம் போன்ற பாதுகாவற் றொழில் செய்தலாகிய நன்மையைப் பாலிக்கின்ற ஒற்றைக் கொற்றக் குடையோனே! நீ, உலகைவிட்டேகினால், உலகத்தைக் காவல்செய்தல் ஆகிய பெருங்காரியம் தடையுற்று நடைபெறாமல் நிற்கவும், அதை நீ பொருட்படுத்தாமல், உறுதிகொள்ளாத மாறும் நிலைமை யுடையேனை என்னுடைய (உன்பால் வைத்த) சினேகத்தை உடைய நெஞ்சின் மேம்பாட்டை ("யான் இறந்தால் இவன் இறப்பானோ?" என)ச் சோதித் தறியும்பொருட்டு (இவ் வுலகைவிட்டு) ஏகினையோ! உன்னை இழக்கும்படி இழைத்த தீவினையுடையேன்

தயிர் உகைத்தற்கும், சம்பரன் மத்தற்கும் உவமை. உடைத்தல் கலிதலுக்கு உவமை. உறுதி கெட்டுக் குலைந்து சிதற அடிக்கப்படுதல், [illegible] உலைசத்தற்கும் பொது உலைகு, ஆகுபெயராய் உகைத்தோரை உணர்த்தியது. [illegible] வருத் [illegible]வும்பொருட்டு. தடிதல் - கொல்லல். அந்நாள் - தசரத சம்பராசுர யுத்த தினம். அயிர் - நுண் மணல். வலயம் - வட்டம். பூமியை நிலவலய மென்றும் குவலய மென்றும் கூறுவர். நிலம், கு, இரண்டும் பூமியின் பெயர்கள். கடல் (சூழ்ந்த நில)வலய மெனற்பாலது, செய்யுளாதலால், சுருக்கமாகக் கடல்வலய மெனப்பட்டது. அயல் - அருகு; பக்கம்; ஆகுபெயராய்ப் பக்கத்தில் நின்றாரை உணர்த்தியது. 'நீ' தசரதனையும், 'நான்' சடாயுவையும் உணர்த்தின. செயிர் - குற்றம். கிடத்தல் செய்யாத - கிடவாத. திறம்பு தல் - தவறுதல். 'உயிர்' சடாயுவையும், 'உடல்' தசரதனையும் குறித்தன. கூற்று - எமன். கூற்றினார் என்பதில் இன் சாரியை; ஆர் இகழ்ச்சி குறித்த பன்மை விகுதி.

' "பாயு மாரிபோற் பகழி சிந்தினார் - ஆயர் மத்தெறி தயிரி னாயினார்" எனச் சிந்தாமணியிலுங் காண்க. "மத்துறு தண்டயி ரிற்புலன் றீக்கது வக்கலங்கி - வித்துறு வேனை விடுதி கண்டாய்" என்றார் ஆளுடைய வடி களும்'—மு.ரா. க.

தசரதன் தன்னை உடலென்றும் சடாயுவை உயிரென்றும் உரிமை பாராட்டி உரைதத உபசார வா[illegible] ஆதாரம [illegible] உயிர் கிடக்க உடலை விசும்பேற்றினார் உணர்விறந்த கூற்றினாரே' என்று சடாயு கூற்றாகக் கவி இனிதமைத்த கடையடி, காதுக்கும் கருத்துக்கும் கழி பெருங் களியளிப்பதாய், ஒரு முறை கேட்டால் ஒருநாளும் மறவாததாய்ச், சொன்னயம் பொருணயத்தோடு தொனிநயமும் ஒருங்கு பொருந்தியிருப் பது பலமுறை நோக்கிப் பாராட்டற்பாலது.

பாட பேதம்: தடிந்த வாளாய். (௯)

## சடாயு நெருப்பில் விழுந்து சாகத் துணிதல்

[ என்று இவ்வாறு தசரதனது சாவுக்கு வருந்திப் புலம்பிய சடாயு, 'பேதைமையால் யாது செய்தேன், வீரர்போல எரியில் வீழ்ந்து இறவாமல், மாதர்போல மண்ணில் விழுந்து அழு தேனே!' யென்று மனத்துள்ளே நினைந்து, வருத்தந் தவிர்ந்து எழுந்திருந்தான். இராம லக்குமணர் அவன் அகத்தில் நிகழ்ந்த கருத்தை முகத்தில் விளங்கிய குறிப்பால் அறிந்தாராய், 'இன் னும் உயிர்விட்டிலேன்' என்று இரங்கி வருந்தியவன் இப்போது

உயிர்விட் உறுதிசெய்துள்ளா னென்றுன்னினார்கள். அவன், அவர்களை நிமிர்ந்து நோக்கி, 'யான் சூரியனது சாரதியான அருணன் புதல்வன், சடாயு வென்னும் பெயரினேன், சம்பாதியின் தம்பி, தசரதன் நண்பன்; பாலப்பருவத்திலே என் தந்தையுடன் சூரியன் சுற்றும் பூதலம் முற்றும் சுற்றியிருக்கின்றேன்' என்றான். எனவே, இராம லக்குமணர் அவனை அன்புடன் அஞ்சலிசெய்து, மாண்டு வான் அடைந்த தசரதன் மீண்டு மண் அடையக் கண்டார் போலக் களிகூர்ந்தார்கள். ]

7. மருவினிய குணத்தவரை யிருசிறகா
லுறத்தழுவி மக்கா ளீரே
உரியகடன் வினையேற்கு முதவுவீ
ருடலிரண்டுக் குயிரோன் றானான்
பிரியவுந்தான் பிரியாதே யினிதிருக்கு
முடற்பொறையாம் பீழை பாரா
தெரியதனி லின்றேபுக் கிறவேனே
லித்துயர மறவே னென்றான்

கொண்டுகூட்டு: மருவினிய குணத்தவரை இரு சிறகால் உறத் தழுவி, 'மக்காள்! வினையேற்கும் உரிய கடன் நீரே உதவுவீர். இரண்டு உடலுக்கு உயிர் ஒன்று ஆனான் பிரியவும், தான் பிரியாது இனிது இருக்கும் பொறையாம் பீழை(தரும்) உடலைப் பாராது, இன்றே எரியில் புக்கு(இறப் பேன்.) இறவேனேல் இத்துயரம் மறவேன்' என்றான்.

பொருள்: (சடாயு, ஒரு தாய் தன் இரட்டைப் பிள்ளைகளை ஒருகைக் கொரு பிள்ளையாக இருகையாலும் இறுக அணைத்தல் போல) இராம லக்குமணரை இரண்டு சிறகுகளாலும் தன் உடம் போடு அழுந்திப் பொருந்தத் தழுவிக்கொண்டு, 'பிள்ளைகளே! உங்கள் தந்தைக்குச் செய்தது போல, எனக்கும் இறந்தபின் செய்தற்கு உரிய ஈமக் கடனைச் செய்து உதவுங்கள். என்னுடல் தன்னுட லென்னும் ஈருடலுக்கும் ஒருயிரா யிருந்தவன் பிரிந்து போகவும், தான் நீங்காம லிருக்கின்ற இந்தச் சுமையாகவுள்ள தேகத்தை நான் பார்த்துக்கொண்டிருக்கும் பரிபவம் இராமல் ஒழிய, இப்போதே அக்கினியிற் பிரவேசித்து இறப்பேன்; இறவா திருப்பேனானால் ஆற்றுதற்கரிய இந்தத் துன்பத்தை மறக்கமாட்டேன்' என்றான்.

உற - பொருந்த. பிரியவும் - (என்னை விட்டு அல்லது இவ்வுலகை விட்டு) நீங்கவும். பிரியாது - (இவ்வுலகை விட்டு) நீங்காமல். இனிது இருக்கும் - (தசரதன் இறந்தும் தான் ஒழிந்துபோகாமல் பூமிக்குப் பாரமாய் மானமின்றி) இனிமையாக(த் தங்கி)இருக்கின்ற. இனிது, இங்கே சடாயுவின் வெறுப்பை உணர்த்தியது; இகழ்ச்சியை உணர்த்திய தெனலுமாம். உடற்பொறை - உடலாகிய சுமை; பொறை உடலெனப் பிரித்துப் பொருத்திப் பொருள் கூறியிருத்தல் காண்க. பீழை - துன்பம். புக்கு - புகுந்து; பிரவேசித்து.

'உடற்பொறையார் பிழைப்பா ராரோ' என்று பாடம் கொண்டால், 'தசரதனது பல நண்பருள் ஒவ்வொருவரும், அவரவருடலும் அவனுடலும் ஆக இரண்டுடலுக்கும் அவன் ஓர் உயிராகு னென்று சொல்லும்படி, அவர்களெல்லாரிடத்தும் அன்பு பூண்டிருந்த் அவன் உலகை விட்டு நீங்கவும், நீங்காமலிருக்கும் உடலுடையாரான அவன் நண்பர் யார்தாம் சீவித்திருப்பார்? ஒருவருமே இரார்; அவருள் ஒருவனான நான் (சடாயு) இறக்கக் கடவேன், இறவேனாயின் அவன் பிரிவினால் ஏற்பட்ட இந்தப் பொறுக்கொணாத துன்பம் மறக்கொணாது' என்று சடாயு கூறினா னென்று பொருள் கூறலாம்.

தசரதனது நண்பர்களுக்கு அவர்களுடம்பு அவன் நண்பினாற் சுமையாகத் தோன்றாமல் இன்பந் தந்திருந்தது; அவனும் அவருடன் அவன் நண்பும் மறையவே, அது சுமையாகித் துன்பந் தருவதாயிற் றென்பது குறிப்பு.

பாடபேதம்: உடற் பொறையார் பிழைப்பா ராரோ. (எ)

## சடாயு வாழ இசைதல்

[ மேலே விவரித்தவாறு கூறிய சடாயுவை இராம லக்குமணர் கைகூப்பிக் கண்ணீர் துளிக்க நோக்கி, 'எங்களுக்கு இடர் உற்ற இடத்து உதவுதற்குரிய எங்கள் தந்தை இறந்துபோனான். அவன் இறந்த துன்பத்தை நீக்கி அவனுக்குப் பிரதியாக யாங்கள் இன்பம் எய்த உற்ற நீயும் இறந்து எங்களைக் கைவிட்டாயானால், எங்களுக்குக் களைகண யுள்ளார் யார் இருக்கின்றார்! எங்களை அவன் நீங்கியதுபோல நீயும் நீங்கலாமோ?' என்று வருந்திய மனத்தினராய் மறுகிநின்றவர்களை நோக்கிச், சடாயு, 'யான் உயிரோடிருத்தல் உங்களுக்கு உதவியாமென்கின்றீ ராதலால், நீங்கள் அயோத்தியை அடையும் அளவும் யான் உயிர்தரித்திருந்து அப்பால் தசரதனைச் சார்வேன்' என்றான். பின்பு, 'அரசன் இறந்ததனால் அரசுசெய் தற்குரிய நீங்கள் அது செய்யாமல் வனத்துக்கு வந்தது மனத்தை

வருத்துகின்றது. வந்த காரணத்தைச் சொல்லுங்கள். நீங்கள் அரசாளுதற்கு இடையூறியற்றியவர் அரக்கராயினும், அசுரராயினும், தேவராயினும், யாவராயினும், அவர்களைக் கொன்று உங்கள் அரசை மீட்டு உங்களுக்குத் தருவேன்' என்றான். அப்போது இராமன் குறிப்பிக்க, இலக்குமணன், கைகேயியால் நிகழ்ந்த செயல்களைக் கூறினான். உடனே சடாயு, இராமனை இனிது நோக்கித், 'தந்தையைச் சத்தியந் தவறுதவனுக்கிச், சிறிய தாய் வார்த்தையைச் சென்னிமே லேற்றுத், தம்பிக்குத் தன் அரசாட்சியைத் தந்த தியாக சிரேட்டனே! நீ செய்ததுபோற் செய்தவர் எவரும் இலர்' என்று அவனை அன்புமீதூர ஆலிங்கனஞ்செய்து, உச்சி மோந்து, ஆனந்தக் கண்ணீராட்டிச் 'சக்கரவர்த்தியையும் என்னையும் அளவற்ற புகழ் பெற்றவராக்கினாய்' என்றான். பின்பு சீதையை நோக்கி, 'இந்த நங்கை இன்னாளெனச் சொல்வாயாக' என, இலக்குமணன், மிதிலையிற் சிவன் வில்லொடித்ததும் திருமணம் முடித்ததும் நடுவாக, அவ்விரு செயல்களுக்கும் முன்னும் பின்னும் நிகழ்ந்த செய்திகளுள், இதன் முன்னம் சொன்ன கைகேயி செயல் தவிர, எஞ்சிய யாவையும் இயம்பினான். ]

## சடாயு பஞ்சவடியில் அவர்களைப் பாதுகாத்தல்

[ அதன்பின், கழுகரசன் மூவரையும் நோக்கி, 'நீங்கள் இங்கே தங்கி யினிதிருங்கள். யான் உங்களைக் காத்துவருவேன்' என்றான். அதற்கு இராமன், 'அகத்திய முனிவன் எங்களைக் கோதாவரித் துறையில் ஒரு வளாகம் வசிக்கத் தக்கதென நன்கு ஆலோசித்துக் கூறியிருக்கின்றான். அங்கே வாழ்தல் என் கருத்து' என்றான். 'அது மிகவும் நல்லதே. அங்கே செல்லுங்கள், அவ்விடத்தைக் காட்டுவேன்' என்று தன் சிறகு நிழலிலே இராமனாதியர் ஏக, விண்ணிற் பறந்து சென்று அவ் வளாகத்தைக் காட்டிவிட்டுச் சடாயு திரும்பிப் போனான். அவர்கள் அந்த வளாகத்தை அடைந்தார்கள். அவன், இராம லக்குமணரைத் தன் மக்களாகவும், சீதையை மருமகளாகவும், அன்புபாராட்டி அப் பக்கத்துள்ள அரக்கரால் அவர்களுக்கு அபாயம் நேரிடாமல் தன் குஞ்சுகளைப் பார்த்துக்கொள்ளும் பறவை போல, அவர்களைப் பார்த்துப் பாதுகாத்து வருவானானான். ]

# 5. சூர்ப்பநகைப் படலம்

[ சூர்ப்பநகை செய்தியைச் சொல்வது ]

## இராம லக்குமணர் சீதையுடன் கோதாவரியாற்றைக் காணுதல்

புவியினுக் கணியா யான்ற பொருடந்து புலத்திற் றாகி
அவியகத் துறைக டாங்கி யைந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார் *

கொண்டுகூட்டு: *புவியினுக்கு அணியாய், ஆன்ற பொருள் தந்து, புலத்திற்று ஆகி, அவி அகத்துறைகள் தாங்கி, ஐந்திணை நெறி அளாவி, சவி உறத் தெளிந்து, தண்ணென்று, ஒழுக்கமும் தழுவி (இருத்தலால்,) சான்றோர் கவி என்னக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்.*

பொருள் :

| கோதாவரி நதி | சான்றோர் கவி |
|---|---|
| ***புவியினுக்கு அணியாய் -*** | |
| *பூமிக்கு அலங்காரமாய்,* | *பூமியில் உள்ளோர் (ஆகிய கற்றோர் மனத்து)க்குப் பூடணமாய்,* |
| ***ஆன்ற பொருள் தந்து -*** | |
| *(தன்னிடத்துள்ள பொன் மணல் முதலியனவும் தான் மலையினின்றும் நிலங்களினின்றும் வாரிக் கொண்டு வந்த வயிர முதலியனவும் ஆன) வித்தாரமான பொருள்களை(த் தேடிக்கொள்வார்க்கு)க் கொடுத்து,* | *(அறம், பொருள், இன்பம், வீடு என்னும்) மாட்சிமைப் பட்ட பொருள்களை (க் கற்போர்க்கு)க் கொடுத்து,* |
| ***புலத்திற்று ஆகி -*** | |
| *(வாய்க்கால் வழியே சென்று பாய்ந்து) வயலினிடத்தின தாகி,* | *(தன்னைக் கற்றோர்) அறிவினிடத்தினதாகி,* |

* *கோதாவரிக்கும் சான்றோர் கவிக்கும் சிலேடை.*

*அவி அகத்துறைகள் தாங்கி -*

(வெப்பத்தைத்) தணிக்கின்ற இடங்களான (நீராடு) துறைகளை உடையதாய்,

(காம வெப்பத்தைத்) தணிக்கின்ற (களவு கற்பு என்னும்) அகப்பொருட்டுறைகளை உடையதாய்,

*ஐந்திணை நெறி அளாவி -*

(குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் முதலிய) ஐவகை நிலங்களின் வழியே (சென்று அந்த நிலங்களில்) கலந்து,

(குறிஞ்சி முதலிய ஐவகை நிலங்களிற் காதலர் திறத்து நிகழும் புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் என்னும்) ஐந்து வகை ஒழுக்கங்களையும் பொருந்தி,

*சவி உறத் தெளிந்து -*

ஒளி (ஊடுருவிச் சென்று) பொருந்த(மிக்க ஆழத்துள்ள நுண் பொருள்களும் நன்கு விளங்க)த் தெளிந்ததாய்,

(மயங்கவைத்த லென்னும் குற்றம் நீங்கி விளங்கவைத்த லென்னும்) அழகு பொருந்தத் தெளிவான (நடையையுடைய)தாகி,

*தண்ணென்று -*

குளிர்ந்ததாகி,

(படிப்போர் நாவுக்கும், கேட்போர் செவிக்கும், சிந்திப்போர் சிந்தைக்கும் இன்பமாகிய) குளிர்ச்சியை அளிப்பதாகி,

*ஒழுக்கமும் தழுவி -*

(மேற்கூறிய தன்மைகளோடு ஜீவநதியாய் எக்காலத்தும் தண்ணீர் பெருகியோடிச்) செல்லுகையும் பொருந்தி

(மேற்கூறிய தன்மைகளோடு நல்) ஒழுக்க (விளக்க) மும் தன்பாற் கொண்டு

( இருத்தலால் )

சான்றோர் கவியென்று சொல்லும்படி யிருந்த கோதாவரி யாற்றை இராம லக்குமணர் (சீதையுடன்) கண்டார்கள்.

அணி - அலங்காரம்; ஆபரணம். ஆன்ற - விரிவான; மாட்சிமைப் பட்ட. பொருள் - பண்டம்; அறம், பொருள், இன்பம், வீடென்னும் சதுர்வித புருஷார்த்தங்கள். 'அறம் பொருள் இன்பம் வீடென நான்கும் - திறம்படு பொருளெனச் செப்புவர் புலவர்'. பொருள், 'செம்பொருள் இலக்கணைப்பொருள் குறிப்புப்பொருள் என்னும் மூவகைப்பொருளையும் குறித்தலுமாம்'.— வை. மு. கோ. புலம் - வயல்; அறிவு. புலத்திற்று - புலத்தினது. அவி, பிறவினையாய்த், தணிக்கும் என்று பொருள்பட நின்றது. அகம் - இடம்; அகப்பொருள். ('அகமாவது, ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவராலும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளத்து உணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம். இன்பம் பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தை 'அகம்' என்றது ஆகுபெயர்: அகம் - உள், மனம்.') திணை - நிலம்; ஒழுக்கம். நெறி - வழி; முறை. அளாவி - கலந்து. சவி - ஒளி; அழகு. தண்ணென்று - குளிர்ந்து. ஒழுக்கம் - சீலம்; செல்லுகை.

'கோதாவிரி யென்னும் பாடம் பிழையுடைத்து. என்னை? பிங்கலந்தையினும் சூடாமணி நிகண்டினும் வடமொழி அமரத்திலும் கோதாவரி யென்றே வழங்கலான்.'—மு. ரா. க.

'ஆன்ற பொருள் தந்து' என்பதற்கு 'மாட்சிமையுடைய அர்த்த விசேடங்களைத் தோன்றுவித்து' என்றும், 'அவி அகத்துறைகள் தாங்கி' என்பதற்கு (நதியைக் குறிக்குமிடத்து) 'அவிப்பாகத்தைத் தருகின்ற யாகசாலைகளையுடைய துறைகளைத் தாங்கி' யென்றும், கவியைக் குறிக்குமிடத்துத்) 'தேவருணவினை யொத்த அகப்பொருட் டுறைகளைக் கொண்டு என்றும் அடக்குகின்ற மனோலய மார்க்கங்களை உடைத்தாகி' யென்றும், 'ஐந்திணை நெறி அளாவி' யென்பதற்கு (ஐந்திணையை ஐந்தின் இணையாகிய பத்து எனக் கொண்டு) 'சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் முதலிய பத்துவிதத்திற் கலந்து அழகு பொருந்தி' என்றும் முந்திய உரைகாரர் பொருள்செய்திருத்தல் காண்க.

'வீரர் கண்டார் எனச் சிறப்புடைய ஆடவர்மேல் வைத்துக் கூறினது சீதை கண்டதற்கும் உபலக்ஷணம்.'—வை. மு. கோ.

பாட பேதம்: தண்ணென வொழுக்கம்.

## கோதாவரி வருணனை

[ அந்த ஆறு, தாமரையும் குவளையும் பொலிந்து விளங்க அலைகளால் உதிர்ந்த மலர்களை அவர்கள் நின்ற கரையிலே ஒதுக்கிய காட்சி, முகம் மலர்ந்து அவர்களைக் கண்குளிர நோக்கி, கைந்நிறைய மலர்களை வாரிக் கால்களிலிட்டு அருச்சித்தல்

அந் நதி, குவளைகளினின்று தேன் வடியா நிற்க, இரைந்து கொண்டு செல்வது அவர்கள் வனத்தில் வாழும் கட்டதசையைக் கண்டு கண்ணீர்விட்டுக் கதறி யழுவதும் போன்றது. ]

## ராம சீதையர் நதிவளங் கண்டு மகிழ்தல்

[ அந்நதியிலே ஆணும் பெண்ணுமாய் இணைபிரியாத சக்கரவாகப் பறவைகளை இராமன் கண்டு, அவைபோன்ற சீதை தனங்கள்மேற் கண்வைத்தான். அவள், அந்நதியின் அருகில் உள்ள மணற்குன்றுகளைக் கண்டு, அவை போன்ற அவன் தோள்கள் மேல் மனம் வைத்தாள். ]

ஓதிம மொதுங்கக் கண்ட வுத்தம னுழைய ளாகும்
சீதைதன் னடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்
மாதவ டானு மாண்டு வந்துநீ ருண்டு மீளும்
போதக நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்

கொண்டுகூட்டு: ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன், உழையள் ஆகும் சீதை நடையை நோக்கிச், சிறியது ஓர் முறுவல் செய்தான். மாது, ஆண்டு வந்து நீர் உண்டு மீளும் போதகம் நடப்ப நோக்கிப், புதியது ஓர் முறுவல் பூத்தாள்.

பொருள்: அந்த ஆற்றின் அருகே அன்னங்கள் நடக்கக் கண்ட இராமன், சீதை நடையை நோக்கிக் குறுஞ் சிரிப்புக் கொண்டான். அவள், அங்கு வந்து தண்ணீர் குடித்துத் திரும்பிப் போகின்ற யானைகளின் நடையைக் கண்டு புன்னகை புரிந்தாள்.

அன்ன நடை சீதை நடைக்கும், ஆனை நடை இராமன் நடைக்கும் உவமை. ஓதிமம் - அன்னம். ஒதுங்கல் - நடத்தல் — **பத்துப்பா.**; விலகல். உழை - பக்கம். உழையள் - பக்கத்துள்ளவள். முறுவல் - சிரிப்பு. மாதவள் என்பதில் 'அவள்' பகுதிப்பொருள் விகுதி. போதகம் - யானை. பூத்தல் - தோன்றுவித்தல் - செய்தல்.

புன்னகை, புன்முறுவல், இளநகை, சிறுநகை, குறுநகை என்பவை குறுஞ்சிரிப்பு என்னும் பொருள் குறித்தவை. புதியதோர் முறுவல் - இள நகை. இளமையும் புதுமையும் முதுமைக்கு எதிரிடையாதல் கொண்டு இளநகை யென்று பொருள்பட(ப் போதகமென்று தொடங்கிய அடிக்கு மோனை அமைய)ப் 'புதியதோர் முறுவல்' என்றார்.

அன்னங்கள் இயல்பாக மனிதரைக் கண்டு விலகிப் போகின்றவை களைச் சீதையின் நடைக்குத் தோற்று ஒதுங்குவனவாகக் கொண்டு, அவை களின் நடையின் தாழ்ச்சிக்கு இகழ்ச்சியும், அவள் நடையின் உயர்ச்சிக்கு மகிழ்ச்சியும் ஒருங்கே காட்டும் புன்னகையை இராமன் புரிந்தா னென்றார். இதற்குப் பொருத்தமாக நடத்தலுக்கும் விலகுதலுக்கும் பொதுவான ஒதுங் குத லென்ற சொல்லைப் பிரயோகித்திருப்பது கவனிக்கத் தக்கது.

நீருண்ணவந்த யானைகள், தாம் வந்த நோக்கமாகிய நீருண்ணல் நிறை வேறவே, இயல்பாகத் திரும்பிப்போனவைகளை இராமனது நடைக்குத் தமது நடை தோற்றுப் போயின வென்று கொண்டு சீதை, அவற்றின் நடைக்கு இகழ்ச்சியும், அவன் நடைக்கு மகிழ்ச்சியும் புலப்படுத்தும், சிறு நகையைச் செய்தா ளென்றார். இங்கே, நீருண்ண நதியை நோக்கி வந்த யானைகள் திரும்பும்போது புறங்காட்டிச் செல்வது போரிலே தோற்றார் புறங்காட்டிச் செல்வது போலுமென உய்த்துணர வைத்தா ரென்னலாம். 'வந்துநீ ருண்ணல் செய்த – போதகம் நடப்ப நோக்கி' என்னுமல், 'வந்துநீ ருண்டு மீளும் – போதகம் நடப்ப நோக்கி' என்றது இந்தக் கருத்தை வலி யுறுத்துதல் காண்க. (கூ)

**10.** வில்லிய றடக்கை வீரன் வீங்குநீ ராற்றின் பாங்கர்
வல்லிக ளுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்கு னோக்க
எல்லியங் குவளைக் கானத் திடையிடை மலர்ந்து நின்ற
அல்லியங் கமலங் கண்டா ளண்ணறன் வடிவங் கண்டாள்

**கொண்டுகூட்டு:** வில் இயல் தடக்கை வீரன், வீங்கு நீர் ஆற்றின் பாங்கர் வல்லிகள் நுடங்கக் கண்டான், மங்கைதன் மருங்குல் நோக்க, (அவள்) எல்லி அம் குவளைக் கானத்து இடை இடை மலர்ந்து நின்ற அல்லி அம் கமலம் கண்டாள், அண்ணல்தன் வடிவம் கண்டாள்.

பொருள்: இராமன் அந்தக் நதியினிடத்தே கொடிகள் அசைவதைப் பார்த்துச் 'ன இடையை நோக்கா நிற்க, அவள் நீலோற்பலக் காட்டிலே டே ஊடே மலர்ந்து நின்ற செந்தாமரைகளைக் கண்டு அவன் திருமேனியை நோக்கி ஞள்.

*வில் இயல் தடக்கை வீரன் - விற்பொருந்திய பெரிய கையை உடைய வீரனான இராமன். வீங்கு நீர் ஆறு - மிகுந்த தண்ணீர்(ப் பெருக்கினை) உடைய (கோதாவரி)யாறு. பாங்கர் - இடம். வல்லி - கொடி. நுடங்கல் - அசைதல். மருங்கு - இடை. எல்லி - இரவு; இரவினது இருளின் கருமையைக் குறித்தது. கானம் - காடு - தொகுதி. எல்லி அம் குவளைக் கானம் - கருமையுடைய அழகிய நீலோற்பலக் காடு. அல்லி - அக இதழ்.*

*கொடி சீதையின் இடைக்கும், நீலோற்பலக் காடு இராமன் மேனிக்கும், அந்தக் காட்டில் ஊடே ஊடே மலர்ந்த செந்தாமரைகள் அவன் கரிய மேனியிலே சிவந்து விளங்கிய கண், வாய், கொப்பூழ், கை, கால்களாகிய உறுப்புக்களுக்கும் உவமை. 'வாய் கண் கை உந்திபதம்—கோகனகம் பத்தினர்'—திருவேங்கடமாலை.*

பாட பேதம்: *வில்லுயர்; வடிவு.* (க0)

*இவ்வாறு கோதாவரியாற்றின் வனப்பை நோக்கி மகிழ்வுற்ற இராம சீதையர், இலக்குமணனுடன், அந்த ஆற்றுக்கு அருகே உள்ள சோலை சூழ்ந்த பஞ்சவடி என்னும் இடத்தைச் சேர்ந்தார்கள்: அங்கே இலக்குமணன் இயற்றிய பன்னசாலையில் இனிது வாழ்வாராயினர்.* ]

### சூர்ப்பநகை இராமனைக் காணல்

[ *முடிவுகாலம் முற்றும்போது கொல்லுதற்கு உடன்பிறந்த நோய் போல, இராவணனைக் குடியோடு அடியோடு தொலைக்க அவனுடன் பிறந்தவளும், செந்தீப் போலச் சிவந்த தலைமயிரும், கரும் பாம்பு போலக் கறுத்த உடலும், முறம் போன்ற நகமும் உடையவளுமான சூர்ப்பநகை*, ஏதோ கொடியதோர்*

---

* *சூர்ப்பம் (-முறம் - சுளகு) போலும் நகத்தையுடையவ ளென்னும் பொருள் உள்ள ஶூர்ப்பணகா என்ற வடசொல் தமிழில் சூர்ப்பணகை யென வாற்பாலது சூர்ப்பநகை யென வழங்குவது தவறெனக் கொண்டு ஓர் உரையாசிரியர் சூர்ப்பணகை யெனத் திருத்திப் பதிப்பித் திருக்கின்றார். தவறாயினும், நெடுங்*

குறிப்புடனே காட்டிலே தனியே எதேச்சையாகத் திரிந்துகொண்டிருந்தவள், இராமன் இருந்த இடத்தை எதிர்ச்சையாக எய்தி, அவனைக் கண்டாள்.]

**11.** சிந்தையி னுறைபவற் குருவந் தீர்ந்ததால்
இந்திரற் காயிர நயன மீசற்கு
முந்திய மலர்க்கணோர் மூன்று நான்குதோள்
உந்தியி னுலகளித் தாற்கென் றுன்னுவாள்

கொண்டுகூட்டு: 'சிந்தையின் உறைபவற்கு உருவம் தீர்ந்தது; இந்திரற்கு ஆயிரம் நயனம்; ஈசற்கு முந்திய மலர்க்கண் ஓர் மூன்று; உந்தியின் உலகு அளித்தாற்கு நான்கு தோள்' என்று உன்னுவாள்.

பொருள்: 'இவன், மன்மதனோ வென்றால், மன்மதனுக்கு உருவம் (சிவன் கண்ணால் எரிக்கப்பட்டு) ஒழிந்தது; ஆதலால், அவன் அல்லன்: இந்திரனோ வென்றால், இந்திரனுக்கு ஆயிரங் கண்கள் உண்டு; ஆதலால், அவனுமல்லன்: ஈசனோ வென்றால், ஈசனுக்கு மூன்று கண்கள் உண்டு; ஆதலால், அவனுமல்லன்: திருமா லென்றாலோ, திருமாலுக்கு நான்கு தோள்கள் உண்டு; ஆதலால், அவனுமேயல்லன். (அவர்கள் ஒவ்வொருவருடைய அழகுகளினும் சிறந்தவைகள் அனைத்தும் ஒருங்கே இவனிடம் காணப்படுதலால், இவன் அவர்களுள் எவனுமென மயங்கும்படி இலங்குகின்றான்)' என்றெண்ணுவாளாயினாள் சூர்ப்பநகை.

சிந்தையின் உறைபவன் - (மக்கள்) நெஞ்சில் (காமத்துக்குக் காரணனாக) இருப்பவனான மன்மதன். இதுபற்றி மன்மதனுக்குச் சித்தசன், மனோசன், மனோபவன், மனோபு, மனோற்பவன் என்ற பெயர்களுண்மை காண்க. தீர்ந்தது - ஒழிந்தது. ஆல் - அசை. முந்திய மலர்க்கண் ஓர் மூன்று - (மலர்களுள்ளே) முதன்மையான (செந்தாமரை, வெண்டாமரை செவ்வல்லி ஆகிய) மலர்கள் போன்ற (செங்கதி ரென்னும் சூரியன், வெண் கதிரென்னும் சந்திரன், செந்தீ ஆகிய) ஒப்பற்ற கண்கள்.

---

காலம் ஆன்றோராட்சிப்பட்டுவிட்ட சொற்களை அவ்வாறே ஆளுதலே தகுதியாகத் தோன்றுகிறது. இப்படிப்பட்ட சொற்களுள் கோகனகம் ஒன்று என்பது நினைவுக்கு வருகின்றது. இதன் வடமொழி வடிவம் கோகநதம். இது போன்ற பல சொற்களை அறிஞர்கள் அறிவர். அவற்றை யெல்லாம் திருத்தாமல் நெடுங்கால வழக்கம் பற்றி இப்போதுள்ளபடியே ஆளுதலே முறையாம்.

உந்தி - கொப்பூழ். அளித்தல் - சிருட்டித்தல். உந்தியின உலகு அளித்தான் - (தன்) உந்தி (யாகிய தாமரை)யில் (பிரமனைத் தோன்றுவித்து அவனைக்கொண்டு) உலகத்தைப் படைத்தவன் - திருமால். (கக)

**12.** கற்றையஞ் சடையவன் கண்ணிற் காய்தலால்
இற்றவ னன்றுதொட் டின்று காறுந்தான்
நற்றவ மியற்றியவ் வநங்க னல்லுருப்
பெற்றன னாமெனப் பெயர்த்து மெண்ணுவாள்

கொண்டுகூட்டு: (சூர்ப்பநகை) பெயர்த்தும், 'கற்றையம் சடையவன் கண்ணிற் காய்தலால், இற்றவன் (ஆன) அவ் அநங்கன், அன்றுதொட்டு இன்றுகாறும், நல் தவம் இயற்றி நல் உருப் பெற்றனன் ஆம்' என்ன எண்ணுவாள்.

பொருள்: (இராமனை மன்மதனென் றெண்ணி மன்மதன் அல்லனெனத் தெளிந்த சூர்ப்பநகை,) திரும்பவும் (அம் மன்மதன் நினைவும், இராமன் அவனினும் அதிக அழகுடையவ னென்னும் நினைவும் தோன்றச்,) சிவன் நெற்றிக் கண்ணினால் எரித்ததனால், (எரிந்து சாம்பலாய் உருவம்) அழிந்தவனான மன்மதன், அழிந்த அந்நாள்முதல் இந்நாள்வரையும், நல்ல தவம் செய்து முன்னினும் நல்ல அழகுடைய வடிவத்தைப் பெற்றான் போலும்!' என்று எண்ணினாள்.

கற்றை - மயிர்த்தொகுதி. காய்தல் - எரித்தல். இறுதல் - முடிதல் - இறத்தல் - அழிதல். காறும் - அளவும். அநங்கன் - உருவில்லாதவன் - மன்மதன். அநங்கன் வடசொல்; ந + அங்க + அன்; ந - எதிர்மறை குறிப்பது; அங்கம் - உடம்பு. ஆம் - போலும். பெயர்த்தும் - திரும்பவும். (கஉ)

சூர்ப்பநகை இராமனது தோள் மார்பு முதலிய
அவயவங்களை நோக்கி மகிழ்தல்

[. சூர்ப்பநகை, இராமன் தோள்களுக்குக் கல்மலைகள் ஒப்பல்ல, நீலமலைகளே நிகராவன, மேருவும் பொன்மலை யாதலால் (நிற ஒப்புமை யின்மையால்) நேராகாது என்றும், அந்தத் தோள்களுக்கு இடையே விளங்கும் மார்பு கண்ணுக் கடங்காத பரப்புடைய தென்றும், வீரமும் அழகும் ஒருங்கு விளங்கும் அவன்

முகத்துக்குத் தாமரையும் சந்திரனும் (கலந்து ஒன்றயினும்) சமானமாகா வென்றும் எண்ணினுள். பூமிமீது புல் வளர்ந்து பொலிதல் இவன் திருவடி தீண்டப்பெற்று இன்பம் அடைந்த பூமிதேவியின் மயிர்ச்சிலிர்ப்பா மென்றெண்ணினுள். ]

இராமனுடைய தவவேடத்தில் ஈடுபடுதல்

**13.** எவன்செய வினியவிவ் வழகை யெய்தினேன்
அவஞ்செயத் திருவுடம் பலச நோற்கின்றான்
நவஞ்செயத் தகையவிந் நளின நாட்டத்தன்
தவஞ்செயத் தவஞ்செய்த தவமே னென்கின்றாள்

கொண்டுகூட்டு: 'இவ் இனிய அழகை எய்தினேன், எவன் செயத் திரு உடம்பு அலச அவம்செய நோற்கின்றான்? நவம் செயத் தகைய இந் நளின நாட்டத்தன் தவம் செய்ய, தவம் செய்ததவம் என்?' என்கின்றாள்.

பொருள்: '(தவத்தினுல் அடையக்கூடிய பயன்களெல்லா வற்றினும் சிறந்த) இந்த இனிமையான அழகை அடைந்த இவன், இவ் அழகை அடைதலினும் மிக்கதாக யாது செய்யக் கருதித் திருமேனி வருந்தத் தவஞ் செய்கின்றான்? இவன் தவம் செய்யும் படியான பாக்கியத்தைப் பெறும்படி தவம் செய்ததவம் யாது?' என்றெண்ணினுள்.

எவன் - யாது. அவம் - வீண். அவம் செய - (பொழுது அல்லது அழகு, அல்லது இரண்டும்) வீணகச் செய்ய; பாழ்படும்படி செய்ய. அலச - சோர்வுற - வாட. நோற்கின்றான் - தவம்செய்கின்றான். நவம் - புதுமை. செய்தல் - உண்டாக்கல். நளினம் - தாமரை. நாட்டம் - கண். நவம் செயத் தகைய இந் நளின நாட்டத்தன் - புதுமை (- ஆச்சரியம்) உண்டாக்கத்தக்க (அழகுடைய) இந்தத் தாமரைக்கண்ணன்.

இதன்முன் சூர்ப்பநகை இராமன் அழகை வியந்து, அழகிற் சிறந்த மன்மதன் தவஞ்செய்து அதிக அழகுடைய இராமனுனுனே வென்று ளென்றாள். இப்போது அவள் இராமன் தவம் செய்யும்படி, தவம் என்ன தவம் செய்தது என்று ளென்றாள். இவ்விரு கருத்துக்களும் மிகவும் இனிமை யானவை யென்பதும் இவற்றுள் முன்னையதினும் பின்னையது நுட்ப மிக்க தென்பதும் குறித்துக்கொள்ளத் தக்கன. வேறோரிடத்துச் சீதையைத் 'தவம்செய்த தவமாம் தையல்' என்பர். (கரு)

அவனது மேனி ஒளி கண்டு வியத்தல்

**14.** வாணிலை மருங்குலான் வயங்கு சோதியைக்
காணில னேகோலக் கதிரி னாயகன்
சேணெலாம் புல்லொளி செலுத்திச் சிந்தையில்
நாணலன் மீமிசை நடக்கின் றானென்றாள்

**கொண்டுகூட்டு:** *'அக் கதிரின் நாயகன், வாள்நிலை மருங்குலான் (மேனியின்) வயங்கு சோதியைக் காணிலன்கொல்! (அவன்) சிந்தையில் நாணலன், சேண் எல்லாம் புல் ஒளி செலுத்தி மீமிசை நடக்கின்றான்!' என்றாள்.*

**பொருள்:** *'சூரியன், இவன் திருமேனிக் காந்தியைக் கண்டிலன் போலும்! காணாததனாலன்றே, அவன், வெட்கப்படாமல் ஆகாயமெல்லாம் தன் அற்பமான ஒளியை வீசிக்கொண்டு, அந்த ஆகாயத்திலே (தாழ்ந்த இடத்திலே யன்றி) உயரத்திலே, (இறுமாப்போடு உலாப்) போகின்றான்!' என்றெண்ணினாள்.*

*வாள் நிலை மருங்குலான் - (இறுக்கிக் கட்டிய) உடைவாள் தங்கிய இடையையுடையான்(ஆன இராமன்). வயங்குதல் - பிரகாசித்தல். 'சூரியன் ஒளியையும் தன்னுள் அடக்கிக்கொள்ளுதலால் "வயங்கு சோதி" என்றாள். "வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறைய" என்றார் அயோத்தியாகாண்டத்தில்.'* — பு. ரா. க. *காணிலனேகொல் - பார்த்திலன்போலும். அ, உலகறிசுட்டு. கதிரின் நாயகன் - கதிரினை (- கிரணங்களை) யுடைய தலைவன் - சூரியன். சேண் - ஆகாயம். புல் - அற்பமான. நாணலன் முற்றெச்சம், வெட்கப்படாம லென்னும் பொருட்டு. மீ - ஆகாயம். மிசை - மேல். 'முச்சுடருள் மற்றை யிருசுடராகிய சந்திர அக்கினியர் போலப் பதினாறு ஏழு கிரணங்களையுடையனாகாமல், சூரியன் அவற்றிற்கெல்லாம் ஒளியைக் கொடுத்து வாங்கும் ஆயிரங் கிரணங்களை யுடைமையால் "கதிரின் நாயகன்" எனப்பட்டான்'*—வை. மு. கோ.

**பாட பேதம்:** *வாணிலா; காணலன்; நாணிலன்.* (கச)

'இவன் அணி வேண்டா அழகன்' எனல்

[ *அவள், 'இவன் பொன்னுடை பூண்டு மணிமுடி வனைந்து அரசாளாமல், மரவுரி உடுத்துச் சடைமுடி தரித்துத் தவம் செய்கின்றான்; பீதாம்பரமும் இரத்தின கிரீடமும், இராசாங்கமும் முறையே சீரையும், சடையும், தவமும் போல இவனை அடையத்*

தவஞ்செய்தில போலும்!' என்றும், 'மற்றையோர்க்கு அணி (-அழகு)செய்தலால் அணியெனப்பட்ட ஆபரணங்கள், அழகிற் சிறந்த இவனுக்கு அழகு செய்யுமோ? மணிகளுக்கெல்லாம் மேலான மணி அரசு, வேறு மணிகளினால் விளக்கமுறுமோ?' என்றும் எண்ணினாள். ]

'பிரமன் பழிப்புற்றான்' எனல்

**15.** கரந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பரந்தரு நான்முகன் பழிப்புற் றானரோ
இருந்தவ னிணையடிப் பொடியு மேற்கலாப்
புரந்தர னுலகெலாம் புரக்கின் றானென்றாள்

கொண்டுகூட்டு: 'இலக்கணம் (ஒன்றும்) கரந்திலன் (உலகுக்கு) எடுத்துக்காட்டிய பரம் தரு நான்முகன் பழிப்புற்றான்; இருந்தவன் இணை அடிப் பொடியும் ஏற்கலாத புரந்தரன் எல்லா உலகும் புரக்கின்றான்' என்றாள்.

பொருள்: 'சாமுத்திரிக நூலிற் கூறிய இராச லக்கணங்கள் ஒன்றும் ஒளித்திடாமல் (எல்லாம் விளங்கும்படியாக, அந்த இலக்கணங்களனைத்தும் ஒருவனிடத்தில் ஒருசேர உற்றதற்கு ஓர் உதாரணமாக உலகத்தோர்க்கு) எடுத்துக் காட்டும்படி இவனுடைய திருமேனியை உண்டாக்கிய பிரமதேவன் பழிப்படைந்து விட்டான்; (ஏதனாலென்றால், அந்த இலக்கணங்களுடைமையில்) இவன் காற்றூளும் பெறாத இந்திரன், எல்லா உலகங்களையும் காவல்செய்து அரசாள்கின்றான் (ஆக, அந்த இலக்கணங்கள் முற்றும் பெற்ற இவன் செல்வம் சிறிதுமின்றி யிருத்தலால் என்க)' என்றெண்ணினாள்.

கரத்தல் - ஒளித்தல். 'எடுத்துக்காட்டிய' என்பது ஒரு சொன்னீர்மைத்தாய்ச் செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய் 'எடுத்துக் காட்ட' என்னும்பொருட்டாய் நின்றது. பரம் - உடம்பு; தருதல் - உண்டாக்குதல்.—ந. அ. அரோ, அசை. இருந்தவன் - (இவ்வனத்தில்) இருந்தவன் (ஆகிய இராமன்); பெரிய தவசி (ஆகிய இராமன்). இருமை - பெருமை. இணை - இரண்டு; ஒப்பு. இணையடி - இரண்டு பாதங்கள்; வேறு ஒப்பின்றி ஒன்றுக்கு மற்றொன்றே ஒப்பான பாதங்கள். ஏற்கலா(த) - பெறாத. (ஏற்றன்று - பெற்றது.—பரிபா.) 'இரந்தவன்' என்று பாடங் கொண்டால்

மூன்றும் அடிக்கு(த் தவங்கிடந்து) வேண்டினும் இவனுடைய இரு (கால்களில் ஒரு) காலின் தாளு(ள் ஒன்றினுடைய ஒப்பு)ம் பெறுத' என்று பொருள் கொள்க.

பாட பேதம் : இரந்தவன். (கரு)

சூர்ப்பநகை உருமாறி வடிவழகியாகி இராமனைச் சந்தித்தல்

[ மேலே கூறியவாறு சூர்ப்பநகை, இராமனது ஒவ்வொரு அவயவத்தின் செவ்விய அமைப்பையும், சிறந்த வனப்பையும், முழுத் திருமேனியின் எழிற் பெருக்கையும் நினைந்து, அவன் பேரழகில் ஈடுபட்டு, அவன் மீது கொண்ட காமம், கடலைக்காட்டிலும் பெருக, அவள் கற்பு, கொடாத பொருளாளன் புகழ்போலக் குறைய, அவன் தோள்மீது பார்வையைச் செலுத்திப் பதித்தாள். பதித்தவள், பறிக்கமாட்டாதவளாகி, ' இவன் மார்பினைத் தழுவப் பெறேனேல், இன்னமுதுண்ணினும் என்னுயிர் தரியாது ; தழுவுதல் அல்லது சாதலன்றி வேறு கதி ஏதுமில்லை.' யென்று கருதி, அவன் எதிரே சென்று நிற்க எண்ணங் கொண்டாள். கொண்டவள், ' கோரப் பல்லோடுகூடிய குரூபமான இந்த இராட்சச வடிவைக் கண்டால் அருவருப்பா'னென் றெண்ணி, இலக்குமி மந்திரத்தைச் செபித்து மிகவும் அழகிய மானுடப் பெண் வடிவங் கொண்டாள். கொண்டு, மின் இறங்குவதுபோல, விண்ணிலிருந்து மண்ணில் இறங்கி, இராமன் இருந்த இடத்தை நோக்கிச் சென்றாள்.

இராமன், அவள் காற்சிலம்பொலி காதுள் நுழைய, இவ்வொலி ஒரு பெண்ணின் வரவை முன்னறிவிப்ப தென்று கருதி அவ்வொலி வரும் திசையை நோக்கினன். கடலினின்று வந்த அமுதம்போல விண்ணினின்று வந்த அமுதமென்று சொல்லும் படி வந்த அவளைக் கண்டான். கண்டு, ' இவ் வடிவம் மூவுலகத்துள் எவ்வுலகத்தும் இல்லாதது ! இவ் வடிவழகி யாவள்? இவளை ஒப்பார் எவருமில்லை'யென் றெண்ணிநிற்க, அவள் அவன் முன்பு சென்று, செங்கை கூப்பிச், சிறிது நாணங் காட்டிச், சற்றே முகங் கோட்டி, நேராகப் பாராமல் பக்கப் பார்வையாகப் பார்த்து நின்றாள்.

[இராமன், 'உன்வரவு நல்வரவாகுக, நீ வந்தது எங்கள் பாக்கியம். உன் ஊர் எது? பேர் யாது? உற்றார் யாவர்? உரை' என, அவள், 'யான் பிரமதேவரது பௌத்திரரான விச்சிரவசு முனிவரின் புத்திரி, சிவபெருமானுடைய தோழனை குபேரன் தங்கை; எட்டுத் திசையானைகளின் பலத்தைத் தொலைத்து வெள்ளிவெற்பினை வேரோடு பேர்த்த திரிலோகாதிபனை இராவணேசுரனுக்குப் பின்பிறந்தேன். காமவல்லி யென்னும் கன்னி' என்றாள். எனவே, இராமன், 'இவள் செயல் சீரியதாயில்லை' யென்று சிந்தித்து, ஐயங்கொண்ட நெஞ்சினனாய், 'இராவணன் இராக்கதன்: நீ அவன் தங்கையானால், உனக்கு இந்த உரு வந்த விதம் எந்த விதம்?' என்றான். அவள், 'யான் இராக்கதரோடு வாழும் வாழ்வை வெறுத்துத் தவஞ்செய்து இவ்வுருப் பெற்றேன்' என்றாள். அவன், மீளவும் கேள்வி கேட்பானாய், 'இந்திரனும் ஏவல் செய்யும் இராவணன் தங்கைக்குரிய செல்வச் சிறப்புடன் வராமல், தனியாக வந்த காரணம் யாது?' என்றான். அவள், 'யான் அந்தத் தீயாரோடு சேராமல் தேவர்களோடும் முனிவர்களோடும் சேர்ந்திருக்கின்றேன். இங்கே ஒரு காரியமாக உன்னைக் காணவந்தேன்' என்றாள். அவன், 'தெரிவையர் சிந்தை தெரிய அரியது, இவள் கருத்து நன்றன்று' என்று மனத்துள்ளே எண்ணி, 'என்னிடம் நீ வந்த காரியம் யாது? அது செய்யக்கூடியதானால், செய்து உதவுவேன்' என்றான். ]

### சூர்ப்பநகை தன் கருத்தை உரைத்தல்

தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப
தாமெனல் லாவ தன்று லருங்குல மகளிர்க் கம்மா
ஏமுறு முயிர்க்கு நோவே னென்செய்கேன் யாருமில்லேன்
காமனென் றொருவன் செய்யும் வன்மையைக் காத்தி யென்றாள்

கொண்டுகூட்டு: 'அருங் குலமகளிர்க்குத் தாம் உறு காமத்தன்மை தாங்களே உரைப்பது என்பது ஆம் எனல் ஆவது அன்று; ஏமுறும் உயிர்க்கு நோவேன்; என் செய்கேன்! யாரும் இல்லேன். காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக் காத்தி' என்றாள்.

பொருள்: 'மேன்மையான குடியிற் பிறந்த பெண்களாயுள்ளார்க்குத் தாங்கள் அடைந்த காமத்தின் இயல்பைத் தாங்களே வாய்விட்டுக் கூறுவது கூடுமென்பது (வார்த்தைமட்டில்

ஆவதே யன்றிக் காரியத்தில்) ஆவதன்று (அதாவது குலமாதர் தங்கள் காமத்தைத் தாங்களே வெளியிட்டுக் கூறக்கூடு மென்று சொல்லிவிடலாம், ஆனால் அது அவர்களால் ஒருகாலும் செய்ய முடியாத தென்றபடி); தான் கொண்ட காமத்தைத் தீர்க்கமாட்டாமையால் கலங்குகின்ற என் உயிர் படும் பாட்டுக்கு வருந்துகின்றேன்; (அதற்கு உதவிசெய்ய என்னால் இயலாமையால் யான் வருந்துவதன்றி வேறு) யாது செய்வேன்! எனக்குத் துணையாவார் யாரும் இல்லாதேன். (இருந்தால், அவரைக் கொண்டு என் காமத்தைச் சொல்லச் செய்திருப்பேன்; இல்லாமையால் யானே சொல்லக் கடவேனானேன்). மன்மத னென்று சொல்லப்பட்ட மாபாவி ஒருவன் செய்யும் கொடுமையை அவன் செய்யாமல் தடுப்பாயாக' என்று சூர்ப்பநகை சொன்னாள்.

ஆம் - கூடும். 'ஆமெனல் ஆவது அன்று' என்பதற்குத் 'தக்கது எனல் தக்கதன்று' அதாவது 'தக்கதன்று' என்பது முந்திய உரைகள். ஆல், அசை. அருங் குலமகளிர் என்பதில் அருமை, மேன்மைப் பொருட்டு. அம்மா, வியப்பிடைச் சொல். ஏமுறல், ஏமம் உறல் என்பதன் விகாரம். ஏமம் - கலக்கம். காமம் உறல் காமுறலென வழங்குதல் காண்க. வன்மை - வன்கண்மை - கொடுமை. 'யாருமில்லேன் என்செய்கேன்' என மாற்றி 'யாருமில்லாத யான் (என் காமத்தை யானே சொல்லாது) வேறு யாது செய்வேன்' என்று முந்திய உரைகாரர்(—வை. மு. கோ.) பொருள் கூறியிருப்பது காண்க. காத்தி - தடுப்பாயாக. 'செல்லிடத்துக் காப்பான்' என்ற குறளிற் போலக் 'காத்தல்' தடுத்தற்பொருள் குறித்தது.

சூர்ப்பநகை, முடிவில், தன் காமத்தைத் தான் கூறுந் துணிவுடையாளாதலால், 'உரைத்த லாகா' தென இயல்பாகவும் சுருக்கமாகவும் கூறாமல், 'உரைப்பதென்பது ஆமெனல் ஆவதன்றால்' எனத் தங்கித்தங்கித் தாமதமாக நீட்டிக் கூறினா ளென்க. குலமாதர் தம் காமத்தைத் தாம் கூறமாட்டாரென்ற முகவுரையால், அவள், தன் காமத்தைத் தான் கூறப்போவதைக் குறிப்பாக உணர்த்தி, அதனை யேற்க இராமன் மனத்தைச் சித்தப்படுத்தி, அவ்வாறு கூறுவது தகாத செயலென அவன் எண்ணாதபடி செய்ய முயன்று, 'ஏமுறும் உயிர்க்கு நோவேன், என்செய்கேன்! யாரும் இல்லேன்' என்றதனால் அத் தகாத செயல்செய்தற்குச் சமாதானங் கூறினாளென உய்த்துணர வைத்தார். (கசு)

[ மேலே கூறியவாறு சூர்ப்பநகை சொல்லக்கேட்ட இராமன், 'இவள் நாணம் இல்லாள், நல்லாளும் அல்லள்' என்றெண்ணி

வாய்பேசாமல் மௌனமாகச் சும்மா இருந்தான். அவள், அவன் உள்ளக் கருத்தை உணராளாய்த், தன் காம நோயை அறிந்து அருள் செய்ய எண் [illegible] ), அருளாது மறுக்க எண் [illegible] என்ற சந்தேகத்தினால் ஊசலாடி உழையும் உளத்தினளாய், மீளவும் தன் கருத்தை வேறுவகையாக வெளியிட்டு விளம்பலுற்றாள். ]

எழுதரு மேனி யாயீண் டெய்திய தறிந்தி லாதேன்
முழுதுணர் முனிவ ரேவற் செய்தொழின் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மை யோடு மிளமையும் பயனின் றேகப்
பொழுதொடு நாளும் வாளா கழிந்தன போலு மென்றாள்

கொண்டுகூட்டு : 'எழுத அரும் மேனியாய்! (நீ) ஈண்டு எய்தியது அறிந்திலாதேன். முழுதும் உணர் முனிவர் ஏவல் செய் தொழில் முறையின் முற்றிப், பழுது அறு பெண்மையோடு இளமையும் பயன் இன்று ஏகப், பொழுதொடு நாளும் வாளா கழிந்தன' என்றாள்.

பொருள் : 'சித்திரத்தில் எழுத வொண்ணாத திருமேனியுடையானே! நீ இங்கே வந்திருப்பதைத் தெரிந்தேனில்லை. அதனால் முற்றும் உணர்ந்த முனிவர்களுக்குக் குற்றேவல் செய்யும் பணியை முறைப்படி செய்துமுடித்துக்கொண் டிருந்ததனால், எனது பெண்ணலமும் யௌவன பருவமும் பயன் படாமற் போக, என்னுடைய ஆயுள் நாள்கள் எல்லாம் வீணே கழிந்தன' என்றாள்.

எழுதல் - (சித்திரத்தில்) எழுதுதல் - சித்திரித்தல். முற்றி - முடித்து. முற்ற என்பது முற்றியெனத் திரிந்து நின்றது, 'சொற்றிரி யினும்பொருள் திரியா வினைக்குறை'. பழுது - குற்றம். பெண்மை - பெண் தன்மை ; 'தாக்கணங்கும் ஆண் அவாம் பெண்மை' என்பதிற் போலப் பெண்ணலம் என்னும் பொருள் குறித்தது. இன்று, இன்றி யென்பதன் விகாரம். பொழுது, நாளின் பகுதிகளாகிய சிறுபொழுதுகளைக் குறித்தது.

மாலை, யாமம், வைகறை, எற்படு
காலை, வெங்கதிர் காயும் நண்பக லெனக்
கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்.

ஒரு நாளை ஆறு பாகங்களாக வகுத்துச் சிறுபொழுது ஆறு வகைப்படுமெனக் கூறுவாரு முளர். வாளா - வீணாக. போலும், ஒப்பில்போலி,

'எழுதரு மேனியாய்' என்றதுபோல வாலிவதைப் படலத்தில் 'ஓவியத் தெழுத வொண்ணு உருவத்தாய்' என்று வருதல் காண்க.

ஒரு நாளுக் கொருமுறை இன்பம் நுகர்தலோ டமையாது, ஒவ்வொரு நாளும் அதனதன் பகுதிகளாகிய சிறு பொழுதுகள் அறுபொழுதுகளினும் இன்பம் அநுபவியாமல், வாணாள் வீணாளாய்க் கழிந்தன வென்னும் கருத்தை உட்கொண்டு, சூர்ப்பநகை, 'நாள்கள் வாளா கழிந்தன' என்னாது, 'பொழு தொடு நாளும் வாளா கழிந்தன' என்றா ளென்க. (கஎ)

[ இவ்வாறு சூர்ப்பநகை சொல்ல, இராமன், அந்த இராட்சசி நீதி நெறியில் நில்லாதவள் என்றெண்ணி, 'நீ அந்தணர் குலத்தில் அவதரித்தவள்; நான் சத்திரிய சாதியிற் சனித்தவன்; ஆதலால் உன் விருப்பப்படி செய்தல் சாதிமுறைக்குத் தகாது' என்றான். அவள், 'என் தந்தை அந்தணனாயினும், என் தாய் அரசாண்ட அரக்க அரசர் குலத்திற் பிறந்தவள்; ஆதலால் நமது சேர்க்கை சாதிமுறைக்குப் பொருந்தியதே. நீ இணங்காயானால் இறக்கத் துணிந்திருந்தேன். இதன்முன், சாதிதான் தடையாகச் சம்மதியா திருந்தா யென்றால், இப்போது, அது நீங்கிவிட்டதனால், இனி, யான் உன் அருள்பெற்று என் உயிரை இறவாமல் வாழ்ந்து காண்பேன்' என்றாள்.

ஆசையையுடைய அவள் அவ்வாறு கூறக்கேட்டு, இராமன், 'எவ்வாறாகவும் இராக்கதரோடு மானுடர் சம்பந்தம் செய்தல் தகா தென்று சான்றோர் சாற்றுவர்' என்றான். அவள், தன்னை இராவ ணன் தங்கை யென்று கூறியது தவறு என்று எண்ணி, 'யான் தேவரைப் பூசித்து, இழிவான இராக்கதப் பிறவி நீங்கி, இவ்வுரு எய்தினே னென்று முன்னேயே சொன்னேனே!' என்றாள். அவன், 'உன் தமையன்மாருள் ஒருவனே, உலக மூன்றுக்கும் ஒரே தலைவ னாக உள்ளான்; மற்றொருவனே, திக்குப் பாலகனான குபேரன்: அவர்கள் கொடுத்தால் உன்னைக் கொள்வேன். தனியளாயுள்ள உன்னை வேறு யாருமில்லாத தனியிடத்தில் சந்தித்ததற்கே அவ் ஆற்றல்மிக்கார் யாதுசெய்வரோ வென்று அஞ்சுகின்றேன்' என்றான். அவள், 'கடவுள் கருணைகூர்ந்து கூட்டக், காதலிருவர் கருத்தொத்துக் கலக்கின்ற கந்தருவ மணமென்ப தொன்றுண் டன்றோ! அந்த மணத்தை நாம் அநுட்டித்தோமானால், அது ஆனபின் அதனை அண்ணன்மார் ஆதரத்தோடு அங்கீகரிப்பார்கள்.

அந்த மணத்தினால் ஆகும் நன்மைகள் அனந்தம். நீயோ, தனியளாய்த், தவசியாய் இருக்கின்றாய். அவர்களோ, தவசிகளோடு சாலப் பழம் பகைமை படைத்தவர்கள். அவர்கள் உன்னோடு உறவாவதற்கு இது ஏற்ற உபாயம். இதனால் அவர்கள் மண்ணுலகன்றி விண்ணுலகையும் உன்னுடைய ஆட்சிக்கு உள்ளாக்கி நீ இட்ட கட்டளைகளை இயற்றுவாராவார்' என்றாள். ]

## இராமன் அவளைப் பரிகசித்தல்

நிருதர்த மருளும் பெற்றே னின்னலம் பெற்றே னின்னே
டொருவருஞ் செல்வத் தியாண்டு முறையவும் பெற்றே னென்றே
திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்த தென்னா
வரிசிலை வடித்த தோளான் வாளெயி றிலங்க நக்கான்

கொண்டுகூட்டு : 'நிருதர்தம் அருளும் பெற்றேன். நின் நலம் பெற்றேன். ஒருவரும் செல்வத்து யாண்டும் நின்னோடு உறையவும் பெற்றேன். திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய் தவம் பயந்தது ஒன்றோ?' என்னா, வரிசிலை வடித்த தோளான் வாள் எயிறு இலங்க நக்கான்.

பொருள் : 'ஆ! ஆ! அரக்கருடைய அருளையும் பெற்றேன். உன்னுடைய இன்பத்தையும் உற்றேன். இவையல்லாமல் நிலையான செல்வ வாழ்க்கையில் எந்தக் காலமும் உன்னோடு கூடி வாழவும் பெற்றேன். அயோத்தியை அகன்ற பின்பு நான் செய்த தவம் தந்த பயன் ஒன்றோ! (பலவா யிருக்கின்றன!)' என்று சொல்லி, இராமன் ஒளியுள்ள பற்கள் வெளியில் விளங்கச் நான்.

நலம் - இன்பம். ஒருவரும் - நீங்கரிய - நீங்குதல் இல்லாத - நிலையான. யாண்டும் - எக்காலமும். ஒன்றோ - ஒன்றுதானே. திருநகர், அயோத்தியைக் குறித்தது. தீர்ந்த - நீங்கிய. பயந்தது - தந்தது - தந்தபயன். என்னா - என்று சொல்லி. வரிதல் - கட்டுதல். வரிசிலை - கட்டமைந்த வில். வடித்த - வசமாக்கிய. வரிசிலை வடித்த தோளான் - கட்டமைந்த வில்லைத் தன் வசமாக்கிய தோளான் - வில் லேந்திய தோளான். வாள் - ஒளி. எயிறு - பல். நக்கான் - சிரித்தான். 'ஒன்றோ பயந்தது' என்றும் 'பயந்தது ஒன்றோ' என்றும் பொருத்திப் பொருள்கொள்ளல் பொருந்தும்.

பாட பேதம் : வரிசிலை பிடித்த தோளான். (கஅ)

### அவ்வமையம் பன்னசாலையினின்று சீதை இராமனிடம் வர, சூர்ப்பநகை திகைத்தல்

மருவொன்று கூந்த லாளை வனத்திவன் கொண்டு வாரான்
உருவிங்கி துடைய ராக மற்றையோர் யாரு மில்லை
அரவிந்த மலரு ணீங்கி யடியிணை படியிற் றோயத்
திருவிங்கு வருவாள் கொல்லோ வென்றுளந் திகைத்து நின்றாள்

கொண்டுகூட்டு: *'மரு ஒன்று கூந்தலாளை இவன் வனத்துக்குக் கொண்டு வாரான். இது உரு உடையராக மற்றையோர் யாரும் இங்கு இல்லை. திரு, அரவிந்த மலருள் நீங்கி, அடியிணை படியில் தோய, இங்கு வருவாள்கொல்லோ ?' என்று உள்ளம் திகைத்து நின்றாள்.*

பொருள்: ***'மனையாளை இவன் கடுமையான காட்டுக்கு அழைத்து வந்திருக்கமாட்டான். இந்த வடிவழகுடையவராக வேறு எந்த மாதரும் இந்த வனத்தில் இல்லை. (இவள் இலக்குமியே யென்றெண்ணும்படி எழில் மிக்காளா யிருக்கின்றாள்.) இலக்குமி, தாமரை மலரைவிட்டு நீங்கிக் கால்களிரண்டும் பூமியிற் படிய நடந்து, இந்த வனத்துக்கு வருவாளோ? (வரக் காரண மில்லையே!)' என்று நினைந்து சிந்தை மயங்கி நின்றாள்.***

*மரு - வாசனை. ஒன்றுதல் - பொருந்துதல். இது உரு உடையராக மற்றையோர் யாரும் இங்கு இல்லை யெனக் கூட்டுக. இது உரு - இந்த வடிவு. 'இதுபொழுது காத்திலையேல் எமக்கிறுதி யின்றேயாம்' எனக் காஞ்சிப்புராணத்தில், இதுபொழுது இந்தப்பொழுது என்று பொருள்பட, வருதல் காண்க. மலருள் நீங்கி - மலரினின்று நீங்கி. ஏழன் உருபு ஐந்தன் உருபுப் பொருளில் வந்த உருபுமயக்கம். 'யாதன் உருபிற் கூறிற் றாயினும் - பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்.' படி - பூமி.*

*இதற்கு முந்திய பாட்டிற் சீதையைச் சூர்ப்பநகை 'கண்ணிற் கண்டாள்' என்றதனால் சீதையின் திருமேனிக் காட்சி சூர்ப்பநகை கண்ணுக்குப் புலனானதென்று கூறியவர், இந்தப் பாட்டில் 'மரு ஒன்று கூந்தலாள்' என்றதனால், சீதையினது கூந்தலின் மணம் சூர்ப்பநகை மூக்குக்குப் புலனானதை உய்த்துணரவைத்தார் போலும்.*

*பொதுவாகப் பெண்ணைக் குறிக்கும் 'மரு ஒன்று கூந்தலாள்' என்ற சொற்றொடரைச் சிறப்பாக மனையாளைத் தெற்றெனப் புலப்படுத்தும்படி சந்தர்ப்பச் சார்புபற்றிப் பிரயோகித்திருக்கும் சாதுரியமான கவிநுணுக்கம்*

இங்கே கூந்தல் மணம், 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் கவியிற் கூறப்படும் இயற்கை மணமாகவாயினும், சூட்டப்பெற்ற மலர்களினின்று கொண்ட செயற்கை மணமாகவாயினும், இவ் விருவகை மணங்களும் கலந்த மணமாகவாயினும் கொள்ளும்படி யிருத்தல் காண்க.

'அடியிணை படியில் தோய' என்றது தெய்வங்களின் பாதங்கள் பூமி யிற் படிதலில்லை யென்பதுபற்றிக் கூறியது.

'உலகத்துள்ள வனப்புக்கள் அனைத்துக்கும் உறைவிடமாக வுள்ள எந்தத் தெய்வத்தின் மந்திரத்தைச் சிறிதுமுன்பு செபித்து இந்தப் பேரழகு வாய்ந்த பெண்ணுருப் பெற்றிருக்கின்றேனோ, அந்த மகாலக்குமியே இவ ளென் றெண்ணுகின்றேன்; ஆயின், மென்மையான பூவின்மீது வீற்றிருக் கும் அந்தத் தேவி, வன்மையான பூமியின்கண்ணே வருவாளா? வரினும், தெய்வங்களுக் கியற்கையான ஆகாய சஞ்சாரத்தை அகலவிட்டுப் பாதங்கள் பார்மீது படிய வருவாளா? வாராள்: இவள் மனையாளு மல்லள், மலர் மகளு மல்லள்: மற்று யாவளென்று தெரியகில்லே'னென்று சிந்தை திகைத்து நின்றாள் சூர்ப்பநகை யென்க.

பாட பேதம்: திருவிங்கு வந்த தென்னோ. (கக)

சூர்ப்பநகை சீதையின் அழகில் ஈடுபடல்

**20.** பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங் கழகிற் கெல்லை யில்லையா மென்ன நின்றாள்
கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனி னஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்றா லென்படும் பிறருக் கென்றாள்

கொண்டுகூட்டு: பண்பு உற நெடிது நோக்கிப், 'படைக்குநர் சிறுமை யல்லால், எண்பிறங்கு அழகிற்கு எல்லை இல்லை என்ன நின்றாள். (இவளைக்) கண்ட பெண் பிறந்தேனுக்குக் கண் பிற பொருளிற் செல்லா! கருத்து எனின் அஃதே! என்றால், பிறருக்கு (அவை) என்படும்!' என்றாள்.

பொருள்: சூர்ப்பநகை, சீதையின் அழகை, அதன் பண்பு (கண்ணினுங் கருத்தினும்) பொருந்தும்படி, நெடுநேரம் நோக்கிப் பெருவியப்புற்று, '(மிக்க அழகுடைய பொருள்களைக் காட்டும் சித்திரங்களோ, சிலைகளோ, கவிகளோ, எவையும் பூரண அழ குடையவைகளாகக் காணப்படவில்லை; அவைகள் குறைந்த அழ குடையவைகளா யிருத்தற்குக் காரணம் அவைகளை) ஆக்கி யோரின் திறமைக் குறைவே யன்றி அழகுக்கு(க் குறைவில்லை,

அதற்குக் குறைவில்லை யென்பானேன்,) எல்லையே யில்லை (என்று இவள்பாற் கண்டேன். இவள் அழகு, பார்க்கப் பார்க்க வளர்வ தாய், எவ்வளவுநேரம் பார்த்தாலும் முழுதுங் காணமுடியாமல் எல்லையில்லாததா யிருக்கின்றது.)' என்றெண்ணி நின்றாள். நின்றவள், 'இவளைப் பார்த்த பெண்ணாய்ப் பிறந்த எனக்கே, கண்கள் இவளைவிட்டு வேறு பொருள்கள்மேற் செல்லமாட்டா! மனமோ வென்றால் அதுவும் அத்தன்மையதே! என்றால், இவ ளைக் கண்ட ஆண்மக்களுக்கு (அவர்கள் கண்ணும் மனமும்) என்ன தன்மையுறும்!' என்று கருதினாள்.

(பண்பு, சீதையின் அழகின் பண்பைக் குறித்தது; எவ்வாறெனின்,) இப்பாட்டில் 'நோக்கி' என்ற வினைக்கு, முன்பின் தொடர்ச்சியால், 'சூர்ப்பநகை' தோன்றாக் கர்த்தாவா யிருத்தல் போலச் 'சீதையின் அழகு' தோன்றாச் செயப்படுபொருளா யிருக்கின்றது. பண்பு - குணம் - தன்மை. உற - பொருந்த. நெடிது - நெடுநேரம். உறநோக்கி - (கண்ணினும் கருத்தி னும்) பொருந்தப் பார்த்து. அநுமான் இராம லக்குமணர்களை (அவர்கள் வடிவு தன் கண்ணினுங் கருத்தினும் பொருந்திப் பதிய)ப் பார்த்ததை அநுமப் படலத்தில் கக-ம் கவியில் 'எய்த நோக்கி' என்றது போல, இங்கே 'உற நோக்கி' என்றார். படைக்குநர் - சிருட்டிப்போர். அடுத்த பாட்டிற் கடவுளருள்ளே சிருட்டிகனை 'கமலத்துக் கடவுள்தானே' என்ற தனால், இந்தப் பாட்டிற் 'படைக்குநர்' என்பது மக்களுள்ளே சிருட்டிக ரான சித்திரிகர் முதலாயினோரைக் குறிப்பதாகக் கொள்ளப்பட்டது. நீதி நெறிவெண்பாவில், 'கலைமகள் வாழ்க்கை' என்ற பாட்டில், கவிஞர், சிருட்டி கர்த்தாக்களாகப், பிரமனோடு உவமிக்கப்பட்டிருத்தல் காண்க. சிறுமை - குறைவு. அல்லால் - அல்லாமல். எண் - மனம். பிறங்கல் - விளங்கல். எண் பிறங்கு அழகு - (கண்வழிச் சென்று) மனத்துள் விளங்கும் வனப்பு. ஆம், அசை. அஃது, 'பிற பொருளிற் செல்லா' என்ற சொற்றொடர் நிற்றற் குரிய இடத்து அச் சொற்றொடர்ப் பொருள் தந்து நின்றது. 'அது' என் பது இவ்வாறு பொருள்படும்படி நாலடியாரில் 'எனதெனதென்றிருக்கும்' என்ற வெண்பாவில் 'யானும் அதனை அது' என்ற ஈற்றடியில் வருதல் காண்க. 'பெண்ணாகப் பிறந்தேன்' என்பதை விளக்கங் குன்றாமல் நயம் படச் சுருக்கிப் 'பெண் பிறந்தேன்' என்றார். இதுபோல, 'ஆணாகப் பிறந்த' என்பது, 'ஆண் பிறந்த' எனத் திருவடி தொழுத படலத்தில், 'மாண்பிறந்தமைந்த' என்ற எ0-ம் பாட்டில், வருதல் காண்க. 'என்படும்' என்பதற்கு முந்திய உரைகாரரொருவர் (—வை. மு. கோ.) 'என்னபாடு

படும்' என்று பொருள் கூறியிருக்கிறார். அப் பொருள் இவ்விடத்துக்குப் பொருந்துமாயினும், கம்பர் 'என்படும்' என்பதனாற் பல இடங்களிற் குறிக்கும் பொருள் 'எத் தன்மையுறும்' என்பதாமெனை இந் நூல் 4-ம் பாட்டுரையில் மேற்கோள் காட்டிக் கூறியிருத்தல் காண்க. முந்திய பாட்டில் எந்தப் பெண்ணையும் குறிக்கும் 'மருவொன்று கூந்தலாள்' என்பது மனையாளைக் குறித்தல்போல, இந்தப் பாட்டில் ஆண்மக்கள் பெண்மக்கள் ஆகிய இருபாலாருக்கும் பொதுவான 'பிறர்' என்ற சொல் ஆண்மக்களை மட்டும் குறிக்கின்றது. 'பிறர்' என்றதனால் மோனையை நிரப்பி அது இவ்வாறு பொருள்படும்படி பிரயோகித்திருக்கிற கவிசாதுரியம் கருதுதற்குரியது.

இங்கே சூர்ப்பநகை சீதையின் அழகை நெடிது நோக்கி 'அழகிற்கு எல்லையில்லை' யென்றது, க. ரா. சா. மிதிலைக் காட்சிப் படலத்தில் 90-ம் பாட்டில் சீதையின் அழகைப்பற்றிக் கூறிய 'கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார்' என்றதனோடு கருத தொத்திருத்தல் காண்க.

சீதையின் அழகு இந்தக் கவியிற் சிறப்பித்துக் கூறப்பட்டிருத்தல் போல, எம்மொழியினும் உள்ள எந் நூலினும், இந் நூலிலேயே வேறெவ்விடத்தினும், பெண்ணழகு சிறப்பிக்கப்படவில்லை யென்று செப்பலாம். 'பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறும்' என்று கம்பருக்கு முன்னவரான திருத்தக்கதேவரும், பின்னவர்களுள்ளே 'தாக்கணங்கும் ஆண் அவாம்' என்று குமரகுருபரரும், 'பெண்ணுக்குப் பெண் மோகங் கொள்ளும்' என்று திரிகூடராசப்பக் கவிராசரும் கூறியவற்றினும் மேலாக ஒரு பெண்ணின் அழகை மேம்படுத்துக் கூறுதல் எத்துணைச் சிறப்புடைய கவிஞருக்கும் இயலாததா மென்றால், அது மிகைபடக்கூற லாகாது. எவரும் இதனை மறுக்க முற்படார்: முற்படுவா ருளராயின், அவர், மேற்கூறிய, கருத்தொத்த மூன்று கவிப் பகுதிகளினும் சிறப்பாகப் பெண்ணழகை விசேடிக்கும் கவிப்பகுதியையோ கவியையோ காட்டக் கடவாராவார். இக் கவி அக்கவிப் பகுதிகளின் கருத்தையே துணையாகக்கொண்டு சீதையின் அழகை விதந்து கூறியிருக்கவும், இது, அவைகளினும் சிறந்த தென்றது எவ்வாறென்றால், அது வருமாறு:

எம் மொழிகளினும் உள்ள செய்யுள் வடிவமான எந்த நூலினும் விரிந்த வியாசபாரதம் இதிகாசமேயன்றி இராமாயணம் போலக் காவியமு மன்று மென்பதை நினைவு கூர்ந்தால், கம்பராமாயணம், உலக மகாகாவியங்களுள் அளவில் ஐயமின்றிப் பெரிதானது; அழகினும் முதன்மையானது; என்று பன்மொழிப் பனுவல்கள் பல பயின்ற பண்டிதரால் சீர்தூக்கி, ஒப்பு நோக்கி, ஆராய்ந்து, தெளிந்து செப்பப்பெற்ற, ஒப்புயர்வற்ற, திப்பிய, மொப்பரும் காப்பியமாம். இத்தகைய மேம்பாடு மிக்க கம்பராமாயணம்

ஒருங்கே காவிய நயமும் நாடக நயமும் இனிதமைந்து நனிசிறந்திருத்தலை நன்காராய்ந்த ஆங்கில திராவிட வாணர், கம்பர், இராமனை மும்மூர்த்திகளுள் ஒருவரும் தனித்து ஒவ்வார், மூவரும் ஒன்றுசேர்ந்தால் ஒப்பாரென்றதுபோல, அவரை ஆங்கிலத்தில் காவிய மகாகவியாகிய மில்ட்டனும் நாடக மகாகவியாகிய ஷேக்ஸ்பீயரும், தனித்தனி நிகர்க்கார், ஒன்றுசேர்ந்து நிகர்வா ரென்பார்.

ஒரு முழு வயிரப் பெருமலை, எங்கும் தனக்குரிய வெள்ளிய தெள்ளிய வியனொளி வீசுதலே.யன்றிப், பலபல பாகங்களிலும் மாணிக்கம் மரகதம் நீலம் முதலிய பன்மணிப் பன்னிற இன்னொளிகளும் வீசினாற்போலக், கம்பராமாயணம், எங்கும் காவிய காம்பீரியம் இனிது நிரம்பி யிருத்தலல்லாமல், பல பகுதிகளினும் நானுவித நாடக நயம் கலந்து எல்லாவகையினும் சிறந்த இனிமைகள் நிறைந்திருக்கின்றது. காவியத்துக்குரிய சிறப்புக் குன்றுமல் நாடகரசம் நனி நிரம்பியிருத்தல் பற்றியே, அதி மதிநுட்பமும் அரும் பெரும் பாண்டித்தியமும் ஒருங்கு நிரம்பிய உத்தம வித்துவான், ரசிகசிகாமணி, வியாக்கியான சக்கரவர்த்தி, 'தனிசுலோகி' என்னும் வான்மீகத் தனிச்சுலோக மாபாடிய நூலாசிரியர் பெரியவாச்சான் பிள்ளை, கம்பராமாயணத்தைப்பற்றிக் கூற நேர்ந்த அமையங்களில் அதனைக் கம்ப காவிய மென்னது கம்பநாடக மென்பர்.

இவ்வாறாக, மாப்பெரும் காப்பிய மாநாடகம் எனற்குரிய கம்பராமாயணத்தில், சூர்ப்பநகைப் படலம், கம்பர், தம் கவித்திறத்தைச் சிறப்பாகக் காட்டச் செய்த பாகங்களுள் ஒன்று. வான்மீகத்திலிருந்து கம்பர் இந்தப் படலத்துக்கு ஆதாரமாக எடுத்துக்கொண்ட தெல்லாம், 'இராவணன் தங்கை இராமனைக் கண்டாள், மோகங் கொண்டாள், மூக்கறுப்புண்டாள்' என்பதே. இதை அடிப்படையாகக் கொண்டு சூர்ப்பநகைப் படலமாகிய நாடக மாளிகை, எல்லா அழகுகளுக்கும் இருப்பிடமாக இனிதமைக்கப் பெற்றிருக்கின்றது.

இந்த நாடகத்தில், சூர்ப்பநகை, 'ஆடவர் பெண்மை அவாவுதோளின' னைப் அளவற்ற அழகுடையானை இராமனைக் கண்டு, மோகத்தில் முழுகி, அவன் இசைவு பெறவேண்டிப் பரபரப்புடன் அவனோடு உரையாடுகின்றாள். அந்த அமையத்தில், (ஆந்தை போன்ற அழகில்லாப் பொருள் கிடக்க,) அன்னம் போன்ற அழகுடைப் பொருள் ஏதேனும் எதிர்ப்பட்டால், பார்த்தும் பாராதவளாய்ப், பார்த்த பார்வையைப் பார்த்த மாத்திரையே மீட்டு இராமன்மாட்டுத் திருப்பிச் செலுத்துவாளா யிருக்கின்றாள். அப்படியிருக்கின்றவள், சீதை வரக் காண்கின்றாள். கண்ட அளவிற் சீதையின் பேரழகைப் பிண்டமாக நோக்கி, 'இந்தப் பேரழகி இந்தப் பேரழகனுக்

கேற்றவளா யிருத்தலால், இவள் இவன் இல்லாளோ, இல்லாளல்லாளேல் இலக்குமியேயோ, அவளும் அல்லாளேல் வேறெவளோ!' என்று திகைக்கின் ருள். பின்பு, முன் பிண்டமாகப் பார்த்த சீதையின் பேரழகு, 'இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு' அவள் நெஞ்சைக் கவர, அந்த அழகை நுணுக்கமாக நோக்குவாளாகின்ருள். ஆகவே, இராமனும் இராமன்மீது வைத்த காமமும் கருத்தைவிட்டுக் கழன்று நழுவி யொழியச், சீதையின் அழகை நெடுநேரம் நெஞ்சமூழ்ந்த நோக்கிக், கழிபெரிய களிபெருக, வச மிழந்து, மனமயங்கி, நினைவிறந்து நிற்கின்ருள். சிறிது சென்று நினைவு திரும்ப, 'இவளைவிட்டு என் "கண் பிற பொருளிற் செல்லா; கருத் தெனின், அஃதே: கண்ட — பெண் பிறந்தேனுக் கென்ருல், என்படும் பிறருக்கு!"' என்று எண்ணுகின்ருள்.

'பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறும்' என்பது முதலிய மேற் கூறிய மூன்று விசேடணங்களாற் சிறப்பிக்கப்பெற்ற பெண்களை மோகிக் கும் பெண்களாகக் கூறப்பட்ட பெண்கள், பொதுவாகப் பெண்க ளெனப் பட்டாரே யன்றிச், சிறப்பாகச் சூர்ப்பநகை போல, ஒப்புயர்வற்ற அழ குடைய ஆடவர்மீது — அவரை அணையப்பெறவில்லையாஞல் அமுதம் அருந்தினும் ஆவி பிரிந்திடு மென்னும்படியான—அளவற்ற ஆசை பூண்ட பெண்க ளெனப்பட்டிலர்; ஆதலால், சீதையின் அழகைக் கம்பர் இந்த இடத்திற் சிறப்பித்துக் கூறியதுபோலப், பெண்ணழகை எந்தக் கவியும் எந்த இடத்திலும் கூறக் காணவில்லை, கூறியிருப்பதாகக் கேட்கவுமில்லை; இனிமேலும் எவரேனும் கூறக்கூடுமென்று எண்ணவுங் கூடவில்லை.

இந்த இனிய கவியில், சீதையின் அழகில் சூர்ப்பநகை தான் ஈடுபட்ட தைத் தனக்குத்தானே, மனத்துக்குள்ளே கூறிக்கொண்டா ளென்பதும், மாரீசன் வதைப் படலத்தில் 'என்வயின்' என்பது முதலாகத் 'தேர்தந்த' என் பது இறுதியாக வரும் தங்கிகரில் பன்னிரு கவிகளில், அவள் இராவண னுக்குச் சீதைமீது மோகமூளத் திறமைமிக்க சூழ்ச்சியுடன் சீதையின் அழ கைச் சிறப்பித்துக் கூறிஞ ளென்பதும் குறித்துக்கொள்ளற் குரியன. (உ0)

### சூர்ப்பநகை இராம சீதையரை நோக்கி வியப்படைதல்

**21.** பொருதிறத் தானை நோக்கிப் பூவையை நோக்கி நின்ருள்
கருதமற் றினிவே றில்லை கமலத்துக் கடவு டானே
ஒருதிறத் துணர நோக்கி யுருவினுக் குலக மூன்றின்
இருதிறத் தார்க்குஞ் செய்த வரம்பிவ ரிருவ ரேன்ருள்

கொண்டுகூட்டு : (சூர்ப்பநகை) பொரு திறத்தானை நோக்கி, பூவையை நோக்கி நின்றாள். 'கருத இனி வேறு (யாரும்) இல்லை; கமலத்துக் கடவுளே, ஒருதிறத்தால் உணர நோக்கி, மூன்று உலகின் இரு திறத்தார்க்கும் உருவினுக்கு வரம்பு (ஆகச்) செய்த(வர்) இவர் இருவர்' என்றாள்.

பொருள் : (சீதையைப் பார்த்து இராமனை மறந்திருந்த சூர்ப்பநகை, அவன்நினைவு திரும்பிவர அவளைப் பார்த்தலை விட்டு) அவனைப் (பார்ப்பாளாகி, அவனை முன்போலக் காமக் கருத்தோடு பாராமல், அவன் அழகை அழகின்பொருட்டே பார்க்கும் விருப்பொடு) பார்த்து, (அவ்வாறே) அவளையும் (முன்போலப் பெண்ணுக்குப் பெண் மோகங்கொண்டு பார்க்கும் பார்வையின்றி, அழகை அழகுக்கே பார்க்கும் ஆசையோடு) பார்த்து, (இதுவரையறியாத, இணையின்றி உயர்ந்த, ஆணழகு பெண்ணழகு இரண்டையும் இனிது சுவைத்து இன்புறுவாளாய்) நின்றாள். (இருவகை அழகையும் ஆசைதீர அநுபவித்து) '(ஆணழகுக்கு அவனே, பெண்ணழகுக்கு இவளே, அன்றிக்) கருதுதற்கு இனி வேறு யாரும் சிறந்த உதாரணமாக இல்லை; (இதன் முன், இவளுடைய அழகுமட்டும் சம்பந்தமாக, யான் கருதிய சித்திரிகராதி மனிதச் சிருட்டிகர் கிடக்க, தெய்வச் சிருட்டிகனை) பிரமனே, ("உத்தம லக்கணமுடைய ஓர் ஆண்மகனையும் ஒரு பெண்மகளையும் படைப்பேனாக" என்று சங்கற்பஞ்செய்து, தான் உலகத்தைப் படைக்கத் தொடங்கிய காலந்தொட்டு இவர்களைப் படைக்கத் துவக்கிய காலமட்டும் படைத்துப் படைத்துப் பழகித் தேர்ந்த அநுபவ முதிர்ச்சியால் அடைந்த) ஒப்பற்ற சாமர்த்தியத்தால் (ஒவ்வோர் உறுப்பையும் இவ்விவ்வாறு செய்யவேண்டுமென்று) தெரிந்து கொள்ள ஆலோசனை செய்து, மூன்றுலகத்திலுமுள்ள ஆண்பாலார் பெண்பாலா ராகிய இருவகையாருக்கும் வடிவழகுக்கு முடிவெல்லையாகச் சிருட்டிக்கப்பட்டவர் இவ்விருவர்' என்றெண்ணினாள்.

பொருதல் - போர்செய்தல். திறம் - வலிமை. பூவை - நாகணவாய்ப் பறவை(யின் சொற்போலும் இனிய சொல்லுடைய சீதை). மற்று, அசை. ஒரு - ஒப்பற்ற. திறம் - திறமை - சாமர்த்தியம். திறத்து என்பதில் ஆல் உருபு தொக்கது. நோக்கி - நினைந்து.—பரிபா., ஐங்குறு.; ஆலோசித்து(ப் பார்த்து). உரு - வடிவு.—பரிபா., உடம்பு—இ. அ. திறம் - விதம்—ஐங்குறு., - வகை. செய்யுளாதலால் 'வரம்பாகச் செய்தவ' ரெனற்பாலது

'செய்த வரம்பு' எனப்பட்டது. செய்த(வர்) - செய்யப்பட்டவர். 'கருதமற் றினிவேறில்லை' என்பதை 'இருவர்' என்பதன் பின்பு இயைத்து, 'இவர்கள் இவ்வளவு அழகு வாய்ந்தவரா யிருத்தற்குக் காரணம், இப்படிப்பட்ட இருவரைச் சிருட்டிக்கவேண்டு மென்று பிரமன் சிருட்டித்தா னென்பதே: இதன்மேல் வேறு (ஏற்ற காரணம் யாதும்) கருதுதற் குரியதில்லை' யென்று பொருள்கொள்ளலும் பொருந்தும்.

சூர்ப்பநகை, ஆணழகில் ஒப்பும் உயர்வும் இல்லாத இராமனையும், அவ்வாறே பெண்ணழகில் ஈடும் எடுப்பும் இன்றிய சீதையையும், தனித் தனியாக மாறிமாறிப் பார்த்தும், ஒருசேரப் பார்த்தும், ஒருவருக்கொருவர் ஒத்த உருவப் பொருத்தமுடைமையாற் சரிஇணையான சமசோடியாய், இனி தியைந்த இரட்டையரா யிலங்கும் இனிய காட்சியைக் கண்ணுங் கருத்துங் குளிரக் கண்டு, கழிபெருங்களி மிகுந்து, அந்தக் காட்சிக்கு மூலகாரணனான பிரமனை நினைந்து, 'அவன் அழகிய ஆடவர் மகளி ரனைவரினுஞ் சிறந்த அழகுடைய நம்பி ஒருத்தனையும் நங்கை ஒருத்தியையும் உண்டாக்கக் கருதித், தான் முன்படைத்த அழகிற் சிறந்தா ரொவ்வொருவர் பால் "ஒன்றொன்றே விரும்பற் கொத்த"தா யிருந்த தனித்தனி வனப்புக்களனைத்தையும் சேரத் திரட்டிச் சிருட்டித்த இரட்டையர் இவ்விருவ' ரென் றெண்ணினா ளென்பதாம்.

சூர்ப்பநகை, இணைந்திருந்த சீதாராம தம்பதிகளை வியக்கும் இக் கவி, சுக்கிரீவன், ஒன்றுசேர்ந்திருந்த இராம லக்குமண சகோதரரை வியக்கும் இரண்டு கவிகளை நினைவுகூரச் செய்கின்றது. அவ் இருகவிகளும் இவ் ஒரு கவியோடு சேர்த்து நோக்குதற்கு ஏற்ற சிறப்புடையவைகளா யிருத்தலால், அவைகளைத் தருகின்றேன் :

> நோக்கினான்; நெடிது நின்றான்; நொடிவரும் கமலத் தண்ணல்
> ஆக்கிய உலக மெல்லாம் அன்றுதொட் டின்று காறும்
> பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்திரு படிவ மாகி,
> மேக்குயர் தடந்தோள் பெற்று, வீரராய் விளைந்த! என்பான்
>
> தேறினன் அமரர்க் கெல்லாம் தேவராம் தேவரன்றே,
> மாறிஇப் பிறப்பில் வந்தார், மானுட ராகி மன்னோ!
> ஆறுகொள் சடிலத் தானும் அயனுமென் றிவர்க ளாதி
> வேறுள குழுவை யெல்லாம் மானுடம் வென்ற தன்றே!
>
> — நட்புக்கோட் படலம் கஅ, கக. (உக)

## சூர்ப்பநகை சீதையை அரக்கி எனல்

[ மேற்கூறியவாறு சூர்ப்பநகை, தன்னை மறந்து, இராம சீதையர் இருவரழகிலும் ஈடுபட்டு, இறும்பூதெய்தி யிருந்தபோது,

அவளுக்குத் தன் நினைவு வர, அந்நினைவை அடுத்து இராமனை மோகித்த முன் நினைவும் வர, அம் முன் நினைவுக்குச் சீதை இடையூறா யிருக்கின்றா ளென்ற வெந்நினைவு தோன்ற, அவளை விரும்பிடலற்று, வெறுத்திடலுற்று, 'இவள், இவன் இல்லா ளில்லை; என்னைப்போல இவனை மோகித்து இடையே வந்தவள்; இவளை இவன் இழக்கச் செய்வேன்' என்று மனத்துள் நினைத்து, இராமனை நோக்கி, 'இங்குவந்த இவள் இராட்சசி: இறைச்சி தின்பவள்: இவள் வடிவம் இயல்பானதன்று; மாயமானது: இவளைக் காண யான் அஞ்சுகின்றேன்: துரத்துவாயாக' என்று (தன் இயலையும் செயலையும் சீதைமேலேற்றிக் கூறித், தான் துரத்துண்ணற்பாலளா யிருக்க, அவளைத் துரத்தச்) சொன்னாள். இராமன், 'உன் அறிவு நன்று. உண்மையை அறியவொட்டாமல் ஒளிக்கவல்லாருளரோ? உன் நல்லுரையால் உன் நல்லுள்ளம் நன்கு விளங்கியது. இந்தக் கள்ள அரக்கியைச் செவ்வையாகப் பார்!' என்று சிரித்தான். அப்போது, சீதை இராமனை அணுகக் கண்டு, சூர்ப்பநகை சினந்து, 'அடீ! நீ எங்களுக்கு இடையே எப்படி வருவாய்?' என்று அதட்டினாள். அவள் தமையன் இராவணன் வெள்ளி வெற்பை வேரோ டசைக்க, மெய்ந் நடுங்கி வெருவி, அம்பிகை அரனை ஆலிங்கனஞ் செய்துகொண்டது போலவும், மேகம் இடிக்கக் கேட்ட குழந்தை பயந்து தாயைக் கட்டிக்கொள்ளுதல் போலவும், சானகி அஞ்சித் தாசரதியைத் தழுவிக்கொண்டாள்.]

இராமன் சீதையுடன் பன்னசாலை புகுதல்

[ அப்போது, அரக்கரோடு தொடங்குவது, விளையாட்டானாலும், துன்பமாய் முடியுமென்று இராமன் உணர்ந்து, சூர்ப்பநகையை நோக்கித், 'துன்பமான காரியம் ஒன்றும் செய்யாதொழிவாயாக; உன் தன்மையை என் தம்பி அறிந்தாற் கோபிப்பான்' என்றான். அவள், 'மலரில் வாழும் மறையோனும், வாரியுள் வைகும் மாயோனும், மலைமிசை வதியும் மழுவோனும், மன்மதனும், மற்றைத் தேவர்கள் யாவரும் என்னை அடையத் தவஞ் செய்கின்றார்கள். அப்படிப்பட்ட என்னை இந்தக் கள்ளிமேலுள்ள காதலால் எள்ளுவாயாயினும். இது ஏற்றதன்று' என்றாள். அவன், 'இவளோடு இனிப் பேசலாகா' தென்று சீதையுடன் பன்னசாலையுள்ளே, மின்னினோடு மேகம் புகுந்தாற் போலப், போனான். ]

### சூர்ப்பநகையின் விரகவேதனை

[ இராமன் மறையவே, சூர்ப்பநகை, உணர்வோடு உயிரும் ஒருவிஞ ளென்னும்படி, உயிர்ப்படங்கி ஒடுங்கி நின்றாள். பின்பு, ஒருவாறு தேறி, அவனை அடையும் உபாயத்தை ஆராய்ந்து கொண்டு அப்பாற் போனாள். செங்கதிரோன் மேற்றிசையிற் செல்லச் செவ்வானம் திகழ்ந்தது. சிறிதுபொழுது சென்று திங்கள் உதயஞ்செய்தது. தாடகை மார்பில் தாசரதி சரம் தைத்தது போலச், சூர்ப்பநகை நெஞ்சில் அநங்கன் அம்புகள் அழுந்த, விடமேறல் போல விரகமேற, வெருண்டு வருந்தினாள். மோகத் தீ மூண்டு வளருமாறு, திங்கள் நிலவெறிக்கத், தெண் கடல் அலையொலிக்கத், தென்றல் வீச, அன்றில் கூவ, அவள் விரகவேதனை மிகுந்து, 'மோகத்துக்கோர் முடிவு முண்டாங் கொலோ!' என்று, 'ஆவி ஒயினும் ஆசையின் ஓய்விலாள்' ஆய், இரவு முழுதும் வருந்தியிருந்தாள், ]

### சூர்ப்பநகையின் சூழ்ச்சி

[ பூமியில், எங்கும் பரந்த இராக்கதரை ஒழிக்க இராமன் தோன்றியது போல, இருளை அகற்றச் சூரியன் தோன்றினான்.

இரவோடு தன் காமமும் ஒருவாறு விடிய, விடியலைக் கண்ட தனால், தன் உடம்பைவிட்டு ஏகலுற்ற உயிர் மீளலுற்றிடக் கண்ட சூர்ப்பநகை, 'இராமனை எய்தும் உபாயம் எதுவென எண்ணி னேன். அது, இரவுள்ள வரையும் விரக மேலீட்டால் விளங்கா திருந்தது; விடியல் வர, விரகங் குறையலுற்றபோது, விளங்குவ தாயிற்று. அது இதுவே. அவள் அவன் அருகிருக்கு மளவும் அவன் என்னைப் பாரான். அவளைத் தூக்கிக்கொண்டுபோய் ஓரிடத்தில் ஒளித்து வைத்துவிட்டு அவனோடு வாழ்வேன். அந்த வாழ்வே வாழ்வு, மற்ற வாழ்வு மாள்வே' என் றெண்ணினாள். ]

### இலக்குமணன் சூர்ப்பநகையை அங்கபங்கம் செய்தல்

[ அவ்வா றெண்ணியவள், இராமன் இருப்பிடத்தை எய்தி, அவன் ஆற்றங்கரையில் அமர்ந்து சந்தியாவந்தனம் செய்து கொண்டிருக்கக் கண்டனள் : தம்பி, சாலையிலிருந்த சானகியைச்

சோலையிலிருந்து காவல் காத்தலைக் கண்டிலள். 'தனியே யிருக்கின்றாள்; சமயம் வாய்த்தது; தாமதஞ்செய்த லாகாது' என்று எண்ணி, விரைந்துசென்று, சீதையைத் தூக்கிக்கொண்டுபோகத் தொடர்ந்தாள். அதைச் சோலையிலிருந்து காவல்செய்துகொண்டிருந்தவன் கண்டு, முடுகி வந்து, பெண் கொலை கூடாதென்றெண்ணி, உயிரைக் கொல்லாமல் உறுப்பைக் குறைக்க உன்னிக், கூந்தலைப் பற்றிக்கொண்டு, வயிற்றிலுதைத்து, வாளை யெடுத்தான். அதை அவள் கண்டு கோபங்கொண்டு, அவனைத் தூக்கிக்கொண்டு விண்ணிற் செல்ல எண்ணி எடுக்கத் தொடங்க, அவன் அவளை எளிதாக (அலட்சியமாய் அநாயாசமாக)க் கீழே தள்ளிக் கையிற் பிடித்திருந்த கத்தியினால் காதையும் மூக்கையும் களைந்து, கடுத்த சினத்தை விடுத்துப் பிடித்த கூந்தலையும் விடுத்தான். அவள் கதறி யலறிக் கடுங்கூச்சலிட்டாள்.

இலக்குமணன் சூர்ப்பநகையை உறுப்பறுத்து வடுப்படுத்தியது, இராமன் இராவணனைத் தலையறுத்தற்கு நாட்செய்தது போன்றது. இரத்தம் பொழியும் அவள் கறுத்த உடம்பு, சோரி மாரி சொரியும் கார்மேகத்துக் கொப்பாய் அரக்க ரழிவை முன்னறிவிக்கும் துன்னிமித்தம் போன்றது. ]

சூர்ப்பநகை வேதனையால் வர்தனைப்படல்

உயரும் விண்ணிடை மண்ணிடை விழுங்கிடந் துழைக்கும்
அயருங் கைகுலைத் தலமரு மாருயிர் சோரும்
பெயரும் பெண்பிறந் தேன்பட்ட பிழையெனப் பிதற்றும்
துயரு மஞ்சிமுன் றொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள்

கொண்டுகூட்டு: துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள் (சூர்ப்பநகை), விண் இடை உயரும்; மண் இடை விழும்; கிடந்து உழைக்கும்; அயரும்; கை குலைத்து அலமரும்; ஆருயிர் சோரும்; பெயரும்; 'பெண் பிறந்தேன் பட்ட பிழை (என்னே!)' எனப் பிதற்றும்.

பொருள்: (தேவர் முதலியோர் அணுக அஞ்சியதுபோலத்) துன்பமென்பதும் பயந்து கிட்டவந்திலாத பழமையான இராக்கதக் குடும்பத்திலே பிறந்த சூர்ப்பநகை, புண்ணின் வலியால் விண்ணில் எழுவாள்; மண்ணில் விழுவாள்; படுத்துக்கிடந்து

வருந்துவாள் ; உணர் வழிவாள் ; வேதனை பொறுக்கமாட்டாமல் கைகளை விரித்தசைத்து மனஞ் சுழல்வாள் ; உயிர்சோர்வாள் ; சோர்தலுற்ற உயிர் மீள்தலுறுவாள் ; 'பெண்ணாகப் பிறந்த யான் பட்ட சிறுமை என்னே!' என்று பல முறை குளறிக் கூறுவாள் ஆனாள்.

உழைத்தல் - வருந்தல். அயர்தல் - உணர்வு அழிதல்—ந. அ. குலேத் தல் - அசைத்தல் — ந. அ. அலமரல் - மனம் சுழலல். ஆருயிர் - அருமை யான உயிர். சோர்தல் - தளாதல். பெயர்தல் - மீளுதல் — ஐங்குறு., புறப். வெண். மாலை. பிழை - சிறுமை — ந. அ. 'பிழை' யென்பது, (சூர்ப்பநகை துன்பமிகுதியால்) முடியும் சொல் கூறப்பெறாததாய், முடிவு பெறுதற்கு 'என்னே' என்னும் சொல்லை அவாவி நின்றது. பிதற்றல், மயக்க

அங்கபங்கமும் அதனால் அடைந்த வெட்கமும் உடையார் செயல்கள் இக் கவியில் விவரித்துக் கூறப்பட்டன. பெருந்துயரால் வருந்துவார் செயல்களை அடுக்கிக் கூறும் காட்சிப் படலக் கவியை இது நினைவுறுத்து கின்றது. அது வருமாறு:

> விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல் வெருவல்
> எழுதல் ஏங்குதல் இரங்குதல் இராமனை யெண்ணித்
> தொழுதல் சோருதல் துளங்குதல் துயருழந் துயிர்த்தல்
> அழுத லன்றிமற் றயலொன்றும் செய்குவ தறியாள்

'துயரும் அஞ்சி' என்ற ஈற்றடி இனிய கவித்திறத்தைக் காட்டுவது. அதில், செய்வான் தன்மை (- கர்த்திருத்துவம்) இல்லாத 'துயர்', அஃ துடையது போல, வியப்பும் நயப்பும் விளையக் கூறப்பட்டிருக்கின்றது.

இராவணன்மட்டும் துன்ப மறியாதவனன்று. அவன் அவனுடன் பிறந்தாராகியவர்களுடைய தற்காலத்திய குடும்பங்களிலுள்ளா ரெல்லா ரோடு அவனுடைய முற்காலத்திய பல தலைமுறைக் குடும்பத்தின ரனைவரும் துன்பமறியாதவ ரென்பது குறிக்க, அவனுடைய குடிக்குத் 'தொல்' என்னும் அடைகொடுத்துத் 'தொல்குடி' என்றார்.

உயிரோடு முடிந்துவிடுகின்ற உயிரிழத்தற் றுன்பத்திலுங் கொடியதாய் நெடியதாய் வருத்தும் மானமிழத்தற் றுன்பம், துன்பமே யறியாத தொல் குடிப் பிறந்த சூர்ப்பநகைக்கு, எத்துணை வருத்தம் விளைக்கு மென்பதை உய்த்துணரவைத்தார்.

இங்கே துன்பமறியாத சூர்ப்பநகை மிகவும் துன்புற்று ளென்பதை உணர்த்துமாறு 'துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள்' என, நெடுங்காலமாக உள்ள பழமையான அவள் குடும்பத்தாரொரு வரும் துன்பமறியாரென்ற நயமும், வாலிவதைப் படலத்தில், இராமனின் அம்புபட்டு இறக்கும் நிலையிலிருந்த வாலியைக் காணுமுன், துன்ப மென்ப தின்னதென் றறிந்திராத அவன் மகன் அங்கதன் கொடுந் துன்பமுற்று னென்பது குறிக்க, அவன் 'இடருடை உள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்' எனத், துன்பமுள்ளவர்களென்று சொல்லப்படுகிறவர்கள் எத்தன்மையரா யிருப்பாரென்று தெரிய முயன்று சிந்தித்துப் பார்த்தாலும் தெரியமாட்டாத சிறுபிள்ளையா யிருந்தா னென்ற நயமும், ஆகிய இருவகை நயங்களும் ஒருசேரவைத்து, ஒன்றுக்கொன்றுள்ள ஒற்றுமை வேற்றுமை களை ஒப்பிட்டு நோக்கி, ஓர்ந்து உணர்ந்து உவத்தற்குரியன.

பாட பேதம்: பெண்பிறந் தியான் பட்டபழி. (உஉ)

### சூர்ப்பநகை சுற்றத்தாரைக் கூவி அழுதல்

[ சூர்ப்பநகை, செந்நீர் சிந்தும் செவியையும் நாசியையும் சேலை கொண் டொற்றினள்; நெடுமூச்செறிந்தாள்; நிலத்தில் அறைந்தாள்; தனக்கு உற்ற குற்றத்தை நோக்கச் சுற்றத்தாரைக் கூவியழைப்பாளாயினள்:

'மழுவெடுத்த கறைமிடற்றன் மலையெடுத்த மலையே! அட்ட திக்கும் உற்று அட்டபாலரை* அடர்த்து வெற்றிபெற்ற வீரனே! எட்டுத் திக்கு யானைகள் முட்டிப்பாயப் பறிப்பொண்ணாது முறிப் புண்ட மருப்புக்கள் பதக்கம்போல அழகுசெய்யும் பார மார் பானே! அண்ணவோ! அண்ணவோ! இங்கே வாராயோ! என் நோவைப் பாராயோ! உன் ஆணைக்குள்ளடங்கிய உலகத்திலே, சிலையேந்தித் திரிகின்ற சிறுமனிதர் செய்த தீங்கினால், யான் நொந்து வருந்துவதை நீ வந்து பாராயோ; உன்னாற் புறங்காக்கப் பெற்றுள்ள என்னை இவர்கள் இவ்வாறு செய்ததனால், புலி பின்னே யிருக்கப் புலிக்குட்டி பிடிபடாதென்று பூமியில் வழங்கும் பொய்யாமொழி பொய்ம்மொழியாய்ப் போயிற்றே! இந்திரன் முதலோர் ஏவல்செய்ய வேத்தவையில் வீற்றிருக்கும் உன் சமுகத்தில் மூக்கறையும் காதறையுமான யான் முகங்காட்டுவ தெவ்வாறு?

* அட்டபாலர் - எட்டுக் காவலர்.

'தேவசேனையைச் செயித்து, இந்திரனை இறுகப் பிணித்துக் கொணர்ந்து, இலங்கையிற் சிறையிலிட்டு, இந்திரசித்தென்னும் பேரும் பிரசித்தியும் பெற்ற மருகோனே! என் வருத்தத்தைக் காண நீயேனும் வாராயோ!

'என் கூக்குரலைத் தூரத்துள்ள சுற்றத்தார் கேட்கவில்லை யானாலும் பக்கத்துள்ள கரனே! நீயேனும் கேட்டு யான் படும் பாட்டைப் பார்க்க வாராயோ! நீ யிருக்கும் வனத்தில் எனக்கு இந்தக் கதி நேரலாமோ!' ]

இராமன் அவள் பங்கமுற்றதை அறிதல்

[ அவ்வாறு சூர்ப்பநகை இரைந்து கரைந்து உருண்டு புரண்டு கொண்டிருக்கும்போது, இராமன் செபத்தை முடித்துவிட்டுத் திரும்பிவந்தான்.

அவள், அவனை நோக்கி, 'உன்பால் யான் வைத்த அன்பால் எனக்கு நேர்ந்த கதியைப் பார்!' என்று, எதிரே ஏங்கி வீழ்ந்து அலறிக் கதறி அழுதாள். அவன், 'இவள் ஏதோ தீங்கு செய்திருக்கிறாள்: அதற்காக, இளையோனே இவள் செவியையும் நாசியையும் சேதித்திருக்கின்றான்' என்று தெரிந்துகொண்டு, அவளை, 'ஆர் நீ?' என்றான். அவள், 'என்னை அறியாயோ! பகையென்ற பெயரும் இல்லையாம்படி கண்டு, மூன்றுலகத்தையும் தன் அடிப் படுத்துத் தனியரசாளும் தசமுகனுக்குத் தங்கை' என்றாள். 'எதற்காக இங்கே வந்தாய்?' எனக், 'காம வெம்பிணிக்கு மா மருந்தே! யான் நேற்று வந்தேனில்லையோ?' என்றாள். 'திருமகளென உருவுகொண்டு நேற்று வந்தவர் நீர்தாமோ?' என, 'மூக்கையும் காதையும் போக்கிவிட்டால், ஆர்க்குத்தான் அழகு அழியாதிருக்கும்?' என்றாள்.

இராமன் இலக்குமணனை நோக்கி, 'இவளை இவ்வாறுசெய்ய, இவள் இழைத்த பிழை யாது?' என, இளையவன், 'தின்ன எண்ணியோ, வேறென்ன உன்னியோ சீதையைத் தூக்கச் சினத்தோடு தொடர்ந்தாள்' என்றான். ]

சூர்ப்பநகை தன் தீச் செயலைச் சாதுரியமாய் மறைத்தல்

**23.** ஏற்றவளை வரிசிலையோ னியம்பாமு னிகலரக்கி
சேற்றவளை தன்கணவ னருகிருப்பச் சினந்திருகிச்
சூற்றவளை நீருழக்குந் துறைகெழுநீர் வளநாடா
மாற்றவளைக் கண்டக்கா லழலாதோ மனமென்றாள்

கொண்டுகூட்டு : *(கையில்) ஏற்ற வளை(ந்த) வரி சிலையோன் (இலக்கு மணன்) இயம்பா முன், இகல் அரக்கி, 'சேற்ற(தாய)வளை தன் கணவன் அருகு இருப்ப(க் கண்டு), சூல் தவளை, சினம் திருகி நீர் உழக்கும் துறை கெழுநீர் வளநாடா! மாற்றவளைக் கண்டக்கால் மனம் அழலாதோ?' என்றாள்.*

பொருள் : *இலக்குமணன் கூறப்புகுந்ததைக் கூறிமுடிக்கு முன்பு, சூர்ப்பநகை, 'சங்கு ஒன்று தன் கணவன் ஆகிய ஆண் தவளையின் அருகே யிருக்கக் கண்டு, கருவுற்றிருந்த பெண் தவளை கோபத்தால் மாறுபாடு கொண்டு நீரைக் கலக்குகின்ற வளத்தை யுடைய நாட்டினனே! சக்களத்தியைப் பார்த்தால், மனம் பொறாமையால் கொதியாதோ?' என்று சொன்னாள்.*

*ஏற்ற - எடுத்த.*—சிந்தா., 1979. *வரி - கட்டு. ஏற்ற வளை வரி சிலை யோன் - கையில் ஏந்திய வளைந்த கட்டமைந்த வில்லையுடையோன் (ஆன இலக்குமணன்). 'ஏற்ற' என்பதற்குத் தகுதியான என்றும், (நாண்) ஏற்ற என்றும் பொருள் கூறலாம். இகல் அரக்கி - பகைமையயுடைய இராட்சசி; பகைக்கின்ற இராட்சசி (ஆன சூர்ப்பநகை). சேற்ற, சேறு என்னும் பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; சேற்றினிடத்த (தாகிய) என்னும் பொருட்டு. வளை - சங்கு. திருகல் - முறுகல் (-கடுமைபடல்; முதிர்தல்); வேறுபடல்.* — சிலப். *சினந்திருகி - கோபம் முதிர்ந்து; கோபத்தினால் (மனம்) வேறுபட்டு. சூல் - கருப்பம். உழக்கல் - கலக்கல். துறை : நீர்த்துறை. கெழுதல் - பொருந்துதல். மாற்றவள் - சக்களத்தி. கண்டக்கால் - கண்டால். அழலல் - எரிதல்; காந்துதல்; கோபங் கொள்ளல்; பொறாமைகொள்ளல்.*—த. அ.

*சூர்ப்பநகை, 'தான் இராமனைக் கொழுநனாகக் கொள்ளுதற்கு மிக்க விருப்பங்கொண்ட மாத்திரத்தால் தன்னை அவனுக்குரிய மனைவியாகப் பாவித்து அவ் வுறவுமுறைமையால் அவன் மனைவியான சீதையைத் தனக் குச் சக்களத்தியாகத் துணிந்து அதுபற்றி அவள்மீது பகைமை கொண்டு அவளைத் துரத்திவிடத் தொடர்ந்ததாகக் காரணம் விவரித்துக்கூறின ளென்பது தெளிவாம்'.*—வை. மு. கோ.

'இச் செய்யுள் திரிபு என்னும் சொல்லணியா யமைந்ததாதலானும், ஓரடியிற் கூறியவாறு மற்றோரடியிலும் பொருள்கூறுதல் மரபன்றென்றும், அங்ஙனங் கூறினால் கவிசமத்காரம் கெடுமென்றும் கூறுவராதலானும், சேல் + தவளை எனப் பிரித்து மூன்றும் அடியில் வந்த தவளை யென்பதற்குள்ள பொருளையே கூறுதல் சிறப்பன்றெனக் கொள்க. "பெண்ணறி வென்பது பெரும்பே தமைத்து" ஆதலால் தன் கணவனருகில் தன்இனத்தினுந் தாழ்ந்த ஈரறிவுயிரான சங்கு இயல்பிலிருத்தலை நோக்கியும் பெண் தவளை மனம்பொறாது இங்ஙனம் சினந்ததென்க.'—மு. ரா. க.

' "பகுத்தறிவிற் குறைவுபட்டதான தோர் அஃறிணை யுயிராகிய தவளை யானது தான் சூல்கொண்டு கலவிக்குரியதல்லாத நிலைமையிலிருந்தும் தன் கணவன்பால் அயற்பெண்பா லிருத்தலை நோக்கிப் பிணங்கும் நாட்டிலுள்ள வனான நீ, என்போன்ற விவேகிகள் கலவிக் குரிய பருவத்திற் கணவனருகில் மாற்றா ளிருத்தலை நோக்கி மனம்பொறாது அம் மாற்றாளுக்குக் கேடு சூழக் கருதல் இயல்பே என்பதை அறிதற்குரியாய்" என்பாள், இங்ஙனம் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற நாட்டுவர்ணனை கூறி ஸ்ரீ ராமபிரானை விளித்தாள்.' — மு. ரா. க.

உரையால் நளன்போலவும் உருவத்தால் வேறொருவன்போலவும் தோன்றின நளனை நளனெனத் தெளியமாட்டாது திகைத்த அவன் மாமன் வீமன் அவனை நோக்கிக் கூறியதாக நளவெண்பாவில் உள்ள ஒரு பாட்டு, இந்தப் பாட்டுப் போலச் சந்தர்ப்பத்துக்குத் தக்க நாட்டுவருணனையுடையதாதலால், இதனோடு அது ஒப்பிட்டு நோக்குதற்குரியது. 'பூகத்தின் பாளையை நாகத்தின் படமென்று குரங்கு மயங்கித் தெளியாதிருக்கின்ற திருநாடா! உன்னை ஒளியாமல் உன் உண்மை யுருவத்தைக் காட்டுவாயாக' என்னுங் கருத்துடைய அப்பாட்டு வருமாறு :

> பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
> ஐந்தலையின் பாளைதனை ஐயுற்று—மந்தி
> தெளியா திருக்குந் திருநாடா! உன்னை
> ஒளியாது காட்டுன் உரு. (உ௫)

## சூர்ப்பநகை நயமும் பயமும் காட்டி மன்றாடல்

[ சூர்ப்பநகை சொன்னதைக் கேட்டு, இராமன், கடுஞ்சினங் கொண்டு, 'அதர்ம யுத்தஞ் செய்யும் அரக்கரை இரக்கமின்றி அடியோ டழிக்கச் சங்கற்பஞ்செய்துகொண்டு இங்கு வந்திருக்கின்றோம். இன்னமும் கொடுஞ்சொற் கூறுவாயானால், கொன்றிடுவோம். இவ் வனத்தைவிட்டு உடனே உயிர்தப்பி ஓடிப்போ!'

'ன.' அவள் மறுமொழி கூறலானாள்: 'நான்முகன் முதலிய மூவாத தேவாதிபர், எனக்கு மூத்த இராவணனுக்கு இறை யிறுக்குங் குடிகளா யிருக்கின்றார்கள். ஆதலால் நீ கூறுவது உன் நன்மைக் கன்று. நான் உனக்குத் தனித்து உரைத்தற்குரிய உறுதி யுரை ஒன்று உள்ளது. உன் நன்மையை உணரும் உணர் வுடையா யானால், அதனை அறைகின்றேன், கேள். தசமுகனார் தாட்சணிய மற்றவர். "உமது தங்கை மூக்கரியுண்டா" ளென்று மொழிவாரை நாக்கரியும் பழிகாரர். யாதொரு பிழையும் இழை யாது உற்றதுரைப்பார் கதியே இதுவாயின், உங்கள் கதியை உரைக்கவேண்டுமோ? அவர் கோபம் உங்கள் உயிரோடும் ஒழியுமோ? ஒழியாது: உங்கள் உற்றா ருறவினராயுள்ளா ருயிர் கள் ஒன்றும் ஒழியா தொழித்தே ஒழியும்! நீங்கள் என் முகத் தின் மூக்கரிந்தீரல்லீர், உங்கள் குலத்தின் முதலரிந்தீர்கள்! உங்கள் உயிர் உய்யுமாறு உண்டோ? இல்லை. நீங்கள் கொல்லப் படுவது திண்ணம். ஐயோ! உங்கள் அருமந்த அழகை, அங் கணத்திற் கவிழ்த்த ஆரமுதம் போலப், பாழடையச் செய்து விட்டீர்களே!

'பூதலத்தும் பாதலத்தும் மீதலத்தும் உள்ள அரசர் முதலிய அனைவரும் அரக்கர்பெருமானுக்கு அஞ்சி நடுங்கி, அடங்கி ஒடுங்கி யிருக்கின்றார்கள். அவர் சினந்தால், அவர்கள் தங்கள் தங்கள் தலைகளைத் தப்பவைப்பதே சாத்தியமன்று. அவர்கள் உங்களுக்கு அரணாதல் எங்ஙனம்? அவர்களை அடைக்கலம் அடைவதால் ஆவது யாவதுமில்லை. உங்களைக் காக்கவல்லார் வேறு ஒருவரும் இலர். யான் ஒருத்தியே உள்ளேன். என் உயிரை மன்மதன் போக்காமல் நீங்கள் காத்தால், உங்கள் உயிரை இராவணனார் நீக்காமல் நான் காப்பேன். அல்லாவிட்டால், எனக்குக் காலன் காமன். உங்களுக்கு இராவணனார் இருக்கின்றார்.

'கற்புடைமகளிர் தம்பெருமையைத் தாம் கூறார். ஆயினும், காதல் காரணமான கழிபே ரன்பால், என் பெருமையை யான் இயம்புகின்றேன். "இவள் அமரர் அனைவரினும் ஆற்றல் மிகுத்த அரக்கர்கோன் தங்கையாள். வல்லவர் எல்லவருக்கும் வல்லவ' ளென்று இளையவனுக்கு இசைப்பாயாக. அவன் அங்கபங்கஞ் செய்ய, யான் அடங்கி யிருந்தது, ஆற்றற்குறைவா லன்று,

அன்பின் மிகுதியா லென்று அவனுக்கு அறிவிப்பாயாக். உங்களைப் போரிற் புறங்காப்பேன். வானிற் சுமந்து செல்வேன். இறைச்சி போலும் இனிய கனிகள் எங்கிருந்தும் கொண்டுவந்து ஈவேன். வேறு எப்பொருள் வேண்டினும் அப்பொருளை அளிப்பேன். இவ்வளவு வன்மையுடைய என்னை வெறுத்து மென்மையுடைய இவளை விரும்புதலால் நன்மை யாது?

'குடியின் மாண்பு, வடிவின் மேன்மை, மதியின் கூர்மை, இளமையின் சீர்மை முதலான எந்தச் சிறப்பிலும் என்னைப் போல இந்த உலகத்திலாயினும் வேறெந்த உலகத்திலாயினும் எவளேனும் இருக்கின்றாளென்று சொல்லவல்லாயேற் சொல்வாயாக.

'நீங்கள் என்னுடைய மூக்கினை நீக்கிவிட்டீர்கள். இதனால் கெட்டது யாதும் இல்லை. இமைப்பொழுதில், அரிந்த மூக்கினைத் திரும்ப ஆக்குவேன். அம்மட்டோ? அரும்பெற லழகும் அமைத்துக்கொள்வேன். உங்கள் அருள் பெறும் அதிட்டம் ஒன்றுமட்டும் உடையேனானால், என்பெண்மைக்கு எண்மை* யாதொன்றும் இல்லை. ஆராய்ந்து பார்த்தால், முகத்துக்கு மேலாக உயர்ந்திருக்கிற மூக்கு மிகைதானே!

'மனம் மாறுபட்டாரல்லரோ வாஞ்சிக்கப்படாதவர்? யான், உரு வேறுபட்டேனேயன்றி, உளம் வேறுபட்டிலேன். உன்பால் முன்போல் அன்பாயுள்ளேன். என்றன் இன்னுயிர் உன்தன் சொந்தமே. கண்டார் காதலிக்கும் கட்டழகு, கொண்டார்க்குக் கூற்றுவனன்றோ? அந்நியர்க்கு அழகாகத் தோன்றாமல் அருவருப்பாயிருந்துகொண்டு உங்களுக்குப் பெருவிருப்பாயிருக்கும் திருவுருவத்தைப் பெறுவேனானால், என்னை ஏற்றுக்கொள்ளீரோ?' ]

## மன்மதன் கொடுமையைப் பழித்தல்

**24.** சிவனுமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தேறுகுலிசத்
தவனுமடுத் தோன்றாகி நின்றன்ன வுருவோனே
புவனமனைத் தையுமொருதன் பூங்கணையா லுயிர்வாங்கும்
அவனுமுனக் கிளையானே லிவனேபோ லருளிலனால்

* எளிமை.

கொண்டுகூட்டு: 'சிவனும், மலர்த் திசைமுகனும், திருமாலும், தெறுகுலிசத்தவனும் அடுத்து ஒன்றாகி நின்றன்ன உருவோனே! புவனம் அனைத்தையும் ஒரு தன் பூங்கணையால் உயிர் வாங்கும் அவனும் உனக்கு இளையானோ? இவனேபோல் (அவனும் என்பால்) அருள் இலன்!

பொருள்: 'சிவனும், திசைமுகனும், திருமாலும், தேவேந்திரனும் சேர்ந்து ஒன்றாய் ஓர் உருக்கொண்டு நின்றாற்போன்ற உருவமுடையோனே! எல்லா உலகங்களிலும் உள்ள (தேவர், நரகர், மக்கள், மாக்கள் முதலிய எல்லா) உயிர்களையும் மலரம்பினால் (மரணயாதனைபோலும் மதனவேதனை செய்து) கொல்வான் போல் வருத்துகின்ற அந்த மன்மதனும் உன் தம்பிதானோ? இந்த இளையோனே போல அவனும் என்பால் இரக்கமில்லாதவனாயிருக்கின்றானே!

மலர்த் திசை முகன் - (தாமரைப்) பூ (வில் வாழ்கின்ற, நான்கு) திசை (களையும் திசைக்கொன்றாக நோக்கிய நான்கு) முகத்தோன் (ஆன பிரமன்). தெறு குலிசத்தவன் - (பகைவரை) அழிக்கின்ற வச்சிராயுதத்தை யுடையன் (ஆன. இந்திரன்). அடுத்து - சேர்ந்து. நின்றன்ன, நின்றாலன்ன என்பதன் விகாரம்; நின்றாற் போன்ற என்னும் பொருட்டு. புவனம் - உலகம்; ஆகு பெயராய்ப் புவனத்தில் உள்ள உயிர்களை உணர்த்தியது. ஒரு - ஒன்றான; இங்கே தனிமையான என்ற பொருள் குறிக்க நின்றது. ஒரு என்பதற்கு ஒப்பற்ற என்ற பொருளும் உண்டு. ஆல், ஈற்றசை. ('அருளிலனால்' என்பது 'அருளிலனாதலால்' என்னும் பொருளுடையது போலும்.)

அநங்கன், அரிபிரமேந்திராதியரான, அகில உலகங்களினும் உள்ள அனைத்துயிர்களையும், வேறு துணைவீரர் யாருமின்றி ஒருதானே தனியனாய் வெல்லும் வல்லமை குறிக்க, 'ஒரு' என்ற அடையை உபயோகித்தா ரென்றும், அதன்மேலும் அவன் வல்லமையை அதிசயம் விளைய உரைசெய்வாராய், வல்லவனுக்குப் புல்லும் ஆயுத மென்றவாறு, வன்மையான கூர்ங்கணைகள் வேண்டாது, மென்மையான 'பூங்கணையால்' (ஒரு போர்க்களம் போன்ற சுருங்கிய ஓரிடத்தன்றி விரிந்த புவனமனைத்தினும் உள்ளனவாய், ஒரு போர்ப்படைபோ லன்றி, இத்தனையென எண்ணவொண்ணாமல் வரையறையற்றனவா யிருக்கின்ற) எல்லா உயிர்களையும் 'உயிர்வாங்கும் அவனும்' என்றா ரென்றும் உரைக்கலாம்.

> ஆலைக் கரும்பு சிலை; ஐங்கணை பூ; நாண் சுரும்பு;
> மாலைக் கிளி புரவி; மாருதம் தேர்; —வேலை
> கடிமுரசம்; கங்குல் களிறு; குயில் காளம்;
> **கொடி மகரம்; திங்கள் குடை**

என, மன்மதன் போர்க்குதவும் பொருள்களெல்லாம் விலக்கின்றி மென்மை யானவைகளாயினும், அவன், வன்மையின்றெனினும் மென்மையுமில்லாத இன்மையான குனியமேனியனுயினும், தனியனுய் உலக முழுதும் வெல் லும் 'அசகாயசூரன்', 'கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவன்'* என்றெடுத்துக்கூறி, 'அவனும்' என்பதில் உள்ள உயர்வுசிறப்பும்மையில் அடங்கியுள்ள பொருளை விளங்கவைக்கலாம். (உச)

சூர்ப்பநகை, மூக்கரியப்பட்டதால் அன்பு இரட்டிப்பாயிற்று என்ல்

25. பொன்னுருவப் பொருகழலீர் புழைகாண
மூக்கரிவான் பொருள்வே றுண்டோ
இன்னுருவ மிதுகொண்டிங் கிருந்தொழியு
நம்மருங்கே யேகா ளப்பால்
பின்னிவளை யயலொருவர் பாராரென்
றேயரிந்தீர் பிழைசெய் தீரோ
அன்னதனை யறிந்தன்றே வன்பிரட்டி
பூண்டதுநா னறிவி லேனே

கொண்டுகூட்டு: 'பொன் உருவப் பொருகழலீர்! "இன் உருவம் இது கொண்டு இங்கு நம் மருங்கு இருந் தொழியும்; அப்பால் ஏகாள்; பின் இவளை அயல் ஒருவர் பாரார்" என்று அரிந்தீர். பிழை செய்தீரோ? புழை காண மூக்கு அரிவான் பொருள் வேறு உண்டோ? அன்னதனை அறிந்து அன்றே நான் இரட்டி(ப்பு) அன்பு பூண்டது. (அன்றி) அறிவிலேனே?'

பொருள்: ' "(இவள் உறுப்பைக் குறைத்துவிட்டால், பின் னும் நமக்கு) இனிதாயுள்ள இந்தக் குறைபட்ட உருவத்தோடு இங்கு நம்மிடத்திலேயே யிருந்துதிர்வாள; அப்புறம் போகமாட் டாள்; அங்கபங்கமான பின்பு இவளை அந்நியர் ஒருவரும் ஆசைப் பட்டுப் பார்க்கமாட்டார்" என்றெண்ணி (நல்லெண்ணத்தோடு என் அங்கங்களை) அரிந்தீர்கள். ஆதலால் எனக்குக் குற்றம் செய்தீர்களோ? (நன்மையே செய்தீர்கள். இந்த நன்னோக்கமே யன்றித்) துளைகள் தோன்றும்படி நீங்கள் என் மூக்கை அரிதற்கு நோக்கம் வேறுண்டோ? இல்லை. இந்த நல்ல நோக்கத்தை அறிந் தல்லவா யான் (உங்கள்பால் நீங்கள் மூக்கரிதற்கு முன் கொண் டிருந்த அன்பினுக்கு) இருமடங்கான அன்பு கொண்டது!

* வாலி வதைப் படலம் — அக.

(இவ்வாறாக யான் உங்கள் உண்மை யுத்தேசத்தை உணரும் அறிவுடையேனே யன்றி) அறிவில்லேனல்லேன்.'

உருவம் - அழகு. பொருதல் - போர்செய்தல். கழல் - வீரகண்டை. பொன் உருவப் பொருகழலீர் - பொன்னாலாகிய, அழகுடைய, போர்த் தொழிற்கு அங்கமான வீரகண்டை அணிந்தவர்களே. புழை - துவாரம். அரிவான் - அரிதல். 'அவன் வருவானேன்?' என்பதில் வருவான் வருதலெனப் பொருள்படல்போல, அரிவான் அரிதல் எனப் பொருள்பட்டது. பொருள் - குறித்த பொருள் - உத்தேசம். மூக்கரிவான் பொருள் என்பது (மூக்கரிதலினது பொருள் அல்லது) மூக்கரிதற்குப் பொருள் என (ஆறன் உருபு அல்லது) நான்கன் உருபு தொக்கு வந்தது. மருங்கு - பக்கம். (உரு)

### சூர்ப்பநகை, அரக்கர் இனத்தை அழிப்பதற்கும் தான் உற்ற துணை எனல்

[ 'இயல்பாகவே கொடிய கோப குணமுடைய இராக்கதர், என்னை நீங்கள் இவ்வாறு செய்ததை யறிந்தால், உங்களை அழித்தலோடமையாமல், உலகத்தையே அழித்துவிடுவார்கள். உயர்குடிப் பிறந்தார் தங்களாற் பிறர்க்குத் தீங்கு நேரவொட்டார். ஆதலால், என் அன்புக்காக நீங்கள் என்னை ஏற்றுக்கொள்ளவில்லை ஆயினும், உலக மழியாமைப் பொருட்டாயினும் ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று சொல்லிச் சூர்ப்பநகை தொழுது இரந்து நின்றாள். இராமன், சினந்து, 'உன் பாட்டி தாடகையைக் கொன்ற சர மிருக்கிறது. சாவாது தப்பி யோடிப்போ. அரக்கர் வருக்கம் அனைத்தையும் அழிப்பதை என் சென்ம விரதமாகக் கொண்டுள்ளேன். நாங்கள் தசரத சக்கரவர்த்தி குமாரர். தாய் கட்டளையைத் தலைமேற் கொண்டு தவவேடம் தாங்கி வனவாசம் செய்கின்றேம். மறையவரும் மாதவரும் வேண்டிக்கொண்டவாறு, அரக்கர் இனத்தை அழித்த பின்பே அயோத்தியை அடைவேம். "இமையவரை வென்றவர் இராக்கதர், இவர்கள் எளிய மனிதர்!" என்று எங்களை எண்ணாதே. நீ வலியாரென்று கருதும் இராக்கதர் இயக்க ரெல்லாரையுங் கொண்டுவருவாயானால், அவர்களை உன் எதிரே கொன்று காட்டுவேம்' என்றான்.

அவள், 'நீ என்னை இராட்சசி யென்று இகழாமல் ஏற்றுக் கொள்வாயானால், நீ கூறியவாறே இராக்கத ரெல்லாரையும்

கொல்லலாம். நீங்கள் இவளைக் கைவிடமாட்டீ ரென்றாலும் யானும் இருத்தல் அதிகமோ? என்னையுங் கூடவைத்துக்கொண் டால், அரக்கரோடு அமர்செய்யும் காலத்தில் " பாம்பறியும் பாம் பின் கால் " என்றவாறு, அந்த அரக்கர் செய்யும் மாயங்க ளனைத் தையும் அரக்கியாகிய யான் அறிந்து தடுப்பேன். " என்னைக் கொழுநனைக் கொண்டாள் இவளொருத்தி இருக்கின்றாளே! " என்பாயாகில், என்னை இளையவனோ டிருக்கச் செய்வாயாக. அவனுடன் நீயும் நானும் ஆக மூவரும் ஏகமாகக் கூடினால், இராக்கத ரெல்லாரையும் எளிதாக வென்றிடலாம். இராவணனை எதிர்வா னென்னினும் யான் இளையேன்' என்றாள். ]

முடிவாக்ச் சூர்ப்பநகை முறையிடல்

**26.** பெருங்குலா வுறுநகர்க்கே யேகுநாள்
வேண்டு முருப் பிடிப்பே னன்றேல்
அருங்கலா முற்றிருந்தா னென்னினுமீங்
கிளையவன்று னரிந்த நாசி
ஒருங்கிலா விவளோடு முறைவேனோ
வென்பானே லிறைவ வோன்றும்
மருங்கிலா தவளோடு மன்றோ நீ
நெடுங்காலம் வாழ்ந்த தென்பாய்

கொண்டுகூட்டு : 'இறைவ! பெரும் குலா உறு நகர்க்கு (நீங்கள்) ஏகும் நாள், நன்றேல் வேண்டும் உருப் பிடிப்பேன். அருங் கலாம் உற்று இருந்தான் என்னினும் ஈங்கு இளையவன், "அரிந்த நாசி ஒருங்கு இலா இவளோடும் உறைவேனோ!" என்பானேல், மருங்கு ஒன்றும் இலாதவளோடு அன்றோ நீ நெடுங்காலம் வாழ்ந்தது என்பாய்.'

பொருள் : 'அயோத்திநகரத்துக்கு நீங்கள் திரும்பிச் செல் லுங்காலத்தில் (எனது இராக்கத உருவத்தைக் கண்டு சனங்கள் வெருவவோ வெறுக்கவோ செய்யாமல் அவர்கள் ஏற்றுக்கொள்ளு தற்கு) வேண்டிய வடிவத்தை (என்னுடைய மாயாசக்தியால்) எடுத்துக்கொள்வேன். இளையவன், "(சீசீ!) நாசியில்லாதவளோடு நான் வாழ்வேனோ!" என்று தடை சொல்வானானால், " இடை யில் லாதவளோ டன்றோ யான் நெடுங்காலம் வாழ்ந்தது! " என்று சமாதானம் கூறுவாயாக.'

குலா - கொண்டாட்டம். உறு - மிகுந்த. பெரும் குலா உறு நகர் - பெருத்த (ஆடல் பாடல்களின் கொண்டாட்டம் அல்லது திருவிழாக்) கொண்டாட்டம் மிகுந்த நகரம் - அயோத்தி. 'நன்றேல் [ - (வேண்டும் உருப் பிடித்தல்) நல்லதானால் ] வேண்டும் உருப்பிடிப்பேன்' என மாற்றிப் பொருள் கொள்க. முந்திய உரைகாரர்கள் 'அன்றேல்' என்று பிரித்து 'அல்லாவிடில்' என்று பொருளுரைத்தார். அது முன்பின் தொடர்ச்சி யோடு பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. கலாம் - கோபம். 'அரும் கலாம்' என்பதில் அருமை, இன்மை குறித்தது, இல்லாத கேடன் அதாவது கேடில்லாதவன் என்று பொருள்படும் 'அருங் கேடன்' என்பதிற் போல. அருங் கலாம் உற்றிருந்தான் - இல்லாத (அதாவது நீங்கிய) கோபமுற்றிருந் தான் - நீ எனக்காகப் பரிந்து பேசலால் என்மீது கொண்டிருந்த கோபம் நீங்கியிருந்தான். இந்த 'அருங்கலா முற்றிருந்தான்' என்ற தொடர்மொழி அற்றபற்றன் அதாவது பற்றற்றவன் என்று பொருள்படும் 'வீதராகன்' என்னும் வடமொழித் தொடர்போல நின்றது. (சிந்தாமணி 2547-ம் பாட்டுரை பார்க்க). மருங்கு ஒன்றும் இலாதவள் - இடை சிறிதும் இல் லாதவள்.

' "இப்பொழுது உன் தம்பி நீ கூறுதலாற் கோபம் நீங்கி என்னை மணஞ் செய்தற்கு ஒருசார் உடன்படினும், ' "மூக்கில்லாதவளோடு எப்படி மனம் பொறுத்து வாழ்வேன்?" ' என்று தடை கூறுவானாயின், ' "நான் இடையில்லாதவளோடு வாழ்கின்றேனே; நீ மூக்கில்லாதவளோடு வாழத் தடையென்ன?" ' என்று தக்க விடையளித்து அவனை உடன் படுத்துவாய்" என்றனளென்பது 2, 3, 4 அடிகளின் கருத்து. பிராட்டி யாரை இடையில்லாதவளென் றிகழவைத்துக் கவியானவர் அரக்கியின் வாக்கினாலேயே அவரது அழகை நிலை நிறுத்தினார்.'—மு. ரா. க. (உகூ)

## சூர்ப்பநகை கரனைக் கோணர்வதாகக் கூறிச் செல்லல்

[ மேற்கூறியவாறு, சூர்ப்பநகை சொல்லக்கேட்ட இலக்கு மணன் கோபங்கொண்டு, அவள்மேற் பிரயோகித்தற்குத் தன் கையிலிருந்த வேலை நோக்கிக்கொண்டு, இராமனை நோக்கி, 'இவ ளைக் கொல்லாவிட்டால் மிகவுந் தொந்தரை செய்வாள். உனது கட்டளை யாதோ?' என, அவன், 'சென்றொழியாளேல், கொன் றொழித்தல் நன்று' என்றான். எனவே, அவள், 'இவர்கள் எனக்கு இம்மியும் இரங்கார். இனிமேல் இங்கே யிருந்தால், என்னுயிரை இழந்திடுவேன்' என்றெண்ணி, 'மூக்கையும் காதையும் போக்கிய

உங்களுடன் வாழ உடன்படுவேனே? உங்கள் உள்ளத்தை உணர்தற்கு வஞ்சனையாக வாழ்வேனென்றேன். காற்றினும் கடுமையுடையவனும், கனலினும் கொடுமை யுடையவனும், உங்கள் உயிருக்குக் காலனுமான கரனை, இப்பொழுதே கொண்டு வருகிறேன்!' என்று கோபத்தோடு கூறிப் போயினாள். ]

—∞—

## 6. கரன் வதைப் படலம்

[ கரனை இராமன் கொன்றதைக் கூறுவது ]

### சூர்ப்பநகை அங்கபங்கமானதைக் கரனுக்கு அறிவித்தல்

[ *சூர்ப்பநகை, தன் தந்தை விச்சிரவ முனிக்கும் தாய் கேகசியின் தங்கை கும்பீநசிக்கும் பிறந்தவனும், தனக்காகத் தண்டகாரணியத்திலே சனத்தானத்தில் இராவணன் ஏற்படுத்தியிருந்த இராச்சியத்தின் சேனைத் தலைவனுமான கரனிடம் ஓடிப்போய்க் காலில் விழுந்து கதறி யழுதாள். அவன், 'உன்னை இவ்வாறு செய்தவர் யார்?' என, 'இரண்டு மனிதர் எழில் மிகுந்த ஓர் இளம் பெண்ணுடன் இந்த வனத்துக்கு வந்திருக்கின்றார்கள். அந்த இளையாளை இராவணனுக்கென யான் எடுக்க முயன்றபோது, அந்த மனிதர் என்னை இக் கோலங் கண்டார்கள்' என்றாள். அவன் பெருங் கோபங்கொண்டு, 'அவர்கள் இக்கணமே அழிவார்கள். இப்பழி என்றும் அழியாதே!' என்று கூறிப் போருக் கெழுந்தான். அது கண்ட, அவன் பக்கத்தில் நின்ற பதினன்கு இராக்கத வீரர், 'இரண்டு புல்லிய மனிதரைக் கொல்லுதற்கு நீ செல்லுவையானால், தேவர்கள் சிரிப்பார்கள்: எங்களை ஏவுக!' என, அவனும் அவர்களை ஏவினான்.* ]

### அரக்கர் பதினால்வர் வதை

[ *உடனே அவர்கள் போர்க்கோலம் பூண்டு புறப்படச், சூர்ப்பநகை, எமனிடம் உயிர்களை இட்டுச் செல்லும் எமபடர் போல, முன்படரப் பின்படர்ந்து, அவர்கள் இராமன் இருந்த*

இடத்தை அடைந்து, அவன் உறைந்த சாலையைச் சூழ்ந்,
டார்கள். அவன், 'சீதையைக் காத்துக்கொள்' ளென்று இலக்கு
மணனுக்குக் கட்டளையிட்டுவிட்டு, வில்லேந்தி வெளிப்போந்து,
எதிர்த்த இராக்கதர் ஈரெழுவருடைய இருபத்தெட்டுக் கரங்களை
யும் சரங்களால் அரிந்து, தரையில் தள்ளினன். வாள்களோடு
தோள்களை யிழந்த அவர்கள், மாறாகத் தாக்குவாராய், 'மார்பு
கொண்டு மாள்விப்பே' மென்று சொல்லிக்கொண்டு வர, அவன்
மீண்டும் சரங்க ளெய்து அவர்கள் சிரங்களைக் கொய்து தரையில்
உருளச் செய்தான். ]

சூர்ப்பநகை நிகழ்ந்ததைக் கரனுக்குத் தெரிவித்தல்

27. ஒளிறு வேற்கரற் குற்ற துணர்த்தினள்
குளிறு கோபவெங் கோளரி மாவடக்
களிறெ லாம்படக் கைதலை மேலுறப்
பிளிறி யோடும் பிடியன்ன பெற்றியாள்

கொண்டுகூட்டு: குளிறு கோபம் வெங்கோ ளரிமா அடக், களிறு எல்லாம் படக், கை தலைமேல் உறப், பிளிறி ஓடும் பிடி அன்ன பெற்றியாள், (சூர்ப்பநகை) ஒளிறுவேல் கரற்கு உற்றது உணர்த்தினள்.

பொருள்: ஒரு சிங்கம் கொன்றதனால் தன்னோடுற்ற ஆண் யானைகளெல்லாம் இறந்துவிடக் கண்டு, துதிக்கை தலைமேல் உற வைத்துக்கொண்டு, வீரிட்டு ஓடுகின்ற பெண் யானையின் தன்மையை யுடையவள் (ஆகிச், சூர்ப்பநகை கையைத் தலைமேல் வைத்து, 'ஐயோ! தெய்வமே!' என்று அலறிக்கொண்டு ஓடிப் போய்) நடந்த செய்தியைக் கரனுக்குத் தெரிவித்தாள்.

ஒளிறுதல் - பிரகாசித்தல். உற்றது - நிகழ்ந்த காரியம். குளிறுதல் - ஒலித்தல்; இங்கே கர்ச்சித்த லென்ற பொருள் குறித்தது. கோள் - வலி. அரி - சிங்கம். கோளரி யென்றே சிங்கத்துக்கு ஒரு பெயருள்ளது. மா - மிருகம். அடுதல் - கொல்லுதல். களிறு - ஆண் யானை. படுதல் - சாதல். பிளிறல் - ஒலித்தல் - வீரிடல். பிடி - பெண் யானை. பெற்றி - தன்மை.

தலைமேற் கைவைத்துப் பிளிறி ஓடல் சூர்ப்பநகைக்கும் பொருந்துதல் காண்க. சிங்கம் இராமனுக்கும், களிறுகள் இராக்கதருக்கும், பிடி சூர்ப்ப நகைக்கும் உவமை.

பாட பேதம்: கைத்தல மேலுற. (உஎ)

## கரன் போருக்குப் புறப்படல்

[ பதினன்கு அரக்கரும் பட்டதைக் கேட்ட கரன், பதினன்கு உலகங்களையும் வெல்ல வல்ல பதினன்கு தலைவர்களைப் படைத்த தனது படைத்திரளைப் படைமுரசறைவித்துத் தருவித்து, அந்தச் சேனை சூழத் தேரிலேறிப் போருக்குப் புறப்பட்டான். அந்தக் கருநிறமுடைய அரக்கர் சேனை, கருங்கடல் போன்றது. சேனைவீரர் தோள்கள், கடலின் திரைகள் நேர்ந்தன. படை முரசமுழக்கம், கடல்முழக்கம் ஒத்தது. அந்தக் கரிய இராக்கத சேனைசமுத்திரம் சூழ்ந்த கரனது பொற்றேர், நாற்புறமும் கருங்கடல் சூழ்ந்த மேரு நேரென விளங்கியது.

அந்தச் சேனைத் தலைவர்கள், மலைகளென மஞ்சு தவழும் தலைகளை யுடையவர்; விண்ணை அளக்க மேலோங்குவனபோல மிகவும் உயர்ந்து, விடமும் வெளுக்கக் கறுத்த மேனியர்; செருக்*கிடையாது தினவு தின்னும் திண்புயத்தினர். அவர்கள் கரனைப் புடைசூழ்ந்து போகச், சூர்ப்பநகை வழிகாட்டி முன் செல்லப் பின் சென்ற சேனை, இராமன் இருந்த இடத்தை அணுகியது. படைக்கு முன்பாகப் பயந்து பறந்தோடிய பறவைகளும் விலங்குகளும் இராமனுக்குச் சேனை வரவைத் தெரிவிக்கும் தூதர் போன்றன.

தூசியாலும் ஓசையாலும் சேனை நெருங்குதல் தெரிந்த இலக்குமணன் போர்க்கோலம் பூண்டு போர்க்குப் புறப்படுவானாக, என்னுமோ வென்று ஏங்கிச் சீதை கண்ணீர் கலுழ்ந்து கலங்கி நிற்க, 'இங்கே யிருந்து இவளைக் காப்பாயாக' வென்று இலக்குமணனை நிறுத்திவிட்டு, இராமன், கவசம் தரித்துக், கணைப் புட்டில் தாங்கி, வில் லேந்தி, யானையைக் கண்டு குகையினின்று வெளிப்படும் சிங்கம் போலச், சேனையைக் கண்டு பன்னசாலையினின்று வெளிப்பட்டான்.

அப்போது, மூங்கிற் காட்டிற் பிறந்து அந்தக் காடு அழிதற்குக் காரணமான தீயேபோல, இராக்கதக் கூட்டத்திற் சனித்து அந்தக் கூட்டம் நாசமாகுதற்கு ஏதுவாகிய தீயாள், 'இவனே இராம னென்று,' கரன் முதலோர்க்குக் கைந்நீட்டிச்

---

* செரு - போர்.

*சுட்டிக் காட்டினாள். கரன், 'இத்துணைப் பெருஞ்சேனை கூட்டமாக இவனொருவனை எதிர்த்தல் இகழ்ச்சிக்கிடமானது. யானொருவன் சென்று வென்று கொன்று தின்றுவிடுவேன்' என்று செப்பினான். அப்போது அகம்பனென்ற ஒரு நிமித்திகன், 'துன்னிமித்தங்கள் தோன்றுகின்றன. இராமனை எளியனென எண்ணி இகழற்க' என்று எச்சரித்ததைக் கரன் இகழ்ந்து ஏற்றுக்கொண்டானில்லை.* ]

இராக்கதர் சேனையை இராமன் அழித்தல்

[ *மின்னுதல் போலக் கோபத் தீ கொப்புளிக்க விழித்து, இடித்தல் போல ஆரவாரித்து, மழை போல அம்புகளைப் பொழிந்து, கார்மேகசாலம்*போன்ற கரிய இராக்கத சேனை சூழச், சலியாத கருமலை போல ஒரு மலைவுமின்றி இராமன் நின்றான். அவன், தன்னை வளைத்துக்கொண்ட அரக்கரை எதிர்த்து, வில்லை வளைத்து, அம்பு தொடுத்து, அவர்களெல்லாரும் எறிந்த ஆயுதங்களனைத்தையும் அழித்து, அவர்கள் தலைகளை அறுத்து மலைகள் போலக் குவித்தான்.* ]

**28.** காடு கொண்டகா ருலவைகள் கதழெரி கதுவச்
சூடு கொண்டன வெனத்தொடர் குருதிமீத் தோன்ற
ஆடு கின்றன வறுகுறை யயிலம்பு விண்மேல்
ஓடு கின்றன வுயிரையுந் தொடர்வன வொத்த

கொண்டுகூட்டு: *காடு கொண்ட கார் உலவைகள், கதழ் எரி கதுவச் சூடு கொண்டன என, (தலை) அறு(பட்ட உடல்) குறை, தொடர் குருதி மீத் தோன்ற, (போர்க்களத்தில்) ஆடுகின்றன. (இராமன்) அயில் அம்பு விண்மேல் ஓடுகின்றன, (அவர்) உயிரையும் தொடர்வன ஒத்த.*

பொருள்: *காட்டை யிடமாகக் கொண்ட பெரிய மரங்களின் பொந்துகள், உள்ளே தீப்பற்றியதனால், சுவாலை மேலாக வெளிப்படக் கொண்டன போலத், தலை அறுபட்ட உடற்குறையான கவந்தங்கள், அறுப்புண்ட கழுத்தினின்று வெளிப்படும் இரத்தம் மேலே தோன்ற, (அந்தக் காடாகிய போர்க்களத்திலே துடித்து)*

* சாலம - கூட்டம.

*ஆடலுற்றன. இராமன் அம்புகள் (இராக்கத வீரர் உடல்களை அறுத்து விட்டு) விண்மிசையே விசையோடு செல்வன, (அவ் வீரர் உடல்களை ஒழித்தமையோ டமையாமல் வீரசொர்க்கத்துக் குச் செல்லும் அவர்கள்) உயிரையும் அழிக்கத் தொடர்வன ஒத்தன.*

*காடு - வனம்; நெருக்கம்; மிகுதி. காடுகொண்ட என்பதற்கு, நெருக்க மான அல்லது மிகுதியான வென்றும் பொருள் கொள்ளலாம். கார் - கருமை; பெருமை. உலவை - மரப்பொந்து; மரக்கிளை. கரிய பெரிய மரப் பொந்துகள் அல்லது மரக் கிளைகள் கரிய பெரிய அரக்க ருடல்களுக் கொப்பு. கதழ்தல் - உக்கிரமாதல்; மிகுதல்; விரைதல். சூடு - வெப்பம்; ஆகு பெயராய்ச் சுவாலையை உணர்த்தியது. 'சூடுகொள்ளல்' அதன் முதிர்ச்சியாகிய எரித லெனலுமாம். 'சூடு' என்பதற்குத் 'தலை' என்றும் ஒரு பொருளுண்மையால், 'சூடு எரி கதுவக் கொண்டன' என இயைத் துத், 'தலையில் (- உச்சியில்) தீப்பற்றப்பெற்றன' என்றும் பொருள் கொள்ளலாம். தொடர்தல் - இடையறாது வரல் - வழிதல். மீ - மேல். அறுகுறை - கவந்தம். ஆடுதல் - துடித்து அசைதல். அயில் - கூர்மை. ஒத்த - (அன் சாரியை பெறாதது) ஒத்தன.*

*உச்சியில் பொந்து உள்ள மரம், கழுத் தறுபட்டுச் சுவாசக் குழலின் துவாரம் தோன்ற உள்ள உடலுக்கும், சுவாலை மேலெழுதல், இரத்தம் வெளிப்படலுக்கும் உவமை. போரில் இறந்தவர் வீரசொர்க்கம் புகுவ ரென்னும் ஐதிகம்பற்றி, 'அயிலம்பு விண்மேல்—ஓடுகின்றன உயிரையுந் தொடர்வன ஒத்த' என, மிக்க இறும்பூதும் இன்பமும் விளையக் கூறினர்.*

பாட பேதம்: *காயெரி கதுவ.* (உஅ)

## இராமன் அம்புகளின் விசித்திர வேலை

**29.** மாரி யாக்கிய வடிக்கணை வரைபுரை நிருதர்
பேரி யாக்கையின் பெருங்கரை வயின்றொறும் பிறங்க
ஏரி யாக்கின யாறுக ளியற்றின நிறையச்
சோரி யாக்கின போக்கின வனமெனுந் தோன்மை

**கொண்டுகூட்டு:** *மாரி ஆக்கிய வடிக்கணை, வரை புரை நிருதர் பேர் யாக்கையின் (ஆன) பெருங்கரை (வனத்தின்) வயின் தொறும் பிறங்க, ஏரி ஆக்கின; யாறுகள் இயற்றின; (அவை) நிறையச் சோரி ஆக்கின; வனம் எனும் தொன்மை போக்கின.*

பொருள்: இராமன் அம்புகள், மலைபோன்ற இராக்கதர் உடம்புகளால் ஆன பெருங்கரைகள் (போர்க்களமாக்கப்பட்ட காட்டின்) இடங்களெல்லாம் உயர்ந்து விளங்க, அந்தக் கரைகளின் உள்ளே ஏரிகளுண்டாக்கின; அன்றி, ஆறுகளும் உண்டாக்கின; அப்படி உண்டாக்கிய (கரைகளுக்கு இடையில் உள்ள வெற்றிடங்களான) ஏரிகளிலும் யாறுகளிலும் நிறைய இரத்த நீர் பெருகச் செய்தன; (இவ்வாறாகப் போர் நிகழ்ந்த வனம் முழுவதும் இரத்த ஏரிகளும் யாறுகளுமாகச் செய்து) வனமென்ற பழைய நிலைமையை நீக்கிவிட்டன.

மாரி - மழை. ஆக்கிய - செய்த. ஆக்கிய என்பது எதுகைத் தானத்தில் நிற்றல்பற்றி உவமைப்பொருள் பயப்பதாயிற்று. மாரி ஆக்கிய - மழை போன்ற - மிகுதியாலும் நெருக்கத்தாலும் மழை பொழிதல் போன்ற தோற்றத்தை உண்டாக்கிய. வடி - கூர்மை. கணை - அம்பு. வரை - மலை. புரை - ஒத்த. பேர் - பெருமை. கருமை கார் என்பன ஒரு பொருள் குறித்தல் போலப் பெருமை பேர் என்பவை ஒரு பொருள் குறித்தவை. யாக்கை - உடம்பு. சந்தியால் பேர்யாக்கை, பேரியாக்கை யாயினது. வயின் - இடம். பிறங்கல் - உயர்தல்; விளங்கல். சோரி - இரத்தம். தொன்மை - பழமை - பழைய நிலைமை. ஏரிகளையும் யாறுகளையும் ஆக்குதற்கேற்ப, இராமனம்புகளை 'மாரி யாக்கிய வடிக்கணை' என்றார். (உக)

[ இரத்தம் படிந்து சிவந்த வெண்சாமரங்களும் வெண்கொற்றக் குடைகளும் செந்நீர் நுரையும் குமிழியுமாக, மிதந்து செல்லும் யானைகள் வன்மீன்களாகச், சேணங்கள் தோணிகளாகக் கொண்ட அந்த இரத்தயாறு ஓடுதல், சிவந்த புதுப்புனல் வெள்ளமுடைய ஆற்றோட்டம் போன்றது. ]

### அரக்கர் அழிய, அமரர் ஆரவாரித்தல்

[ போர்க்களமான அந்த மரக்காடு அரக்கர் பிணக்காடாக, அவ் வரக்கர் உயிர் நீங்கிய உடற்சுமையால் மண்மகள் முதுகு ஒடிந்தாள்: அவர்கள் உடல் நீங்கிய உயிர்ச்சுமையால் விண்மகள் முதுகு உளுக்கினள்.

குளவி புழுக்களைக் கூட்டிற் சேர்த்துத் தன் வடிவமாக்குதல்* போல, இராமன் இராக்கதரை விண்ணிற் சேர்த்து இமையவராக்கினன்.

* இது புராணச் செய்தி. உண்மையிற் குளவிகளும் மற்றைப் பூச்சிகளும் பிறக்கும்போது முட்டைகளாய்ப் பிறந்து, பின்பு புழுக்களாகி, முடிவில் தம்மை முட்டைகளாக ஈன்ற பூச்சி வடிவம் அடைகின்றன.

அப்படி அமரராக்கப்பெற்ற அரக்கர், தம்மவர் சமர்க்களத்தில் சாதலைக் கண்டு, தாம் அரக்கராயிருந்ததை மறந்து, மற்றைத் தேவரோடு சேர்ந்து, அவர்போலத் தாமும் சந்தோடங்கொண்டு, 'அரக்கர் அழிந்தார் ! அரக்கரழிந்தார்!' என்று ஆரவாரித்தார்கள்.

அவர்கள், முப்புரத் தசுரர் எப்புறமும் சுற்றிய ஈசன் போல, எண்ணிறந்த இராக்கதர் எப்பக்கத்தும் சுற்றப்பெற்ற இராமன் ஏகனு யிருக்கின்றானே யென்று, அவன் தனிமை கருதி அமரர் அஞ்சுதல் போலத் தாமும் அஞ்சினர்.

அவர்களுள்ளே சிலர் தம் தேவ மனைவியரோடு விண்ணில் நின்று போர்க்களக் காட்சி பார்க்கப் போந்தவர், தமது உடற்குறை துடித்தாடும் கவந்தநாடகத்தைக் கண்டு களிப்பாரும், தமது தோளைப் பேயொரு பக்கமும் நாயொரு பக்கமும் கௌவியிழுக்கக் கண்டு சிரிப்பாருமாயினர்.

தங்கள் தானை அழிந்தமை கண்டு தாக்கிய பதினன்கு படைத்தலைவர்களுடைய விற்களை இராமன் அம்புகளால் அறுத்து வீழ்த்திவிட, அவர்கள் மலைகள்கொண்டு மலைய*, அவன் மீண்டும் அம்புகள்விட்டு அந்த மலைகளையும் அவர்கள் தலைகளையும் வீழ்த்தினன். ]

### இராமனை எதிர்த்த திரிசிரா இறந்தல்

[ பன்னன்கு படைத் தலைவரும் அவர்கள் படைகளும் பட்டது கண்டு, கரனுடைய இரண்டு தம்பியருள் இளையவனும், முக்கட் கடவுளின் முத்தலை வேலெனும் சூலம்போல மூன்று தலையுள்ளவனுமான திரிசிரா, தன் சேனையோடு வந்து இராமனை எதிர்த்தான். அந்தச் சேனை சூழ்ந்த இராமன் இருளின் நடுவே இலங்கும் விளக்குப்போன்றான். அந்தப் படைக்கு எதிராகத் தன் சரங்களே படையாக, அவன் போர்புரிந்து அந்தப் படையை அழித்தான். சேனை மடிந்தது கண்டு, திரிசிரா, தேரை இராமன் எதிரே செலுத்திச் சரமாரி பெய்து அவனை மறையச் செய்தான். இராமன் அம்புகள் எய்து திரிசிராவின் சரக்கூடத்தை அறுத்தொழித்து, அவன் தேரை அழித்ததல்லாமல், முத்தலைகளை

* மலைதல் = பொருதல் = எதிர்த்தல்.

யுடைய அவனை இருதலைகளையும் போக்கி ஒரு தலையனுக்கினான். அவன், தோழிந்தும் திரிசிரா வென்னும் பேரழிந்தும், வீரம் அழியாதவனாய், வில்லில் அம்புகள் தொடுத்து விடத் தொடங்க, இராமன் அவன் வில்லை அறுத்தொழித்தான். அவன், வில் லொழியவே கல்லுகளை யெறிந்தான். இராமன் கல்லெறிந்த கைகளை அரிந்து, எஞ்சி யிருந்த தலையையும் தடிந்து தள்ளினான்.

திரிசிரா செத்துவிடவே, சேனை வீரரெல்லாம், திகிலை உரு வெடுத்தாற் போன்று திரள் திரளாகத் திசை தெரியாமற் பின்கால் பிட்டந்தட்ட ஓட்டமெடுத்தார்கள். அவருள்ளே சிலர், இராமன் அம்பால் அறுப்புண்டு திறந்திருந்த ஆனை வயிற்றுப் புழைகளி னுள்ளே நுழைதலுற்றார்கள். சிலர், தாம் ஓடும் வழியில் ஆடும் கவந்தங்களைப் பார்த்து, 'அப்பா! என்னைக் கண்டேனென்று செப்பாதே! உன்னைக் கும்பிட்டேன்' என்று கைகூப்பிக் கொண்டு ஓடினார்கள்.

புறங்காட்டி யோடும் போர்வீரரைக் கரன் தம்பி தூடணன் கண்டு, மறித்து நிறுத்தி, 'அஞ்சாதேயுங்கள். யான் உங்களுக்கு உரைப்பது ஒன்று உண்டு; கேளுங்கள்!' என்று கிளத்துவா னயினான்:

### தூடணன் செய்த ரணரங்கப்* பிரசங்கம்

**30.** வச்சை யாமெனும் பயமனத் துண்டென வாழும்
கோச்சை மாந்தரைக் கோல்வளை மகளிருங் கூசார்
நிச்ச யம்மெனுங் கவசந்தா னிலைநிற்ப தன்றி
அச்ச மென்னுமீ தாருயிர்க் கருந்துணை யாமோ

கொண்டுகூட்டு: 'மனத்து வச்சை ஆம் எனும் பயம் உண்டு என்ன வாழும் கொச்சை மாந்தரை (நம்முள்ளே) கோல்வளை மகளிரும் கூசார். (சயம் அல்லது சாவு என்ற) நிச்சயம் எனுங் கவசந்தான் (உறுதுணை யாய்) நிலை நிற்பது அன்றி, அச்சம் என்னும் ஈது ஆருயிர்க்கு அருந்துணை ஆமோ?

பொருள்: 'இவர்களுடைய நெஞ்சில் அச்சம் உண்டு என்று சொல்லும்படி உயிர்வாழ்கின்ற இழிவான மனித சாதியினருக்கு

* ரணரங்கம் — போர்க்களம்.

இராக்கத சாதியினராகிய நம்முள்ளே பெண்களுமே பயப்பட மாட்டார்கள். (அப்படியிருக்க, இப்படி நீங்கள் ஒரு மனிதனுக்கு அஞ்சி ஓடலாமோ? "சயிப்பேம் அல்லது சாவேம்" என்ற) மனத்துணிவாகிய கவசமே (போர்க்களத்தில் ஊறுபடாமல் உயிருக்கு உறுதுணையாய்) நிலைநிற்கக் கூடியதல்லாமல், அச்சமென்று சொல்லப்படுகின்ற (இப்போது உங்களிடத்திற் காணப்படுகின்ற) இந்தக் குணம் உங்களுக்குத் துணையாகுமோ?

வச்சை - உலோபம். 'கடுவச்சையன் போலெரிர் மன்னன்' (க. ரா. பாலகாண்டம், பூக்கொய்படலம் ௧௧)—ந. அ. ஆம் - போலும். வச்சை ஆம் எனும் பயம் - ('உத்தம குணங்கள் கோடி உலோபத்தால் அழியும் மாதோ' என்றவாறு, தன்னை யுடையவனது உயர்குணங்கள் எவ்வளவா யிருந்தாலும் அவ்வளவையும் கெடுத்துவிடும் இழிகுணமான) உலோபகுணம் (ஒன்றே, எல்லா இழி குணங்களுள்ளும், தன்னை) ஒக்குமென்று சொல்லப்பட்ட பயம். முந்திய உரைகார ரிருவர் 'வச்சை' என்பதற்கு 'வசை' (-பழி) என உரை கூறியுள்ளார். ஒருவர்*, 'வசையென்பது, எதுகை நோக்கி, வச்சையென விரிந்தது' என்றார். மற்றொருவர்†, 'வச்சை - வசை; விரித்தல் விகாரம்' என்று கூறிப் பின்பு 'வச்சை - பெண்பிள்ளை, யாம் எனும் - நாங்கள் என்கின்ற என்னலுமாம். இப் பொருளில் வச்சை - வத்ஸே என்னும் வட மொழித் தற்பவம்' என்றார்.

கொச்சை - இழிவு. மாந்தர் - மனிதர். கோல் - திரட்சி - உருண்டை. கோலுதல் - வளைதல். வளை - கைவளை. கோல் வளை - (பிரம்புபோல) உருண்டை வடிவமான வளையல்; வளைந்த (தன்மையுடைய) வளையல். கூசுதல் - அஞ்சுதல். ('கூசி ஆவி குலைவுறு வாளையும்'—நிந்தனைப்படலம் 22). நிச்சயம் - உறுதி - மனஉறுதி - மனத்துணிவு - அஞ்சாமை. உடம்பு ஊறு படாமற் காக்கும் கவசம்போல, மனத்துணிவு, உயிர் ஊறு உறாமற் காத்தலின் கவசமெனப்பட்டது. அரும் துணை என்பதில் அருமை, மேன்மை யென்னும் பொருளுடையது.

மற்றைச் சொற்களை நோக்கக் கொச்சைச் சொற்கள் இழிவாதல்போல, இராக்கதரை நோக்க, மனிதர் இழிவானவ ரென்பான் 'கொச்சை மாந்தர்' என்றான்.

'அச்சம் என்னும் ஈது' என்ற சொற்றொடரில், 'என்னும்' என்ற சொல், 'அச்சம்' கேள்விப்பட்ட பொருளென்பதையும், 'ஈது' என்ற சொல்

* வை. மு. கோ. † மு. ரா. க.

அது நேராகக் கண்ட பொருளென்பதையும் குறிப்பிக்கின்றன. குறிப்பிக்கவே, 'அச்சம் என்னும் ஈது' என்பதற்கு, 'அச்சமென்று (பிறர்) சொல்ல (யான் கேள்வி)ப்பட்ட (இப்போது உங்கள்பால் யான் காண்கின்ற) இந்தக் குண' மென்பது விரிவுரையாம். ஆகவே, 'அச்சமென்பதை, யான் போரை அறிதற்குமுன், கேட்டறிந்ததன்றிப் பார்த்தறிந்ததில்லை ; போரை அறியலான பின், அதனை அந்நாட் போர்களில் அரக்கருக்கு அஞ்சி ஓடிய அமரர் இயக்கராதியோர்பாலும், இந்நாட் போரில் ஒரு மனிதனுக்கஞ்சி யோடிய உங்கள்பாலும் பார்த்தறிந்தேன் ; எந்நாளினும் சுவாநுபவமாக அநுபவித்தறிந்திலேன்' என்பான்,'அச்சம்' என்றமையோ டமையாமல், 'அச்சமென்னு மீது' என்முன் என்க. இவ்வாறு ஓசை நிரப்புதற்காக உபயோகிக்கப் பட்டன போலத் தோன்றும் சொற்கள் ஊன்றி நோக்குங்கால், பொருள் பொதிந்தவையாகக் காணப்படுதலைக் கம்பராமாயணத்திற் கணக்கற்ற இடங்களிற் காணலாம்.

அச்சம் துணையாக ஓடும்போது, எதிரியாற் கொல்லப்படாமல் தப்புதல் போலக் கொல்லப்படுதலும் கூடும்: அவ்வாறே, அஞ்சாமை துணையாக எதிர்த்துப் போர்புரியும்போது எதிரியைக் கொன்று தன்னுயிரைக் காத்தல் போல எதிரியால் கொல்லுண்ணலும் கூடும். ஆதலால் உயிர்காத்தற்கு வெவ்வேறு வகையில் உதவும் அச்சம் அஞ்சாமை என்னும் துணைகளுள், அச்சம் கீழ்மையான துணையும் அஞ்சாமை மேன்மையான துணையுமாம் என்பதுகொண்டு, எதிர்மறை வினவாக, 'அச்சம் என்னும் ஈது ஆருயிர்க்கு அரும் (- மேன்மையான) துணையாமோ ?' என வினவி, அச்சத்தின் கீழ்மையை வற்புறுத்தினு னென்க. (௩௦)

**31.** பூவ ராவுவேற் புரந்தர னோடுதான் பொன்று
மூவ ரோடுதான் முன்னின்று முட்டிய முனையில்
ஏவ ரோடின ரிராக்கதர் நுமக்கிடைந் தோடும்
தேவ ரோடுகற் றறிந்துளி ரோமனந் திகைத்தீர்

கொண்டுகூட்டு : 'பூ அராவு வேல் புரந்தரனோடுதான், பொன்று மூவரோடுதான் முன்நின்று முட்டிய முனையில் இராக்கதர் ஏவர் ஓடினர் ? (அப்போரில்) நுமக்கு இடைந்து ஓடும் தேவரோடு (புறங்காட்டலைக்) கற்று அறிந்துளிரோ ? மனம் திகைத்தீர்.

பொருள் : 'தேவேந்திரனோடும் திரிமூர்த்திகளோடும் எதிர் நின்று தாக்கிய போர்களில் இராக்கதர்களில் யார் ஓடினார்கள் ? அந்தப் போர்களில் உங்களுக்குப் பின்னிட்டோடிய தேவரிடம் இவ்வாறு புறங்காட்டி ஓடுதலைக் கற்றுத்தெரிந்துகொண்டீர்களோ?

பூ-அழகு; பொலிவு; கூர்மை. வேல்-வேலாயுதம்; இங்கு ஆயுதப்பொது. பூ அராவு வேல் - கூர்மையான அராவப்பட்ட ஆயுதங்களையுடைய. இந்த அடை புரந்தரனுக்குப் பொருந்துவதேயன்றி மூவருக்கும் பொருந்துவ தாகக் கொள்ளலாம். புரந்தரன் - இந்திரன். பொன்று - சாவாத. முனை - போர். எவர் - எவர். இடைதல் - பின்னிடல். தேவரோடு - தேவரிடத் தில். திகைத்தீர் - பிரமையடைந்தீர்கள்; பிரமை அடைந்தோரே! என்று விளியாகவும் கொள்ளலாம்.

'தான் என்ற இரண்டும் உயர்வு சிறப்புப்பொருள் விளக்கும். புரந் தரன் (பகைவர்) நகர மழிப்பவன். மூவர் - தொகைக்குறிப்பு; அயன், அரி, அரன்.........தேவரோடு என்ற இடத்து, மூன்ற னுருபு ஏழனுருபின் பொருளில் வந்தது, உருபுமயக்கம். இந்தச் சந்தர்ப்பத்தில் இப்படி மூன்ற னுருபு, ஏழனுருபின் பொருளில் வருதலை, "வெருவரும்படி பலகலை விதங் களும் வீடுமனுடன்கற்றூர்," "கண்டுதான் அவன்றனோடு கற்பதற் குன்னி னனே" என்ற இடங்களிலுங் காண்க.'—வை. மு. கோ.

பாட பேதம் : அறிந்துளி ராமெனத் திகைத்தீர். (௬௧)

இங்கோர் மானிடற் கித்தனை வீரர்க ளிடைந்தீர்
உங்கை வாளோடு போய்விழுந் தூர்புக லுற்றீர்
கோங்கை மார்பிடைக் குளிப்புறக் களிப்புற்றுங் கொழுங்கண்
நங்கை மார்களைப் புல்லுதி ரோநல நுகர்வீர்

கொண்டுகூட்டு : 'இங்கு ஓர் மானிடற்கு இத்தனை வீரர்கள் இடைந் தீர்! உம் கையில் வாளொடு விழுந்து (ஓடிப்)போய் ஊரில் (ஒளிக்கப்) புகல் உற்றீர்! (நாணமின்றி) நலம் நுகர்வீராய் உம் கொழுங்கண் நங்கைமார்களை, (அவர்கள்) கொங்கை (உம்) மார்பிடைக் குளிப்புறக், களிப்பு உற்றுப் புல்லுதிரோ?

பொருள் : 'இங்கே ஒரு தனி மனிதனுக்கு இத்தனை (எண் ணிறந்த) வீரர்களும் பின்னிட் டோடலுற்றீர்கள்! (போர்க்களம் விட்டோடுவோர்க்கு வாட்படை எதற்கென்று பார்ப்பவர் சிரிக்க) உங்கள் கையில் வாள் வைத்துக்கொண்டு (ஒருவர்மேலொருவர் முட்டி) விழுந்துகொண்டு ஓடிப்போய் ஊருக்குள்ளே ஒளிக்கப் புகுதலுற்றீர்களே! (ஒளித்ததோடே யன்றி, ஒளித்த இடத்திலே வெட்கமின்றி) இன்பம் அநுபவிப்பீருமாய் உங்கள் மனைவிமாரை அவர்கள் கொங்கை உங்கள் நெஞ்சில் முங்கத் தழுவுவீர்களோ?

*இடைதல் - பின்னிடல். குளித்தல் - முழுகுதல் - முங்குதல். கொழுமை - இளமை ; அழகு. உம் கொழும் கண் நங்கைமார் - உங்களுடைய அழகிய கண்களையுடைய மனைவிமார். புல்லுதிர் - புல்லுவீர் : புல்லுதல் - புணர்தல். நலம் - இன்பம் - சுகம். நுகர்தல் - அநுபவித்தல்.*

*' "இத்தனை வீரர்களாயிருந்தும், கைப் படைக்கலத்தை யிழவா திருந்தும், ஒரு மனிதனுக்கு அஞ்சி யோடி யொளிக்கலுற்று ஆண்மை யிழந்த நீங்கள் நாணமின்றி எங்ஙனம் உங்கள் மகளிரைச் சேர்வீ" ரென இகழ்ந்தான். அன்றியும், "இதில், உங்கள் ஆண்மை எதிரியின் முன் நின்று பொருது வெல்லுதற்கு அமையாமல் மெல்லியவரான மகளிரை அணைதல் மாத்திரத்துக்கே அமைந்தது போலு" மென்றமையுந் தோன்றும் 'வரைத் தடம்புயம் வளர்த்தது மகளிர்போர் பொரவோ" என்றது, இங்குக் கருதத் தக்கது. இந்தச் சந்தர்ப்பத்தில் "வீரர்கள்" என்றது இகழ்ச்சி; அன்றி, முன்பு பல போர்களில் இந்திரன் முதலியோர் முன்னும் பின்னிடாதிருந்த நிலையைப்பற்றிக் கூறினதாகவுமாம். கைப் படைக்கலத்தை யிழப்பின் ஒருகாற் பின்னிடைதலுமாம்; அதனை யிழவாமலே பின்னிடைதல் மிக்க இழிவாமென்பதை விளக்குவான் " உங்கை வாளொடு போய் " என்றான்'.*
— **வை. மு. கோ.**

பாட பேதம் : *புகழ்விழுந் தார்புக விரைந்தீர்.* (௩௨)

**33.** செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்
வெம்பு காட்டிடை நுழைதோறும் வெரிநுறப் பாய்ந்த
கோம்பு காட்டுதி ரோதட மார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதி ரோகுல மங்கையர்க் கம்மா

**கொண்டுகூட்டு :** *'(சினத்தினால்) செம்பு காட்டிய (உம்) கண் இணை (பயத்தினால்) பால் எனத் தெளிந்தீர். குல மங்கையர்க்கு, (ஓடும் வழியில்) வெம்பு காட்டு இடை நுழைதொறும் (உம்) வெரிந் உறப் பாய்ந்த கொம்பு (பட்டபுண்) காட்டுதிரோ? தடமார்பு இடைக் குளித்த அம்பு (பட்ட புண்) காட்டுதிரோ ?*

பொருள் : *' போர் செய்யப் புகுந்தபோது சினத்தினாற் சிவந்து செம்பு உருக்கப்பெற்றாற் போலச் செந்நிறங்காட்டின* ***உங்கள் கண்கள்,*** *இப்போது பயத்தினால் அந்தச் செந்நிறம் நீங்கி வெளுத்துப், பால்போல வெண்ணிறங் காட்டத் தெளிதலுற்றீர்கள்.* ***(விழுப்புண்ணாகிய மார்புப்புண் கண்டாற் கனிந்து மகிழ்தலும்***

வழுப்புண்ணாகிய முதுகுப்புண் கண்டால் முனிந்து இகழ்தலும் தம் இயல்பாகவுள்ள) குலமாதர்களான உங்கள் மனைவிமார்களுக்கு (நீங்கள் ஓடும் வழிகளில் உள்ள) காடுகளில் நுழையுந்தோறும் உங்கள் முதுகில் அழுந்தக் குத்திப் புகுந்த கொம்புபட்ட புண்களைக் காட்டுவீர்களோ? எதிர்த்துச் செய்த போரில் மார்பில் தைத்த அம்புபட்ட புண்களைக் காட்டுவீர்களோ?

இணை - இரண்டு. வெம்புதல் - கொதித்தல். வெம்புகாடு - பாலை வனம். வெரிந் - முதுகு. உற - பொருந்த - அழுந்த. உறுதல் மிகுதலுமாம். காட்டுதிர் - காட்டுவீர். தடம் - அகலம் - விலாசம். குளித்த - முழுகிய - புதைந்த. அம்மா என்பது, 'உங்கள் செயல் இரங்கத்தக்கது' என்ற பொருள் குறித்து இரக்கச் சொல்லும், 'உங்கள் செயல் எதிர்பாராதது' என்பது குறித்து அதிசயச் சொல்லும், ஒரு பொருளும் குறியாது அசைச்சொல்லுமாம். 'தெளிந்தீர்' வினைமுற்றாகக் கொண்டு உரை கூறப்பட்டது; 'தெளிந்தோரே!' என விளியாகவுங் கொள்ளலாம்.

கோப காலத்திற் கண்களில் இயல்பாக வுள்ள இரத்தத்தினும் அதிக இரத்தம் சுரத்தலாற் கண்கள் செந்நிறமாதலும், பயகாலத்தில் இயல்பாக உள்ள இரத்தமும் உள்ளே இழுக்கப்பட்டுக் குறைந்து (கருவிழியைச் சுற்றியிருக்கிற) வெள்விழி அதிக வெண்ணிறமாதலும் இயற்கை. இவ்வியற்கையுண்மை விளங்கச் 'செம்பு காட்டிய கண்ணிணை பாலென' என்றான். வெள்ளக் காலத்திற் சிவந்திருந்த நீர் வடிவுக் காலத்தில் தெளிந்த நீராதல் போலக் கோபகாலத்திற் சிவந்திருந்த கண்கள் பய காலத்தில் தெளிந்த கண்களாயின என்பது புலப்படத் 'தெளிந்தீர்' என்றான். (௩௩)

**34.** ஏக்க மிங்கிதன் மேலுமுண் டேயிகன் மனிதன்
ஆக்கும் வெஞ்சமத் தாண்மையவ் வமரர்க்கு மரிதாத்
தாக்க ரும்புயத் துங்குலத் தலைமகன் றங்கை
மூக்கோ டன்றியு முதுகோடும் போம்பழி முயன்றீர்

**கொண்டுகூட்டு:** 'இங்கு இதன்மேலும் ஏக்கம் உண்டே? (இதனால்) இகல் மனிதன், வெம் சமத்து ஆண்மை(யை) அவ் அமரர்க்கும் அரிதாக ஆக்கும். (யாவராலும்) தாக்கு அரும் புயத்து உம் குலத் தலைமகன் தங்கையின் மூக்கொடு அன்றி, உம் முதுகொடும் போம் பழி முயன்றீர்!

**பொருள்:** 'இங்கே நீங்கள் முதுகுகாட்டி ஓடுகின்ற இந்த இழிந்த கோழைச் செயலினும் அதிகமாகக் கவலைக் கிடமானது

உண்டோ?' நீங்கள் ஓடுதலால், நம்பாற் பகைமையுடைய இந்த மனிதன், தன் கொடிய போர்த் திறமையை அமரர்க்கும் அரிதான தாக ஆக்குவான் (அதாவது அமரர்கள் அளவிறந்தார் ஒன்றுகூடியும் செயிக்காத உங்களைத் தனியனுய்ச் செயித்தவனுவான்). சத்துருக்கள் யாவராலும் தாக்கவொண்ணுத வலிய தோள்களையுடைய உங்கள் குல முதல்வனுன இராவணனது தங்கை (சூர்ப்பநகையின் மூக்கு அறுபட்டதனுல் ஏற்பட்ட பழிப்புப் போதாதென்று நீங்கள் முதுகுகாட்டி யோடும் பழிப்பையும் உண்டாக்கி, அவள்) மூக்கோ டல்லாமல் உங்கள் முதுகோடும் நீண்டகாலம் நிலைக்கும் பழிப்பை உண்டாக்க முயன்றீர்கள்!

ஏக்கம், ஆகுபெயராய் ஏக்கத்துக்குக் காரணமெனப் பொருள்பட நின்றது. உண்டே, என்பதில் ஏகாரம் எதிர்மறைப் பொருள் குறித்த வினுவிடைச்சொல். இகல் - பகை. வெம் - கொடிய. சமம் - போர். அவ் அமரர் என்பதில் அகரம் பலரறிசுட்டு. போம்பழி - நீண்ட பழி. போதல் - நீளல். —இ. அ.

'இங்கு இதன்மேலும் ஏக்கம் உண்டே? (இதனுல்) இகல் மனிதன் வெம் சமத்து ஆண்மை(யை) அவ் அமரர்க்கும் அரிதா ஆக்கும்' எனக் கொண்டுகூட்டிப் பொருள்கொள்ளப்பட்டது. முன்னுரைகார ரொருவர் * 'இகல் மனிதன்..............அரிதா ( - இல்லாத தென்று சொல்லும்படி). தாக்கரும்.................முயன்றீர் இங்கு இதன் மேலும் ஏக்கம் உண்டே' என இயைத்துப் பொருள் கூறியிருத்தலும், மற்றொருவர் † 'தாக்கரும்... .........முயன்றீர் இகல் மனிதன் அவ் அமரர்க்கும் அரிதா வெம் சமத்து ஆண்மை ஆக்கும். ஏக்கம் இதன் மேலும் உண்டே' என அந்நுவயித்து அருத்தஞ் செய்திருத்தலும் காண்க.

இறுதியடியின் இனிய கவியின்பம் பன்முறை சுவைத்துப் பார்த்துப் பாராட்டற்பாலது.

பாட பேதம்: உண்டோ: அரிதால். (௩௪)

**35.** ஆர வாழ்க்கையின் வணிகரா யமைதிரோ வயில்வேல்
வீர வாட்கோடு வேன்மடுத் துழுதிரோ வெறிப்போர்த்
தீர வாழ்க்கையிற் றெவ்வரைச் செருவிடைப் பறித்த
வீர வாட்கையி ரேங்ஙனம் வாழ்திரோ விளம்பீர்

* வை. மு. கோ. † மு. ரா. க.

கொண்டுகூட்டு: 'செருவிடை வெறிப் போர்த் தீரம் வாழ்க்கையில் தெவ்வரிடம் பறித்த வீர வாள் (ஏந்திய) கையீர்! (இனி) வாழ்க்கையின் ஆர (- அமர) வணிகராய் அமைதிரோ? (உழவராய்) அயில்வேல் வீரவாள் (கொழுக்) கொண்டு (கரு)வேல் (கலப்பை) மடுத்து உழுதிரோ? எங்ஙனம் வாழ்திரோ? விளம்பீர்!'

பொருள்: 'போரிலே எதிர்த்த பகைவரிடமிருந்து பறித்த வீர வாள் ஏந்தி உள்ள கையையுடையோரே! (மானமின்றி முதுகுகாட்டி யோடும் நீங்கள் இனிச் சத்திரியர்க்குரிய போர்த் தொழில் புரிதலால் சீவனஞ் செய்தல் பொருந்தாது. வேறு) சீவனத்தில் அமர (வேண்டுமே, அதற்குச் சத்திரியர்க்கு அடுத்த) வைசியராய் அமர்வீர்களோ? (அல்லது அவருக்கும் அடுத்த) உழவராகி,) முன் போர்க்குரியதா யிருந்து இப்போது அதற்கு ஆகாமற்போய்விட்ட) வேலையும் வாளையும் கொழுவாகக் கொண்டு, அவைகளைக் கருவேலமரக் கலப்பைக் குத்திகளுட் புகுத்து (மாட்டிப் பகைவர் ஊனை உழுத கைகளால் வெறும் மண்ணை) உழுவீர்களோ? எவ்வாறு வாழ்வீர்களோ? சொல்லுங்கள்!'

அமைதிர் - அமைவீர். அயில் - கூர்மை. மடுத்தல் - உட்புகுத்தல். —இ. அ. வெறி - ஆவேசம்; ஒழுங்கு. —பத்துப்பா. வெறிப் போர் - வீராவேசத்துடன் அல்லது ஒழுங்குடன் பொரும் போர். 'உழுதிரோ வெறிபோர்' என்ற பாடத்திற்கு 'வீராவேசத்தை யுடைய போர்' என்றும்* 'எறிபோ'ரெனப் பிரித்து '(ஆயுதங்களை) எறிகின்ற போர்' என்றும் † பொருள் கூறப்பட்டிருத்தல் காண்க. தெவ்வர் - பகைவர். தெவ்வரை, உருபுமயக்கம். செரு - போர்.

'வாழ்க்கையின் (-சீவனத்தில்) ஆர (-அமர)' என மாற்றிப் பொருள் கூறப்பட்டது. இப்படி மாற்றாமல் 'ஆர வாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ' என்பதற்கு 'முத்து விற்கும் சீவனத்தையுடைய வர்த்தகராய் அமைவீர்களோ' என முந்திய இரண்டு உரைகாரர் உரை செய்திருத்தல் காணக.

'அயில் வேல் வீரவாட்கொடு வேல்மடுத்து உழுதிரோ' என்பதற்குக் 'கூர்மை பொருந்திய வேலையும் வலிய வாளினையுங் கொண்டு (அவற்றைக் கொழுவாக மற்றைய) வேல்களிற் பொருத்தி (பயிர்செய் நிலத்தை) உழுவீர்களோ' என்று ஓர் உரையாசிரியரும்*. கூர்மையுடைய வேலாயுதத்தை

* மு. ரா. க. † வை. மு. கோ.

யும் வலிமையுடைய வாளாயுதத்தையும் (உழுபடையாகக்) கொண்டு விளை நிலத்தில் ஊன்றவைத்து உழுது வாழ்வீர்களோ' என்று வேறோருரை யாசிரியரும்* உரை கூறியுள்ளார்கள். பின்னையவர் 'வேலியென்ற கழனிப் பெயர் வேல் என விகாரப்பட்டதென அறிக' என்றார். முன்னையவர் முதலடியில் உள்ள வேலை இரண்டாம் அடியிலுள்ள 'மற்றைய வேலிற் பொருத்தி' யென்றார். இரண்டாம் அடியிலுள்ள 'வேல்' என்பதற்கு இயையும் எளிதுமான பொருள் வேல மரம். 'ஆலும் வேலும் பல்லுக் குறுதி; நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' என்ற பழமொழியில், 'வேல்' கருவேல மரத்தைக் குறிப்பது யாரும் அறிந்தது. இப் பழமொழியிற் கருவேல மரத்தைக் குறிக்கும் வேல் பல் விளக்க வுதவும் கருவேல மரக் குச்சியை உணர்த்துதல் போல, இப் பாட்டின் இரண்டாம் அடியிலுள்ள வேல் கருவேல மரக் கொம்பினாற் செய்யப்பட்ட கலப்பைக் குத்தியை உணர்த்தியது. கலப்பை மிகப் பெரும்பான்மையாகக் கருவேல மரத்தாற் செய்யப்படுவது யாவரும் அறிவர். ஆதலால், கருவேல மரத்தின் சுருக்கப் பெயரான 'வேல்' ஆகுபெயராய் அம் மரத்தினாற் செய்யப்பட்ட கலப்பையினது மண்ணைக் குத்தும் உறுப்பாகிய கலப்பைக் குத்தியை உணர்த்தியதாகக் கொண்டு உரை கூறப்பட்டது.

பாட பேதம்: உழுதிரோ வெறி போர். (௩௫)

## தூடண வதம்

[ தோற்றோடுவாரை நோக்கித் தூடணன் இவ்வாறு சொற்பொழிவு செய்து, தன்னுடைய வில்லினது வல்லமையைச் 'சற்று நின்று பாருங்க'ளென்று கூறித் தன் சேனையுடன் இராமனை எதிர்ந்தான். 'உன் சேனையைக் காத்துக்கொள்' என்று கூறிக் கொண்டு இராமனும் தூடணனை எதிர்ந்தான். தூடணனும் அவன் சேனை வீரரும் கணைகள் விட, அவைகளை இராமன் தன் கணைகளா லறுத்தொழித்து, மேற்கொண்டும் சரங்கள் துரந்து சேனை முழுவதையும் சிதைத்து வதைத்தான். அதுகண்டு தூடணன் தன் தேரை இராமனெதிரே செலுத்தினான். அந்தத் தேர் அங்கங்கே குவிந்து கிடந்த பிணமலைகளின்மே லேறியும் இறங்கியும் இடறிப் பட்டபாடு இயம்ப இயலாததாயிருந்தது. அவன், மலையும் சிகரமும் போலத் தேருந் தானுமாக, அந்தகனெதிரே ஆவி சென்றாற் போல, இராமனெதிரே சென்று நின்று மூன்று அம்புகளை அவனுடைய நெற்றி இலக்காக விடுத்தான். அந்த

* வை. மு. கோ.

அம்புகள், ஆனையினது நெற்றிப் பட்டம்போல, இராமனுடைய நெற்றியில் விளங்கிய வீர பட்டத்திலே பட்டன. விண்ணவர் வெருவினர். இராமன் சிறிது சினந்து, சிறுநகை செய்து, சில கணைகள் செலுத்தித் தூடணனது தேரையும், வில்லையும், கவசத்தையுந் தொலைத்து, 'இந்தச் சரத்தைத் தடுக்க வல்லாயேல் தடுப்பாயாக!' என்று புகன்று, ஒரு சரம் துரந்தான். அவன் சிரம் இழந்தான். ]

கரன் வதை

[ கரும் பரும் காத்திரமுடைய கொம்பானை போன்ற வக்கிர தந்தங்கள் வாயில் விளங்கும் கரிய பெரிய உருவமுடைய கரன், தன் தம்பி தூடணன் வீடினதும் * அவன் சேனை அழிந்ததும் தெரிந்து சினந்து, கடலிடைச் செல்லும் கப்பல் போலச், சேனை சூழச் செல்லும் தேரிற் சென்று, இராமனை வளைத்தான். நால் வகைப் படைவீரரும் இராமன்மேல் அம்புகள் பொழிய, அவன் அவைகள் அழிய எதிரம்புகள் சொரிய, அவர்கள் கைவாள் உருவி வந்து எதிர்க்க, அவர்கள் மெய்யூடுருவ அம்பு விடுத்து அவன் அவர்க ளனைவரையும் கொன்றான். அது கண்டு, கரன் வெகுண்டு, கண்கள் கனல் சிந்தக், கைகள் கணை சிந்த, வந்து இராமனை எதிர்த்தான். இராமன், அவன் எய்த அம்புகளுக்கு எதிரம்புகள் எய்தான். தீயினது சிவந்த நிறமும் காற்றினது கடிய விசையுமுடைய கணைகளைக் கரன் தொடுக்க, இராமன் அந்த நிறமும் அந்த விசையுமுடைய அம்புகளால் அவைகளை அறுத்தான். அவன் மிக்க வலிமை யுடைய ஒரு சரத்தை யெடுத்து, இதனால் 'இவனைக் கொல்வே'னென்று கூறி, விசைத்து விடுத்தான். அதனால் இவன் வில் அறுபட்டது. படவே, இவனுக்கு வேறு வில் இல்லாமையை எண்ணி விண்ணவர் யாவரும் துண்ணென வெருவி வியர்த்து மெய்ந் நடுங்கினர். இவன், இறையளவு கவலையும் இல்லானாய்க், கையைப் பின்னே காட்ட, முன்னே தன்னிடம் கொடுத்துவைத்திருந்த பரசுராமன் வில்லை வருணதேவன் நீட்ட, வாங்கி வளைத்து, வாளி தொடுத்து, அவனுடைய வலிய தேரை யழியச் செய்தான். அவன், மலைமீது மழைமாரி பொழிந்தாற் போல, இவன்மீது சரமாரி சொரிந்தான். இவன், அந்தச் சரங்களைத் தன் கைச் சரங்களால் தடுத்து, அவன் வாளி தொடுக்கும்

* வீடல் - இறத்தல்.

வலக்காத்தை அறுத்து விழுத்தினன். அவன மற்றொரு கைகொண்டு மரங்களையும் மலைகளையும் பிடுங்கி யெறிய, இவன அவனுடைய கரத்தை அறுத்தது போலச் சிரத்தையும் அறுத்தான்.

பூமியிலே தான் இருந்த இடந்தெரியாதபடி தன்னை வளைந்த இராக்கதர் சேனைக ளெல்லாவற்றையும் தன் சரங்களால் அழித் தொழித்து விளங்கிய இராமன், ஆகாயத்திலே தானிருக்கு மிடந் தெரியாமல் தன்னை மறைத்த பனி முழுவதையும் தன் கிரணங் களால் அகற்றிப் பிரகாசிக்கும் சூரியன் போன்ருன். அமரர்கள் அலர் பொழிந்தார்கள். முனிவர்கள் ஆசி மொழிந்தார்கள். ]

இராமன் வெற்றிவீரனய்ச் சீதா லக்ஷுமணரிடம் திரும்புதல்

[ உயிர் போர்க்களத்துக்குப் போய்விட, உணர் வொழிந்த உடல்போ லிருந்த சீதையிடம் இராமன் திரும்பி வந்துசேர்ந்தான். சீதையும் இலக்குமணனும், அவன் காலிற் படிந்த அரக்க ரிரத்த மும் போர்க்களப் புழுதியும் போகக் கழுவுவார்போலக், கண்ணீர் பொழிந்து காலில் விழுந்து வணங்கினர்கள். அலையொலி மலியும் ஆழியி னடுவில் மகா விட்டுணு வைகுதல் போலச், சந்தோடத் தால் ஆரவாரித்துத் தன்னைச் சூழ்ந்து குழுமிய இமையவ ரிரு டியர் குழாத்தின் மத்தியில், இராமன் இருந்தான். ]

சூர்ப்பநகை கரனுடலைக் கட்டி அழுதல்

[ இங்கே இராமன் முதலியோர் கூட்டமாயிருந்து குதுகலியா நிற்க, அங்கே சூர்ப்பநகை தனியே வருந்திக் கரனுடலைக் கட் டித் தழுவிக் கதறியழுது கவலை கூர்ந்திருந்தாள். ]

சூர்ப்பநகை தன்னை நொந்துகொண்டு இலங்கைக்கு ஏகுதல்

**36.** ஆக்கி னேன்மனத் தாசையவ் வாசையேன்
மூக்கி னேடு முடிய முடிந்திலேன்
வாக்கி னலுங்கள் வாழ்வையு நாளையும்
போக்கி னேன்கொடி யேனென்று போயினள்

கொண்டுகூட்டு: 'என் மனத்தில் ஆசை ஆக்கினேன். அவ் ஆசை என் மூக்கினேடு முடிய (யான்) முடிந்திலேன். (உங்களை அவர் மீது ஏவி

என்) வாக்கினால் உங்கள் வாழ்வையும் நாளையும் போக்கினேன்; (ஆதலின்) கொடியேன்!' என்று போயினாள்.

பொருள்: 'என் மனத்தில் (இராமனைச் சேரவேண்டுமென்ற) ஆசையை விளைவித்தேன். அந்த ஆசை என் மூக்கோடு முடிந்தது. அது அவ்வாறு முடியவும் (யான் வெட்கத்தால்) இறந்தொழிந்தேனில்லை. (இறந்தொழியாத யான், "என்னவர்களே! இராம லக்குமணரைக் கொல்லுங்கள்!" என்று உங்களை ஏவி, என்) வாய் மொழியினால் உங்கள் செல்வ வாழ்க்கையையும் சீவ நாட்களையும் தொலைத்தேன்; (ஆதலால் யான் மிகவும்) கொடுமையுடையேன்!' என்று கூறிக்கொண்டு சூர்ப்பநகை இலங்கைக்கு ஏகினாள்.

முடிதல் - முடிவுறுதல் - முற்றுதல்; சாதல். வாக்கு - சொல்.

இக்கவி, நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நிகழ்ந்தவாறே நிரல்பட நிகழ்த்துதற்கண், நெஞ்சம் நெக்குருக, நிரம்ப நயம்பட நிகழ்த்தியிருத்தல் கவனித்தற்குரியது. (௯௩)

## 7. மாரீசன் வதைப் படலம்

[ மாரீசனை இராமன் கொன்றதைக் கூறுவது ]

### சூர்ப்பநகை இராவணனைக் காணச் செல்லல்

[ சூர்ப்பநகை, கரன் முதலியோர் இறந்ததனால் ஏற்பட்ட சோகத்தை இராமன் மோகத்தால் மறந்து, சீதையின் அழகை இராவணனுக்கு எடுத்துக்கூறி மோகமூட்டி, அவன் அவளைக் கவரச்செய்து, அதனால் இராமனை எய்துதற்கிடையூறா யிருப்பவளை யொழிப்பதோடு தன் மானபங்கத்துக்கு எதிர் மானபங்கஞ் செய்வது ஆமென்று இராவணனைக் காணச் சென்றாள். அப்போது, பிரபல வரபலத்தாலும் பெரிய புய பலத்தாலும் மூன்றுலகுக்கும் முதல்வனான இராவணன், விசுவகருமனால் அவனது அருமையான சிற்பத் திறமை யனைத்தும் தெரியுமாறு செய்யப்பெற்ற அரசிருக்கை மண்டபத்திற் கொலுவிருக்கும் அமையமாயிருந்தது. ]

இராவணன் கொலுவிருக்கை

[ *திரிமூர்த்திகளாலும் செயித்தற்கரிய திறனுடைமையால் யார்க்கும் வணங்காத ஈரைந்து மகுட வரிசைகள், மாதர்களின் ஊடற்காலத்து அவர்கள் பிணக்கைத் தணித்து இணக்குதற்கும் வணக்கம் புரியாத அரிய மகிமையுடையனவாய் வயங்கவும், இருபது புயங்களும் இருபது உதயகிரிகள் போல, அவைகளின் மேலாக ஈராறு சூரியர் இருபது சூரியராய்த் துலங்கல் போல இருபது கர்ணகுண்டலங்கள் இலங்கவும், இரத்தினகேயூரம் பூண்டு இருநிலந் தாங்கும் அந்த ஈரைந்திரட்டிப் புயவரிசைகள், நாகமணிகள் விளங்குகின்ற ஞாலஞ் சுமக்கின்ற ஆதிசேடனது படவரிசைகள் போலப் பயங்கரமாகப் பிறங்கவும், இலங்கையிற் சிறைப்பட்டிருந்த பலநிற ஒளி படைத்த நவக்கிரக வரிசைபோல, நவரத்தினங்களா லமைந்த அரதனமாலை அணிந்த கரிய பெரிய மார்பு அந்த ஒன்பது கோள்களும் ஒருங்கு பிறங்கும் நீலவிசும்பு போல விளங்கவும், இராக்கத ராசராதி பல சாதி அரசர்கள் நெருங்கி வணங்கலால் அவர்கள் மணிமுடிகள் படியுந்தோறும் தேய்ந்து தேய்ந்து ஒலி செய்து வீரகண்டைகள் விளங்கவும்,* ]

**37.** இன்னபோ திவ்வழி நோக்கு மேன்பதை
உன்னலர் கரதலஞ் சுமந்த வுச்சியர்
மின்னவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்கள்
துன்னினர் முறைமுறை துறையிற் சுற்றவே

கொண்டுகூட்டு : *துறை(-அவை)யில், மின் அவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்கள், (இராவணன்) இன்னபோது இவ்வழி நோக்கும் என்பதை உன்னலர், கரதலம் சுமந்த உச்சியர், துன்னினர் முறைமுறை சுற்ற(வும்),*

பொருள் : *மின்(னினது பிழம்புபோல) விளங்குகின்ற இரத்தின கிரீடம் தரித்த வித்தியாதர வேந்தர்கள், இராவணன் இன்ன சமயத்தில் இன்ன பக்கம் நோக்குவா னென்பதை யறியாராய், ('நாம் பராமுகமாயிருக்கும் சமயத்தில் அவன் நாமிருக்கும் பக்கத்தைப் பார்க்கும்படி நேர, அந்தச் சமயத்தில் நாம் வணங்காதிருந்தால், நம் கதி யாதாம்! நம் தலை போய்விடுமே!' என்ற பயத்தால் எப்போதும் கும்பிட்டுக்கொண்டிருக்கும்) கைகளைச் சுமந்த*

தலையினராய் நெருங்கித், தாம் நிற்கவேண்டிய வரிசைக்கிரமமாகச் சூழ்ந்து நிற்கவும்,

உன்னல் - நினைத்தல்; முன்பின் தொடர்ச்சியால் அறிதலை உணர்த்தியது. வழி - இடம். 'விஞ்சை வேந்தர் - மாலிகாஞ்சனம் முதலிய மாய வித்தைக்குத் தலைவர்; வித்யாதரர் என்ற வடமொழிப் பெயர்க்கும் பொருள் இதுவே.'—வை. மு. கோ. துன்னல் - கிட்டல் - சமீபித்தல். முறைமுறை - வரிசைக்கிரமமாக. துறை - (சபையின்) இடம் - அவை அகம். (௩௭)

38. மங்கையர் திறத்தொரு மாற்றங் கூறினும்
தங்களை யாமெனத் தாழுஞ் சென்னியர்
அங்கையு முள்ளமுங் குவிந்த வாக்கையர்
சிங்கவே றெனத்திறற் சித்தர் சேரவே

கொண்டுகூட்டு: சிங்கவேறு எனத் திறல் சித்தர், (இராவணன்) மங்கையர் திறத்து ஒரு மாற்றம் கூறினும், (அது) தங்களை(க் குறித்தது) என்னத் தாழும் சென்னியர், அங்கையும் உள்ளமும் குவிந்த ஆக்கையர், சேர (நிற்கவும்),

பொருள்: ஆண்சிங்கம் போல வலிமையுடைய சித்த ராசர்கள், இராவணன் பெண்களைக் குறித்து ஒரு வார்த்தை பேசினும் அது தங்களைக் குறித்துப் பேசியது என்று (அவன் எது சொன்னாலும் அதனை அவர்கள் தலைமேலேற்றுக்கொள்ளுதற் கடையாளமாகத் தலை வணங்கும் வழக்கத்தின் பலத்தால், அவர்கள் வணங்க எண்ணு முன்னமே, தாமாகவே) வணங்குந் தலைகளையுடையவர்களும், (அஞ்சலி காரணமாக) அங்கையும், (அச்சம் காரணமாக) அகமும் குவியப்பெற்ற உடம்புகளை யுடையவர்களுமாகித் திரண்டு நிற்கவும்,

திறம் என்பதற்குக் காரணம், இடம் என்ற பொருள்கள் (—த. அ.) இருத்தலால், மங்கையர் திறத்து என்பதற்கு மங்கையர் காரணமாக வென்றும், மங்கையரிட மென்றும் பொருள் கொள்ளலாம். ஆம், அசை. ஏறு - சிங்கம் முதலிய சில மிருகங்களின் ஆண். திறல் - வலிமை. சேர்தல் - திரளல். அங்கைகுவிதல் கைகூப்பிக் கும்பிடலையும் உள்ளங்குவிதல் மனம் ஒடுங்கி அடங்குதலையும் நயம்படப் புலப்படுத்தும் வண்ணம், 'குவிதல்' என்ற பதம் சாதுரியமாகப் பிரயோகிக்கப்பட்டிருத்தல் கவனிக்கத் தக்கது.

'தாழ்த்தும் சென்னியர்' என்னாது 'தாழும் சென்னியர்' என்றது அவர்கள் நினைத்துத் தாழ்த்து முன்பே, தலைகள், வழக்கம் காரணமாகத், தாமாகவே தாழ்தலைக் குறித்தது. (௬அ)

[ அமைச்சரிடம் அமைதியாக யாதேனு மொரு நன்மொழி கூறினாலும், அச்சமேலீட்டால் அது தங்களுக்கு அபாயம் விளைப் பதோர் ஆணையோ வெனப் பெரும்பயங் கிடந் தலைக்கப்பெற்ற நெஞ்சினராய்க் கின்னர மன்னவர் சென்னி இறைஞ்சித் தெண்ட னிட்டு நிற்கவும், 'கால தண்டத்தைக் கையிலேந்திய நமனைக் கண்ட நரகவாசிகள் நடுங்கல் போல, நாகராசர் நடுங்கி வணங்கி நிற்கவும், திசையானைகளின் கொம்பை யொடித்த செயத்தையும், பசுபதியும் வசைமருவ வெள்ளி வெற்பெடுத்த விசயத்தையும் இசையோ டிசைத்துப் பாடித், தும்புரு நாரதர் இனிய கான ரசத்தை இருபது காதுகளிலும் வார்க்கவும், வருணதேவன் வாச நீரை அவைக்கணுள்ளார் ஆடை நனையாமல், அச்சத்தோடு சின் னஞ் சிறிய திவலைகளாகச் சிதறித் தெளிக்கவும், வாயுதேவன், நெருங்கி வணங்குகின்ற நிருபர் மணிமுடிகள் உரிஞ்சி உதிர்ந்த பொற்றாள் மணித்தூள் முதலிய எத்தூளும் தரையில் விழுமுன் தாங்கிக்கொண்டுபோய் அப்புறப்படுத்தித், துப்புரவு செய்யவும், தடாகத்திலே தாமரை மலர்ந்தாற்போலச் சபாமண்டப மெங்கும் தீபமேற்றும் சேவையைத் தீக்கடவுள் செய்யவும், தேவாசுர ஆசாரியரான வியாழ வெள்ளிகள் சேவகர்க்குரிய நெடுஞ்சட்டை பூண்டு, பொற்பிரம்பேந்தி, இந்திராதிய இராசர்களுக்கு ஏற்பட்ட இருக்கைகளை அவரவர்க் களித்து உபசரித்திடும் பணியியற்றவும், காலக்கடவுள் காலதண்டம் பாசம் முதலிய ஆயுதங்களை அகற்றி, வெறுங்கையனாய் நின்று, தலைவணக்கத்தோடு வாய் பொத்திக் காலங் கழியுங் கணக்குக் கூறுஞ் சேவகஞ் செய்யவும், கற்பகதரு வும், காமதேனுவும், சிந்தாமணியும், சங்கநிதி பதுமநிதிகளும் ஏற்பாருக்கு ஈய எண்ணிய எப்பொருளையும் கூறுமுன் குறிப் பறிந்து கொடுத்தற்குச் சித்தமாய் அடுத்துக் காத்திருக்கவும், கங்காதேவி முதலிய தீர்த்த கன்னியர் மங்கல அக்கதையும் வாச மலரும் தூவி மங்கள வாழ்த்துக் கூறவும், மேகத்தொனி கேட்டு ஆடும் மயில்கள் போல மேனகையாதிய வானகமாதர்கள், தாளத் தொனிக் கேற்ப நாடகமாடவும், இராவணன், காரிகையார் காதற் பார்வை அலை மோதப்பெற்று, இறுமாந்து கொலுவிருந்தான். ]

## கொலுவிருக்கும் இராவணன் சமுகத்தில் மூக்கறையான சூர்ப்பநகை சேர்தல்

[ வடக்கேயுள்ள தண்டகாரணியத்திலிருந்து தென்னிலங்கைக்கு வந்த சூர்ப்பநகை இராவணன் அரண்மனை வடதிசை வாயிலை அடைந்தாள். (செம்மேகம் கருமலை யுச்சிநின்று இறங்கி அம் மலைச்சரிவிற் பரவல்போலச் செம்பட்டைக் கூந்தல் தலையினின்று சரிந்து முதுகிற் புரள்வதற் கெதிரிடையாகச்) சிவந்த இரத்தவாரி மூக்கினின்று வழிந்து மார்பிற் பரவ வந்தவளைக் கண்டு, 'இராவணேசுரனது ஆணையால் இலங்கையிலுள்ள விலங்குகளையும் துன்புறுத்துவா ரில்லையே! திரிலோகாதிபன் தங்கையென்று தெரிந்தும் இவ்வாறு செய்வாருளரோ? இலங்கேசன் தங்கையென் றறிந்தவுடன் "தாயே"யென்று தாள் பணிவாரன்றி, எண்ணவு மொண்ணாத இச் செய்கையை இயற்றுவா ரெவருமிலர். இவள் தானே தன்னை யரிந்தாளாதல் வேண்டும்!' என்று தங்களுள்ளே நினைந்து இலங்கை மாந்தர்கள் கலங்கி, அவள் காலில் விழுந்து கதறி யழுதார்கள். அவள், அமரேசனாதி அகில உலக அரச ரனைவரும் அடிவணங்க முடிபுனைந்து, வரையறையற்ற வைபவத்துடன் குதுகலித்துக் கொலுவிருக்கும் இராவணனெதிரே, காதறையும் மூக்கறையுமாய்க் கதறி யழுதுகொண்டு காலில் விழுந்தாள்.

(பூரண கிரகணதினமாய்த், தன் பூரண கலையுடன் பொலியும் பூரணையில் கலைகள் முழுதும் இழந்து கருமையுறும்படி கரும் பாம்பு வரக் கண்ட சந்திரன்போல,) இராவணன், உயர்வற உயர்ந்த நிலையிலிருக்கும் அச்சமயத்தில், இழிவற இழிந்த நிலை எய்தும்படி, அங்கபங்கப்பட்ட தங்கை வரக் கண்டு கொடிய கோபங்கொள்ள, நெறிப்புண்டு புருவங்கள் நெற்றியிலேறச், செந்நெருப்புப் போலக் கண்கள் சிவக்கக், கண்ட தேவாதியர் திகிலுற்றுச் செய்வதின்னதென்று தெரியாராய்த் திகைத்தார்கள். யாவரும் நடுங்கும் நமனும் நடுங்கினான். 'இன்று நமக்கு இறுதிக்காலம் வந்தது' என்று எல்லாரும் பேச்சு மூச்சின்றிப் பிரமித்திருந்தார்கள். ]

## சூர்ப்பநகை தன்னை உறுப்பறையாக்கியவரைப் பற்றி உரைத்தல்

[ அப்போது இராவணன், படபடத்துப், பற்கடித்து, வாய் மடித்து, மீசைதுடிக்க, மேகம் இடித்தாற்போல, ' இது செய்தவர்

*யார்?' என்று சூர்ப்பநகையைக் கேட்டான் அவள், 'காசினி ஆள்பவர்; காமனை நேர்பவர், பூமியிலுள்ளார் யாவரும் ஒவ்வார், கானிடை உறையும் மானுடர் இருவர்' என்றாள். எனவே, 'மனிதராவது! இது செய்வதாவது!' என்று வெடிபடச் சிரித்து, 'மனிதர் வலிமை மிகவும் சிறிது, உண்மை உரைத்திலை; பொய் சொன்னாய்; நடந்ததை நடந்தபடி சொல்' என்றான். 'மேனி அழகினால் வேளை நிகர்ப்பவர், தோளின் வலியினால் மேருவை அழிப்பவர், உலகம் ஏழையும், ஓர் இமைப் பொழுதில், வில்லினால் வெல்லும் வல்லமை உள்ளவர், முனிவரை யன்றி எவரையும் வணங்கார், மரவுரி உடுத்தவர், சடைமுடி தரித்தவர், தூணி சுமந்த தோள்வலி மிக்கவர், உன்னை ஓர் பொருட்டா உன்னாதவர்கள், "இராக்கதருக்கு யாங்கள் அஞ்சினேம்" என்று முனிவர் கூற, "அரக்கர் குல மனைத்தையும் வேரறக் கொன்றுவிடுவேம்" என்று அபய மளித்துச் சபதஞ் செய்துள்ளார்கள்' என்று மேலுங் கூறுவாள் :* ]

**39.** மாரருள ரேயிருவ ரோருலகின் வாழ்வார்
வீரருள ரேயவரின் வில்லதனின் வல்லார்
ஆரோருவ ரன்னவரை யொப்பவர்க ளையா
ஓரோருவ ரேயிறைவர் மூவரையு மொப்பார்

கொண்டுகூட்டு : *'மாரர் இருவர் ஓர் உலகின் வாழ்வார் உளரே? வில்லில் அவரின் வல்லார் வீரர் உளரே? அன்னவரை ஒப்பவர்கள் ஒருவர் ஆர்? ஐயா! (அவர்கள்) ஓர் ஒருவரே இறைவர் மூவரையும் ஒப்பார்.'*

பொருள் : *'(அழகு மிக்க அவர்களுக்கு மன்மதன் நேராவதற்கு, அவன் ஈசன் விழியால் எரிந்து உடலிழவாதிருந்திருக்க வேண்டும். அன்றி அவன் ஒருவனா யில்லாமல் இருவரா யிருக்க வேண்டும். அவ் இருவரும் வெவ்வே றுலகத்தில் வாழாமல் ஓருலகத்தில் வாழ்வாரா யிருத்தல் வேண்டும். அவ்வாறாக,) மன்மதர் இருவராய் இருப்பதோடு ஓர் உலகத்தில் வாழ்வாராய் இருக்கின்றார்களா? (இல்லை). வில்வித்தையில் அவர்களைக் காட்டிலும் வல்லவரான வீரர்கள் இருக்கின்றார்களா? (அதுவும் இல்லை). அப்படிப்பட்ட சிறப்புடைய இருவர்களை நேர்வார் (—இருவரில்லை யென்றேன்—அவர்களை நேர்வார்) ஒருவர்தான் யார் இருக்கின்றார்?*

ஐயா! (சொல்வாய். உன்னுற் சொல்ல முடியாது. ஏனெனில்,) அவர்கள் ஒவ்வொருவருமே தனித்தனியாக, முதற் கடவுளரான மும்மூர்த்தியரையும் ஒருசேர நிகர்வார் என்க.'

மாரன் - மன்மதன். வில் - வில்வித்தைக்கு ஆகுபெயர். அன்னவர் - அப்படிப்பட்டவர்கள். சூர்ப்பநகை, தான் காதும் மூக்கும் களையப்பட்டு அவமானமடைந்த தாழ்நிலையிலிருந்தமை கருதி, மகோன்னத நிலையிலிருந்த தமையனை 'அண்ணு!' என விளித்தல் அடாதென 'ஐயா!' என விளித்தாளெனக் கொண்டால், 'ஐயா' என்பது மரியாதை விளிப்பெயராம்; இராம லக்குமணரது அழகு வீரம் இரண்டினும் ஈடுபட்டு அவசமுற்றதனுல் 'தமையனிடம் பேசுகின்ருே' மென்பதை மறந்து வழக்கம் போல 'அண்ணு!' என்னுளாய், 'ஐயா!' என்ருளெனலுமாம்; அன்றித், தான் கூறுவதைக் கூர்ந்து கவனிக்கும்படி செய்தற்காக வேண்டுமென்றே சாதாரணமான 'அண்ணு!' என்னும் விளியை வழங்காமல் சாதுரியமாக 'ஐயா!' என்னும் விளியை வழங்கினுளெனலுமாம். 'தமையன் தந்தைக்கு ஒப்பானவன் என்பது நூற்கொள்கையாதலால், ஐயா என விளித்தாள்' என்பது முந்திய உரை *. இறைவன் - கடவுள்; சிவன்; திருமால்; பிரமன் —ந. அ. திரிமூர்த்திகளைத் தனித்தனியாகவும், சேர்த்தும் உணர்த்தும் 'இறைவர்' என்ற சொல்லை இங்கே பொருத்தமாக இனிதெடுத்தாண்டிருக்கும் நயம் பாராட்டத் தக்கது. ஏகாரம், முதலாவது வினு, இரண்டாவது எதிர்மறை, மூன்ருவது பிரிநிலை. முதலிரண்டையும் இல்லையென்பதை உட்கொண்டு வினுவிய எதிர்மறை வினு எனலுமாம். 'மாரர் இருவர் ஓர் உலகின் வாழ்வார் உளரே' என்றும் 'அன்னவரை ஒப்பவர்கள் ஒருவர் ஆர்' என்றும் கூட்டிப் பொருள் கூறப்பட்டது. ஒப்பவர்கள் என்பதில் கள் விகுதிமேல் விகுதி; அசை யெனலுமாம். —சிந்தா.

'உருவ மன்மதன் ஒருவனும் இல்லை. அருவ மன்மதன் ஒருவனே உள்ளான். ஆதலால், மன்மதர் இருவரில்லை யென்று சொல்லவும் வேண்டுமோ?' வென்பாள், 'மாரர் இருவர் உளரே?' என்ருள்.

இராம லக்குமணரது அழகின் சிறப்பை முதலடியிலும், அவர்களது போர்த்திறமைச் சிறப்பை இரண்டாமடியிலுங் கூறி, இவ்விரு சிறப்புமுடைய அவர்களை ஒருசேர நிகர்வா ரொருவர் யார் என்னும் வினுவால் ஒருவருமில்லை யென்பதை மூன்ரும் அடியில் உணர்த்தி, அதனை வற்புறுத்துவாளாய்ச், சிறந்த அழகும் ஆற்றலும் சேர உடைய திரிமூர்த்திகளில் ஒருவர் நிகராரோ வென்ருல், நிகரார்; அவர்கள் மூவருஞ் சேர்ந்து அவ்விருவருள்

* வை. மு. கோ.

ஒருவரைத்தான் ஒப்பாரென்பாள், 'ஓரொருவரே இறைவர் மூவரையும் ஒப்பார்' என நான்காம் அடியிற் கூறினாள்.

இது இனிய கவிகளுட் சிறந்த கவிகளு ளொன்று. (௯௧)

[ 'அவர்கள் அயோத்தி மாநகருக் கரசனான தசரத சக்கரவர்த்தியின் தனயர். அவனுடைய ஆணைப்படி ஆரணியவாசம் செய்கின்றார். இராமன் இலக்குமணன் என்னும் பெயரினர்' என்றாள். ]

## இராவணன், 'கரன் முதலியோர் அவர்களைக் கொன்றிலரா?' என்று கேட்டல்

[ அவள் இவ்வாறு கூறியதைக் கேட்ட இராவணன், 'தன் அருமையான தங்கை மூக்கை அரிந்தவர்கள் அற்ப மனுடர். அவர்கள் அரியப் புகுந்த போதே கொல்லப்பட்டிலரேனும் அரிந்த பின்னும் கொல்லுண்ணா துயிரோ டிருக்கின்றார்கள்! அவர்களை உயிர்வாழ விட்டு அணுவளவும் வெட்கமில்லாமல் (அவரைக் கொல்லாது தன்னையுங் கொல்லாது வாளா இருக்கின்ற) வாளாயுதத்தோடு உயிரை வைத்துக்கொண்டு இராவணன் இன்னமும் இறவாதிருக்கின்றான்! திக்குவிசயஞ்செய்து திரிலோகாதிபனான தன் பலன் இதுதானோ! இறவாத புகழ் இறத்தலுற்றேன்! அகில உலக வீரர் தலைகளனைத்தையும் அரிந்தாலும், அரிந்த நாசி பொருந்தாது. போன மானம் மீளாது! மனமே! மாளாத வன்பழி வந்ததென்று வருந்தாதே. அப்பழி சுமக்க இத் தலைகள் பத்திருக்கின்றன. அன்றி இருபது தோள்களும் இருக்கின்றன என்று கூறிச் சீறிச் சினச் சிரிப்புச் சிரித்துத், தீ எழ விழித்து, 'எளிய முனிவரன்றி வலிய துணை யொருவரேனு மில்லாத இருவரேயான சிறிய மனிதரைக் கரன் முதலிய கணக்கற்ற இராக்கத வீரரெவரும் கொன்றிலரா?' என்றான்.

## சூர்ப்பநகை கரன் முதலியோர் கொல்லப்பட்டமை கூறல்

[ எனவே, சூர்ப்பநகை, சோக மிகுந்து, பூமியில் விழுந்து, கண்ணீர் சொரிந்து, கதறி அழுது, 'கரன் முதலியோர், இக்கதி அடைந்த என்னை நோக்கி, "இப்படிச் செய்தவர் எவர்?" என,

யான் இன்றுசென்ற வுடனே, சேனை முழுவதையும் திரட்டிக் கொண்டு சென்றார்கள். எல்லாரும், இராமனுடைய ஒரே வில் லால், மூன்றே நாழிகையில் முடிந்தார்கள்' என்றாள்.

இராவணன் ஏக காலத்தில் சோகமும் கோபமும் எய்துதல்

[ தம்பியர் மூவரும் தானைகள் யாவும் தனி மனிதனாற் சாதலுற்றாரென்ற சொல் செவிகளுட் செல்லுமுன், மேகசாலத்தி னின்று ஏக காலத்தில் மின்னும் மழையும் வெளிப்படல் போல, இராவணனது இருபது கண் வரிசைகள் நெருப்பையும் நீரையும் சொரிந்தன (கோபத்தையும் கண்ணீரையும் வெளிப்படுத்தின என்றபடி).

அப்போது, நெருப்புக்கு நெய்போலக், கோபத்துக்குச் சோகம் துணைசெய்ய, இராவணன், சூர்ப்பநகையை நோக்கி, 'அவர்கள் உன்னை உறுப்பரிய, நீ இழைத்த பிழை என்?' என்றான். ]

சூர்ப்பநகை இராவணனுக்குச் சீதைமீது மோகமுளச் செய்தல்

**40.** என்வயி னுற்ற குற்றம்
யாவர்க்கு மெழுதோ ணாத
தன்மைய னிராம னோடுந்
தாமரை தவிரப் போந்தாள்
மின்வயின் மருங்குல் கொண்டாள்
வெய்வயின் மென்றோள் கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள்
பொருட்டினாற் புகுந்த தென்றாள்

கொண்டுகூட்டு: 'என் வயின் உற்ற குற்றம், தாமரை தவிர, யாவர்க்கும் எழுத ஒண்ணாத தன்மையனான இராமனோடு போந்தாளும், மின்வயின் மருங்குல் கொண்டாளும், வெய்வயின் மென்தோள் கொண்டாளும், பொன்வயின் மேனி கொண்டாளும் (ஆனவள்) பொருட்டினால் புகுந்தது' என்றாள்.

பொருள்: '(நான் நன்மையே செய்யக் கருதினேன். குற் றஞ் செய்தேனல்லேன். நிரபராதியான என்பாற் குற்றம் சம்ப வித்தது எப்படி யென்றால்,) என்னிடத்திற் சம்பவித்த குற்றம்,

தாமரை மலர் (ஆதனமாகத் தான் வீற்றிருக்கப்பெற்ற பாக்கியத்தை) நீங்கி இழக்க (அதனை அகன்று) இராமனுடன் வந்தவளும், மின்னினிடத்திருந்து இடையினது நுடக்கத்தைக் கொண்டவளும், மூங்கிலினிடத்திருந்து மெல்லிய தோள் வடிவத்தை வாங்கியவளும், பொன்னினிடத்திருந்து மேனியின் நிறத்தைப் பெற்றவளும் ஆனவள் ஒருத்தி காரணமாகச் சம்பவித்தது' என்று சூர்ப்பநகை விடை கூறினாள்.

வயின் - இடம். உற்ற - சம்பவித்த - நேர்ந்த. யாவர்க்கும் - யாவரானும்: உருபுமயக்கம். எழுதல் - (சித்திரத்தில்) எழுதல் - சித்திரித்தல். எழுதொணாத தன்மையன் - (சித்திரத்தில்) எழுதுதற்கரிய (வடிவமுடையவன். தன்மை - குணம்: உருவின் குணமான அழகைக் குறித்தது. வேய் - மூங்கில். பொருட்டு - காரணம். புகுந்தது - சம்பவித்தது. 'எழுதொணாத' என்பது 'எழுத ஒண்ணாத' வென்பதன் விகாரம்; அகரம் தொக்கது.

புகுந்தது என்பதற்கு '(நான்) அருகிற் சென்ற மாத்திரமேயாம்' என்பதும், '"எழுதொணாத தன்மையள்" என்று பாடமோதி இதனையும் பிராட்டிக்கு அடைமொழியாக்குவாரும் உளர்' என்பதும் முந்திய உரை.* இதன் பின் 'தெவ்வுலகத்தும்' என்ற 45-ம் பாட்டில் 'யாவர்க்கு மெழுதொணாதாள்' என்பது வருதலாலும், இராமனை எண்ணுந்தோறும் சூர்ப்பநகை அவன் அழகில் ஈடுபட்டு மனமுருகலை மறைக்க முடியாதவளாயிருத்தலாலும் 'எழுதொணாத தன்மையள்' என்ற பாடம் பொருந்தாது.

பாட பேதம்: எழுதொணாத—தன்மையள். (சo)

**41.** ஆரவ ளென்ன லோடு மரக்கியு மைய வாழித்
தேரவ ளல்குல் கொங்கை செம்பொன்செய் குலிகச் செப்பு
பாரவள் பாதந் தீண்டப் பாக்கியம் படைத்த தம்மா
பேரவள் சீதை யென்று வடிவெலாம் பேச லுற்றாள்

கொண்டுகூட்டு: (இராவணன்) 'அவள் ஆர்?' என்னலோடும், அரக்கி, 'ஐய, அவள் அல்குல் ஆழித்தேர்; கொங்கை செம்பொன் செய் குலிகச் செப்பு; பார் அவள் பாதம் தீண்டப் பாக்கியம் படைத்தது அம்மா! அவள் பேர் சீதை' என்று வடிவெலாம் பேசல் உற்றாள்.

வை. மு. கோ.

பொருள்: (அது கேட்டு இராவணன் சூர்ப்பநகையை நோக்கி,) 'அவள் ஆர்?' என்ற அளவிலே, சூர்ப்பநகை, 'அவளுடைய அல்குல் தேர் போலும்; கொங்கைகள் சிவந்த அழகு செய்கின்ற சாதிலிங்கத்தினாற் செய்த செப்புக்கள் ஒக்கும்; (சாதாரணமான தெய்வப் பெண்களின் பாதத்தையே தீண்டப்பெறாத) பூமி (அவரெல்லாரினுஞ் சிறந்த) அவள் பாதங்கள் பரிசிக்கப் பாக்கியம் படைத்தது ஆச்சரியம்! அவள் பேர் சீதை' என்று சொல்லி, அவளுடைய அழகனைத்தையும் எடுத்துச் சொல்லத் தொடங்கி

ஐய - ஐயனே; அழகுடைய என்ற பொருள் கொண்டு தேருக்கு அடைமொழியாக்கலுமாம். ஆழி - தேர் உருளை. பொன் - அழகு. குலிகம், பிகம் என்பதன் விகாரம். இங்குலிகம் - சாதிலிங்கம். அம்மா, ஓர் அதிசயச்சொல். செய்யுளாதலால், 'அவள் பேர்' 'பேர் அவள்' என மாறி நின்றது. வடிவு - உருவம்; அழகு.

செம்பொன்செய் குலிகச் செப்பு என்பதற்குச் 'செம்பொன்னாற் செய்த கலசங்களும் குங்கிலியத்தாலாகிய சிமிழ்களும்' என்பது முந்திய உரை.* செம்பொன் குலிகம் செய் செப்பு, எனக் கொண்டுகூட்டிச் செம்பொன்னாலும் குலிகத்தாலும் செய்த செப்புக்கள் என்றும் பொருள் கொள்ளலாம். 'ஆழ்ந்து தேர்அவள் திரண்ட கொங்கை' என்று பாடங்கொண்டால், 'ஆழ்ந்து தேர்' என்பதற்கு 'நான் சொல்வதை ஊன்றி ஆராய்ந்தறிவாயாக' என்பது பொருள்.

இக்கவியின் மூன்றும் அடி, வள்ளிநாயகியின் 'அடி தோய்தலிற் பூமகள் போக்கரும்பே றுடையாள்' எனத் தணிகைப் புராணத்தில் வருவதை நினைவுறச் செய்கின்றது.

'அந்தப் பாலைநிலம் இந்த எளிய பூவுலகத்தோர் நடத்தற்கு எளிய இடமாமோ! அந்த வலிய தேவலோகத்தோர் அந்த நிலத்துச் சூடு தாங்க மாட்டாமையால் அல்லவா தரையில் அடிபடியாமற் சஞ்சரிப்பாராயினர்!' என்ற கருத்துள்ள

இந்நி லத்துளோ ரேக லாவதற்
கெளிய தானமோ! அரிய வானுளோர்
அந்நி லத்துவெப் பாற்ற லாமையால்
அல்ல வோநிலத் தடியி டாததே!

---

* வை. மு. கோ.

என்ற கலிங்கத்துப்பரணிப் பாட்டிற் கூறியவாறு, பூமியிலே கால் பரவாதவ ரான தெய்வ மாதர் தலைவியாய், முந்திய 40-ம் பாட்டிற் கூறியவாறு 'தாமரை தவிரப் போந்தா'ளான ஸ்ரீதேவியாகிய சீதாதேவி, தாமரையைத் தவிர்ந்ததே யன்றித் தெய்வத் தன்மையையுந் தவிர்ந்து, தரையிலே தாள் தோய நடக்கும் மானுட மடந்தையா யுள்ளாள் என்பாள், 'பார் அவள் பாதம் தீண்டப் பாக்கியம் படைத்ததம்மா!' என்றாள்.

சூர்ப்பநகை, இராவணனுக்குக் காமமூட்டுதற்குப் பூர்வ பீடிகையாக, இதற்கு முந்திய பாட்டிற், சீதையினது சில அங்கங்களின் அழகைச் சிறப் பித்துரைத்தாள். அதனால், அவள், சீதையைப் பற்றிய விவர மறியவேண்டு மென்று இராவணனுக்குச் சிரத்தை உண்டாக்குவதிற் சித்திபெற்றமையை அவன் 'ஆர் அவள்?' என்றதனால் அறிந்து, சித்திக்குமேற் சித்தி பெறுவா ளாய், அவனுக்குக் காமம் விளைக்கும் அங்கங்களை இந்தப் பாட்டில், வரு ணித்தா ளென்க. இவ்வருணனையால் அவன் காமபரவசனான குறிப்பறிந்து, அப்பரவசம் அதிகமும் உறுதியும் ஆகுதல் கருதிச், சீதையின் அழகைப் பின் வருகின்ற அருமையும் இனிமையுமான ஐயிரு கவிகளிற் பலபடப் புனைந்து பாராட்டுகின்றாள்.

பாட பேதம்: ஆழ்ந்து—தேர்அவள் திரண்ட கொங்கை. (சக)

**42.** காமர முரலும் பாடல் கள்ளெனக் கனிந்த வின்சொல்
தேமலர் நிரந்த கூந்தற் றேவர்க்கு மணங்கா மென்னத்
தாமரை யிருந்த தையல் சேடியாந் தரமு மல்லள்
யாமுரை வழங்கு மென்ப தேழைமைப் பால தன்றே

கொண்டுகூட்டு: 'காமரம் முரலும் பாடலும் கள்ளும் எனக் கனிந்த இன்சொல்லையும், தேம் மலர் நிரந்த கூந்தலையும் (உடைய) தேவ (மாத)ர்க்கும் அணங்கு என்ன, தாமரை இருந்த தையல் (அவளுக்குச்) சேடி யாகவும் தரம் (உடையவள்) அல்லள் (என்றால்), யாம் (அவள் அழகை) உரை வழங்கு(து)ம் என்பது ஏழைமைப் பாலது அன்றே?

பொருள்: 'வண்டுகள் இசைக்கும் பாட்டும் தேனும் போல முதிர்ந்த மாதுரியமான வார்த்தைகளையும், வாசனை பொருந்திய மலர்கள் நிறைந்த கூந்தலையுமுடைய (மனித மாதர்க்குத் தேவ மாதர் அழகிற் சிறத்தல் போல, இலக்குமியை உள்ளிட்ட) தேவ மாதர்க்கும் அழகிற் சிறந்த ஓர் தேவமா தென்னும்படி, இலக்குமி தேவி (அவளுக்கு ஒப்பாகா ளென்பானேன்?) தாதியாகவுந் தகுதி யாகாளாக உள்ளா ளென்றால், நாம் அவளுடைய அழகை விரித் துரைப்போ மென்பது அறியாமையின்பாற் படுவதல்லவா?

காமரம் - வண்டு. முரலும் - ஒலிக்கும். கள் - தேன். கனிந்த - முதிர்ந்த.—ந. அ. தேம் - வாசனை ; தேன். நிரத்தல் - நிறைதல். ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொதுவான 'தேவர்' இங்கே பெண்பாலை உணர்த்தி நின்றது. அணங்கு என்பதற்கு, மனிதரைக் 'காமநெறியால் வருத்திக் கொல்லுந் தெய்வமகள்' என்ற பொருளுண்மையால், 'தேவர்க்கும் அணங்கு' என்றதனால், 'மனிதரை மட்டுமன்றித் தேவரையும் காம நெறியால் வருத்தும் தெய்வமகள் போல்வா' ளென்று ளெனலுமாம். தாமரை இருந்த தையல் - தாமரை மலரில் வாழும் இலக்குமி. சேடி - தோழி ; ஏவல் செய்பவள். 'சேடி ஆம் தரமும் அல்லள்' என்பதில் உள்ள உம்மையைப் பிரித்துச் 'சேடியாகவும் தரம் (உடையவள்) அல்ல' ளென்று கூட்டிப் பொருள் செய்யப்பட்டது. வழங்குதும் (- வழங்குவோம் - சொல்வோம்) என்பது வழங்குமெனத் தொகுத்தல் விகாரமாயிற்று. 'தொகுத்தலும் வரும் செய்யுள் வேண்டுழி'—நன்னூல் கௌ௬.

' "தேவமாதர் யாவர்க்கும் தலைவியாய்ச் சிறக்கிற திருமகள் அவளுக்குத் தாதியாகத் தகுதியுடையவளு மாகாதபோது நான் அவள் அழகை எப்படிச் சொல்லி முடிப்பேன் ?" என்று அக் கட்டழகின் கூறற் கருமையை விளக்குகிறாள் ; "ஆயினும், இயன்ற அளவு சொல்வே" னென்றவாறு. இங்குக் கூறப்படும் சீதை வர்ணனையாகிய பிரபந்தத்துக்கு இது அவையடக்கமாய் அமைந்தது. அங்ஙனமாகவே, "யாம்" எனக் கவிகளுக்குரிய இயற்கைத் தனித்தன்மைப் பன்மையாற் கூறினாள். எவராலுஞ் சொல்லலாகாதென்பதுபட "யாம்" என உளப்பாட்டுத் தன்மைப் பன்மை கூறினளுமாம்'.—வை. மு. கோ.

சீதையின் அழகைச் சிந்திக்கச் சிந்திக்க அதன் சிறப்பு மேலும் மேலும் மிகுதியாகச் சூர்ப்பநகைக்குத் தோன்றிய தென்பது, அவள் முதற்கட் சீதையைக் கண்ணுற்றபோது 'திருஇங்கு வருவாள் கொல்லோ ?' என்று சீதையைத் திருமகளோடு ஒப்புமையுடையாளாகவும், சற்றுமுன் 'தாமரை தவிரப் போந்தாள்' என்று திருமகளேயாகவும், இப்போது 'சேடியாந் தரமுமல்லள்' என்று திருமகளினும் உயர்ந்தாளாகவும் கூறினமையால் விளங்குதல் காண்க. (௪௨)

**43.** மஞ்சோக்கு மளக வோதி மழையோக்கும் வடித்த கூந்தல்
பஞ்சோக்கு மடிகள் செய்ய பவளத்தின் விரல்க ளைய
அஞ்சோற்க ளமுதி னள்ளிக் கொண்டவள் வதன மைதீர்
கஞ்சத்தி னளவிற் றேனுங் கடலினும் பெரிய கண்கள்

கொண்டுகூட்டு : ‘(அவளுடைய) அளகம் ஓதி மஞ்சு ஒக்கும். வடித்த கூந்தல் மழை ஒக்கும். அடிகள் பஞ்சு ஒக்கும். விரல்கள் செய்ய பவளத்தின் ஐய. அம் சொற்களை அமுதின் அள்ளிக் கொண்டவள் வதனம், மைதீர் கஞ்சத்தின் அளவிற்றேனும், கண்கள் கடலினும் பெரிய.

பொருள் : ‘அவளுடைய கட்டிமுடித்த தலைமயிர் (மழை பொழியத் திரண்ட) மேகம் நேரும். அவிழ்த்து வார்ந்து தாழ விட்ட அந்தத் தலைமயிர், அவ்வாறு தொங்கவிட்ட நிலைமையில், (மழை பெய்யக் காலிறங்கிய அந்த) மேகம் போலும். பாதங்கள் பஞ்சு நிகரும். விரல்கள் சிவந்த பவளத்தின் அழகினையுடையன. அழகிய சொற்களை அமுதத்தினின்று வாரிக்கொண்டவள் (சொற்கள் அமுத மொக்கு மென்றபடி) முகம், குற்றமற்ற தாமரை மலரின் அளவினையுடைய(தாய்ச் சிறிய)தாயினும், (அந்த முகத்துக்குள் அமைந்த) கண்கள் (வியாபகத்தில்) கடலைக் காட்டிலும் பெரியவைகள்.

மஞ்சும் மழையும் மேகம். அளகம் - ஐந்துவகையாக முடிக்கப்பட்ட பெண்கள் தலைமயிர் முடிவகைகளுள் ஒன்று. ஓதியும் கூந்தலும் பெண்டிர் தலைமயிர். வடித்தல், வடிதலின் பிறவினை. வடிதல் - வார்தல் - ஒழுகுதல். ‘அளக ஓதி’ யென்றதனால் முடித்த கூந்தலும், ‘வடித்த கூந்த’ லென்றதனால் அவிழ்த்த கூந்தலும் குறிப்பிக்கப்பட்டன.

‘விரல்கள் பவளத்தின் ஐய’ என மாற்றிப் பொருள் கூறப்பட்டது. ‘பவளத்தின் விரல்கள் ஐய’ என இருக்கிறபடியே வைத்துப் பவளம் போல விரல்கள் அழகையுடையன என்றும் பொருள் கொள்ளலாம். ‘ஐய’ என்பதற்கு ‘ஐயனே!’ என்பது முந்திய உரைகள். ஐ - அழகு. ஐய - அழகையுடையன. மை - குற்றம். தீர்தல் - நீங்குதல். அளவிற்று - அளவினையுடையது.

கூந்தல் சாதாரணமாக முடிக்கப்பட்டும், ஏகதேசமாக (ஈரம் புலர்த்தல் முதலிய ஏதுக்களால்) அவிழ்த்துவிடப்பட்டு மிருக்கும். சாதாரண நிலையை முதற்கண் மனத்துட்கொண்டு முடித்த கூந்தல் மஞ்சொக்கு மென்றும், ஏக தேச நிலையைப் பின்பு எண்ணி வடித்த கூந்தல் மழையொக்கு மென்றுங் கூறினர். இதனால் மழை பெய்யத் திரண்ட மேகத்தை மஞ்சென்பதனாலும், மழை பொழிதற்குக் காலிறங்கிய மேகத்தை மழை யென்பதனாலுங் குறிப்பித்தா ரென்னலாம்.

'சேற்றில் உண்டாதலும், சூரியனைக் கண்ட வளவிலே மலர்தலும், அவனைக் காணாத விடத்துக் குவிதலும், பனி மழைகளுக்கு அழிதலும், வரவரப் பரிமளம் ஒழிதலும், அடியில் முள்ளுடைமையும் முதலிய பல குற்றங் குறைகள் தாமரைக்கு உள்ளன வாதலால், அவையனைத்தும் இல்லாத தொரு தாமரையே அவள் முகத்துக்கு ஈடாகு மென்றற்கு, "மைதீர் கஞ்சம்" என்றாள்.' — வை. மு. கோ.

கண்களுக்கு இருப்பிடமான முகம், தாமரை மலரின் அளவினதாய்ச் சிறியதாயினும், அச் சிறு முகத்தில் அடங்கிய கண்கள் எவ்வாறு கடலினும் பெரியவையா மென்பதை முந்திய உரைகாரர் விளக்காது போயினர். கண்கள் இருக்குமிடம் சிறியதாயினும் வியாபிக்குமிடம் மிகவும் பெரிய தென்பதை உய்த்துணர வைப்பாளாய்த், தன் உள்ளத்துள்ள பொருள் புலப்படுமுன் திகைப்பும், புலப்பட்டபின் வியப்பும் விளையக், 'கடலினும் பெரிய' என்றாள் என்க. வண்டுகள் பாடும் (மலர் மாலை யணிந்த) கூந்தல் (உடையவளது) களிப்புடைய கண்கள் (தடைபடாது) சென்று உலாவு தற்கு எட்டுத் திசைகளுக்கும் இடம் போதாது என்னும் பொருள் உள்ள 'வண்டிசைக்கும் கூந்தல் மதர்விழிகள் சென்றுலவ — எண்டிசைக்கும் காணாதிடம்' * என்பது இப்பொருள்கோட்கு ஆதாரமாம். சீதை, 'கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்' எனக் காட்சிப் படலத்தில் வருவது இதனை வலியுறுத்துதல் காண்க. (சுரு)

ஈசனார் கண்ணின் வெந்தா னென்னுமி திழுதைச் சொல்லிவ்
வாசநா றோதி யாளைக் கண்டனன் வல்ல வாற்றால்
பேசலாந் தகைமைத் தல்லாப் பெரும்பிணி பிணிப்ப நீண்ட
ஆசையா லழிந்து தேய்ந்தா னநங்கனவ் வுருவ மம்மா

கொண்டுகூட்டு: 'அநங்கன் ஈசனார் கண்ணின் வெந்தான் என்னும் இது இழுதைச் சொல். (அவன்,) இவ் வாசம் நாறு ஓதியாளைக் கண்டனன், (சொல்ல)வல்ல ஆற்றால் பேசலாம் தகைமைத்து அல்லாப் பெரும்பிணி பிணிப்ப, (அவள்பால்) நீண்ட ஆசையால், அவ் உருவம் தேய்ந்து அழிந்தான்.

பொருள்: '(இப்போது உருவிலான் ஆக உள்ள) மன்மதன் சிவபிரானது நெற்றிக் கண்ணின் நெருப்பினால் (முன்னிருந்த உருவம்) எரிந் தொழிந்தா னென்பது பொய் வார்த்தையே. அவன், இந்த வாசம் வீசும் கூந்தலினாளைக் கண்டு, (வாக்கு வல்லார் சொல்ல)வல்ல விதங்களாற் சொல்லக்கூடிய தன்மையுடைய

* தண்டியலங்காரம்.

தல்லாத பெரியதோர் நோய் தன்னை வருந்தச் செய்யும்படி அவள் மீது கொண்ட மிகுதியான ஆசையால், அந்த உருவம் (படிப்படியாகத்) தேய்ந்து அழிந் தொழிந்தான்.

ஈசனார் என்பதில் ஆர் உயர்வுப்பன்மை விகுதி. என்னும் இது - என்று சொல்லும் இது - என்பது. இழுதை - பொய். என்னுமி திழுதைச் சொல் - என்பதாகிய இச்சொல் பொய்ச்சொல். நாறுதல் - மணத்தல். 'வினைமுற்றே வினையெச்சம் ஆக' லென்றதனால், கண்டனன் என்பது கண்டு என்னும் வினையெச்சப் பொருள்பட நின்றது. ஆறு - விதம். பேசலாம் - பேசக்கூடிய. தகைமை - தன்மை. தகைமைத்து - தன்மையுடையது. பிணி - நோய். பிணிப்ப - வருத்த. 'கொண்டிமகளிரைப் பான்மையிற் பிணித்துப் படிற்றுரை அடக்குதல்' என மணிமேகலையில் வருதல் காண்க. அழிந்து தேய்ந்தான் என்பதை விகுதிபிரித்துக்கூட்டி இடமாற்றித் தேய்ந்தழிந்தா னென்று கொள்க.

பிணியின் வன்மையை உணர்த்தப் 'பேசலாகாப் பிணி' யென்று சுருங்கச் சொல்லி யமையாது 'பேசலாந் தகைமைத் தல்லாப் பெரும் பிணி' யென நீட்டி வளர்த்துச் சூர்ப்பநகை சொல்லியது, அவள் தன்னைப்போல இராவணனும் அப்பிணியின் வன்மையை, அந் நெடுஞ் சொற்றொடர் சொல்லப்பட்டு முடிவுறும் வரையும், அவகாசமாக நெடிது நினைந்து, நெஞ்சமுந்த நன்குணர்தற் பொருட்டாம்.

'"மன்மதன் அநங்கனதற்குக் காரணம், சிவபிரானது நெற்றிக் கண்ணின் நெருப்புக்கு இரையானதன்று; இவளழகில் ஈடுபட்டு மிக்க காமநோயுற்று அதனாலேயே உடம்பு மெலிந்தொழிந்தவாறும்" என்றாள். இங்ஙனம் உண்மையான தன்மையை நீக்கி மற்றொரு தன்மையை யேற்றிக் கூறியது, ஒழிப்பணியாம்; வடநூலார் அபநுதியலங்கார மென்பர். "சிறப்பினும் பொருளினும் குணத்தினும் உண்மை, மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்" என இத னிலக்கணங் காண்க. இதனைத் தற்குறிப்பேற்றத்தில் அடக்கலுமாம்.' — வை. மு. கோ.

பாட பேதம்: என்னும திழுதைச் சொல்லால். (சச)

45. தெவ்வுல கத்துங் காண்டி சிரத்தினிற் பணத்தி னோர்கள்
அவ்வுல கத்துங் காண்டி யலைகட லுலகிற் காண்டி
வெவ்வுலை யுற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள்
இவ்வுல கத்தா ளங்கம் யாவர்க்கு மெழுதோ ணாதாள்

கொண்டுகூட்டு: 'தெவ் உலகத்தும் காண்டி; சிரத்தினில் பணத்தினோர்கள் அவ்வுலகத்தும் காண்டி; அலைகடல் உலகில் காண்டி. வெம் உலை உற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள் இவ் உலகத்தாள். அங்கம் யாவர்க்கும் எழுத ஒண்ணாதாள்.

பொருள்: '(அளவற்ற அழகிய பெண்களுள்ளே இவள் போலும் எழிலுடையா ளெவளேனு மிருக்கின்றாளா வென்று) தேவலோகத்திலே (சென்று தேடிப்) பார்; (அவ்வாறே) நாக லோகத்திலும் பூலோகத்திலும் பார்; (எங்கும் இப்படிப்பட்டவள் கிடையாது). (ஆடவரது நெஞ்சூடுருவப் பாய்தலில்) வேலையும் (அவர்கள் நெஞ்சைப் பிளத்தலில்) வாளையும் வெற்றிகொண்ட கண்ணுடையாள் (ஆன இவள், மேற்கூறிய மூன்றுலகங்களுள்ளே "பார், அவள் பாதம் தீண்டப் பாக்கியம் படைத்த தம்மா!" என்று நான் முன்னம் சொன்னபடி,) இந்தப் பூமியில் இருப்பவள். (என்றாலும், இவ்வுலகத்தினும் வேறெவ்வுலகத்தினும் உள்ள பிற பெண்கள் வடிவம் சித்திரத்தில் எழுத முடிவதுபோல, இவள்) வடிவம் (சித்திர கலைஞர்) எவராலும் சித்திரிக்க முடியாத சிறந்த அழகுடையவள் (என்ற உண்மையை நான் கூறியவாறு நீ மூன் றுலகத்தும் போய்ப் பார்த்தபின்பு தெரிந்துகொள்வாய்).

தெவ் - சத்துரு. தெவ்வுலகம் - (இராவணனுக்குப்) பகைவருலகம் (ஆகிய தேவலோகம்). பணம் - படம். பணத்தினோர் - படத்தையுடையோர் (ஆன நாகர்). நாகர்களைச் 'சிரத்தினிற் பணத்தினோர்கள்' என ஒரு வகைச் சுவைபடச் சொல்லிய நயம் காண்க. நாகர் வாழ்கின்ற தூரத்துள்ள உலகமெனச் சுட்டுதற்கு அவ்வுலக மென்றாள். (அலைகள்) அலை(கின்ற) கடல் (சூழ்ந்த) உலகு - பூமி. வெம் உலை - வெவ்விய (கொல்லன்) உலை. உருக்கு, வேல் வடிவமும் வாள் வடிவமுமாகக் காய்ச்சி அடித்து ஆக்கப்படுதற்காக உலையில் உறுதல்பற்றி உலை உற்ற வேல் வாள்க ளென்றாள். யாவர்க்கு மெழுதொ ணாதாள்: முன் 40-ம் பாட்டின் குறிப்பைப் பார்க்க.

சூர்ப்பநகை, முன் * இராமனை 'யாவர்க்கும் எழுதொணாத தன்மையன்' என்று, இப்போது சீதையை 'யாவர்க்கும் எழுதொணாதாள்' என்றது, அவள் இராம சீதையரை முதற்கட் பார்த்தபோது 'இருதிறத்தார்க்குஞ் செய்த வரம்பில ரிருவர்' என்றதனோடு பொருத்தமா யிருத்தல் காண்க. (சரு)

* இந்நூல் 40-ம் பாட்டு.

46. தோளையே சொல்லு கேனோ சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ வல்லவை வழுத்து கேனோ
மீளவுந் திகைப்ப தல்லாற் றனித்தனி விளம்ப லாற்றேன்
நாளையே காண்டி யன்றே நானுனக் குரைப்ப தென்னோ

**கொண்டுகூட்டு:** *'தோளையே சொல்லுகேனோ! சுடர் முகத்து உலவுகின்ற வாளையே சொல்லுகேனோ! அல்லவை வழுத்துகேனோ! மீளவும் திகைப்ப தல்லால் தனித்தனி விளம்பல் ஆற்றேன். (நீ) நாளையே (அவளைக்) காண்டி அன்றே! உனக்கு நான் உரைப்பது என்னோ?*

பொருள்: *'(நான் அவள் உறுப்புக்களின் அழகை எடுத்துச் சொல்லத் தொடங்கும்போது, தோள்கள் என் மனக்கண் எதிரே தோன்றுகின்றன. அவற்றை வருணிக்கலா மென்றெண்ணும் போது, கண்கள் சிறப்பாகத் தோன்றுகின்றன. அவற்றை வருணிக்க எண்ணும்போது, மற்றை உறுப்புக்கள் ஒன்றன்பின் ஒன்றாகச் சிறந்தனவாகத் தோன்றுகின்றன. இதனால் யான் அவள்) தோளழகைச் சொல்வேனோ! கண்ணழகைச் சொல்வேனோ! இவையல்லாத உறுப்புக்களின் அழகைச் சொல்வேனோ! (எதனைச் சொல்வதென்று முதலில் திகைத்தது போலத் திரும்பவும்) திரும்பவுந் திகைப்ப தல்லாமல் (ஓர் உறுப்பின் பின் ஓர் உறுப்பாகத்) தனித்தனியாகச் சொல்ல வல்லேனல்லேன். நீ நாளைத் தினமே (அவளைப்) பார்த்திடுவா யல்லவா! (அப்போது எல்லா உறுப்புக்களின் அழகையும் நேராகத் தெரிந்துகொள்வாய். அப்படித் தெரிந்துகொள்ளப் போகிற) உனக்கு நான் சொல்ல வேண்டுவது யாது இருக்கின்றது? (ஒன்றும் இல்லை).*

*சுடர் - ஒளி. சுடர்தல் - ஒளிசெய்தல். சுடர் முகம் - ஒளியையுடைய முகம்; ஒளிசெய்கின்ற முகம். முகத்து உலவுகின்ற வாள் - கண். அல்லவை – அல்லாதவை - தோளும் கண்ணு மல்லாத அவயவங்கள். அல்லவை, சந்தியால் வல்லவையென எழுதப்பட்டிருத்தல் பற்றி வல்லவை யென்றே கொண்டு, அதற்குச் '(சொல்ல) வல்லவையான அவயவங்களை' யென்றும் பொருள் கூறுவர்.* அன்றி, வல் - சூதாடு கருவி, அவை பகுதிப்பொருள் விகுதி, வல் உவமையாகுபெயராய்க் கொங்கையைக் குறித்த தென்றும் உரை கூறுவர்.† வழுத்துதல் - சொல்லுதல். ஆற்றேன் - வல்லேனல்லேன். ஆற்றார் - வலியில்லார். —புற. நா.*

---

* வை. மு. கோ. † மு. ரா. க.

*'பிரத்தியக்ஷமாகப் பார்த்தாற் பார்த்ததேயன்றி வருணித்துச் சொல்லி யுணர்த்தற்கு முடியாதது அவளழகு என்றவாறு.' 'தான் அவளழகை இவ்வளவு எடுத்துக் கூறிய மாத்திரத்தால் காமுகனான இராவணன் அவளிடங் காதல்கொண்டு உடனே அவளை நாடிச் சென்றிடுவா னென்ற நிச்சயத்தால் "நாளையே காண்டி யன்றே" என்றாள்.'*—வை. மு. கோ.

*ஒரு பாட்டுக்கு முக்கியமானதாய் மகுடம் போலுள்ள கருத்தைப் பெரும்பான்மையாக இறுதியடியில் அமையப் பாடும் கவித்துவ முறையைக் கையாண் டியற்றிய கவிகளுள்ளே சிறந்த ஒன்றாக உள்ளது இக்கவி. இதனுள் 'நாளையே காண்டி' என்ற பகுதி, சூர்ப்பநகை, சொல் வன்மையால் இராவணன் மனத்தில் எழுப்பிய காமம் உச்சநிலையை அடைய நெருங்கலுற்ற சமயத்தை அறிந்து, அந்நிலையை விரைவி லடைந்துவிடும்படி மிக்க திறமையோடு விளம்பியது; இனிச் சொல்வன வெல்லாம் அந்நிலையில் அவன் மனத்தை உறைப்பிக்கச் சொல்வனவேயா மென்னும்படி யுள்ளது.*

பாட பேதம்: *அல்குலை வழுத்து கேளே.* (சகூ)

**47.** வில்லொக்கு நுதலென் றாலும்
வேலொக்கும் விழியென் றாலும்
பல்லொக்கு முத்தென் றாலும்
பவளத்தை யிதழென் றாலும்
சொல்லொக்கும் பொருளொவ் வாதாற்
சொல்லலா முவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் றாலு
நேருரைத் தாக வற்றே

கொண்டுகூட்டு: *'நுதலை வில் ஒக்கும் என்றாலும், விழியை வேல் ஒக்கும் என்றாலும், பல்லை முத்து ஒக்கும் என்றாலும், இதழைப் பவளம் (ஒக்கும்) என்றாலும், (சொல்லுக்குச்) சொல் ஒக்கும்; பொருள் ஒவ்வாது. (பொருளும் ஒப்பச்) சொல்லலாம் உவமை உண்டோ? நெல்லைப் புல் ஒக்கும் என்றாலும் நேர் உரைத்தது ஆக வற்றே.*

பொருள்: *'(உலகத்திலே உண்மையாக உள்ளவற்றுள்ளே, சொற்களும் உள்ளன; அவை குறிக்கும் பொருள்களும் உள்ளன: அப்படிப்பட்ட சொற்கள் பொருள்களுள்ளே உவமான உவமேயச் சொற்களும் பொருள்களும் அடங்கியவை. ஆக, அவள்) புருவத்தை வில்லொக்கு மென்றாலும், கண்ணை*

வேலொக்கு மென்றாலும், பல்லை முத்தொக்கு மென்றாலும், இதழைப் பவளம் ஒக்கு மென்றாலும், சொற்களுக்குச் சொற்கள் ஒக்கும்; அன்றிப் பொருள்களுக்குப் பொருள்கள் ஒப்பாகமாட்டா. [அதாவது – (அந்த வில், வேல், முத்து, பவளம் என்ற உவமானச்) சொற்கள் (புருவம், கண், பல், இதழ் என்ற உவமேயச் சொற்களை) ஒக்கும்; (அம்மட்டே யல்லாமல், வில் முதலியவை குறித்த உவமானப்) பொருள்கள் (புருவ முதலியவை குறித்த உவமேயப் பொருள்களுக்கு) ஒப்பாக மாட்டா. – என்றபடி.] (சொல்லொத்துப் பொருளொவ்வாத மேற்கூறிய உவமானங்க ளன்றிப் பொருளும் ஒப்பாகச்) சொல்லக்கூடிய உவமானங்க ளுண்டோ? (இல்லை). (மேலே கூறியவாறு புருவம் முதலிய வைகளை வில் முதலியவை யொக்கு மென்பது, நெல்லைப் புல் லொக்கு மென்பது போலாம். புருவ முதலியவைகளை வில் முதலியவை யொக்கு மென்றாலும்) நெல்லைப் புல்லொக்கு மென்றா லும் (தோற்றத்தில் ஒப்புக்கூறியதாமே யன்றி உண்மையில்) ஒப்புக்கூறியதாகமாட்டாது.

நுதல் - புருவம்; நெற்றி. இவ்விரண் டவயவங்களும் விற்போல் வளைவா யிருத்தலால் நுதலென்ற சொல்லுக்கு இரு பொருள்களில் எதுவும் இங்கே பொருந்தும். ஓ, எதிர்மறைப் பொருள் குறித்த வினாவிடைச் சொல். நேர் - உவமை. உரைத்தது, உரைத்து என விகாரப்பட்டு நின்றது. 'தொகுத்தலும் வரும் செய்யுள் வேண்டுழி'—நன்னூல் கஙிஙி. வளர்த் தது என்பது வளர்த்து என 'நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்'* என்பதில் வருதலும், நிறைந்தது நிறைந்து என 'ஊருணி நீர் நிறைந்தற்றே'† என்ப தில் வருதலும் காண்க. வற்று - வல்லது. ஏ, எதிர்மறை. வற்றே - வல்லாது - மாட்டாது. 'வற்றோ' என்ற பாடங் கொண்டால், அதனில் உள்ள ஓவையும் மூன்றும் அடியில் உள்ள ஓவைப் போல எதிர்மறை வினாவிடைச் சொல்லாகக் கொள்க.

'நேர் உரைத்தாகவற்றே' என்பதை 'நேர் உரைத்(த)து ஆக அற்றே' எனக் கொண்டு, அதனில் நிற்கும் 'ஆக' என்பதைச் சிந்தாமணி 2551-ம் பாட்டில் வருகின்ற 'சுநந்தையே காணென்பார்' என உரை வரையப்பெற்ற 'சுநந்தையே ஆக என்பார்' என்பதில் உள்ள 'ஆக' என்பது போலப் பொருளொன்றுங் குறியாத அசைநிலையாகக் கொண்டு, இறுதியடிக்கு நெல்லைப் புல் ஒக்கு மென்றாலும் அதுவும் உவமை கூறியது போல்வதே

* நீதிநெறி விளக்கம். † திருக்குறள்.

யென்றும் பொருள்கொள்ளலாம். (நேர் - உவமை. அற்று - அன்னது - போல்வது.)

'நேர் உரைத்தாகவற்றே' என்பதற்கு 'ஒத்த உரையையுடையதாக வலியுற்றதாகும்' என்பதும் * '(அது) தகுதியான வார்த்தையுடையதாக வல்லதே' என்பதும் † முந்திய உரைகள்.

புருவம் முதலியவைகளை வில் முதலியவை ஒக்குமென்பது நெல்லைப் புல்லொக்கு மென்பது போலப் போலி வருணனையாமன்றி உண்மை வருணனை யாகாதென்பது கருத்து.

'நெல்' நெல்லென்ற தானியத்தைக் குறியாது நெற்பயிரைக் குறித்து நின்றது. நெல், வடிவம் வருணம் பயன் முதலியவைகளில் மிகச் சிறந்து மக்களுக்கன்றி மாடுகள் முதலிய மாக்களுக்கும் பயன்படுவது; புல் வடிவ முதலிய எல்லாக் குணங்களினும் தாழ்ந்து மாக்களுக்கு மட்டும் பயன்படுவது. அவ்வாறாக, நெல்லைப் புல் ஒப்பது போல்வது சீதையின் புருவ முதலியவைகளை வில் முதலியவை ஒப்பதென்பது என்றுணர்க.

கம்பு என்ற தானியம் உலக வழக்கில் கம்பம்புல் லென்றும் புல்லென்றும் சொல்லப்படுகின்றது. நெல்லுத் தானியத்தை உயர்வாகவும் புல்லுத் தானியத்தைத் தாழ்வாகவும் மதிப்பது பெரு வழக்கு. 'நெல்'லை நெற்பயிராகக் கொள்ளாது நெற் றானியமென்று கொண்டு அதனைக் கம்பம்புற் றானிய மொப்பது போல்வது, புருவ முதலியவற்றை வில் முதலியவை ஒப்ப தென்று ரெனலு மாம்.

கூந்தல் (42, 43, 44-ம் கவிகள்) மூன்றிடங்களினும், கண் (43, 45, 46, 47) நான்கிடங்களினும், தோள் (40, 46), இடை (40, பின்வரும் 49), அல்குல் (41, பின்வரும் 51) மூன்றும் இரண்டிரண் டிடங்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறு கூறியது 'கூறியது கூறல்' என்னும் குற்றத்தின்பாற் படாதோ என்னின், இங்கே சீதை வருணனை, முறையான பாதாதிகேச வருணனையாகவாவது கேசாதிபாத வருணனையாகவாவது இல்லாமல், இராவணனுக்கு மோகமூட்டும் நோக்கத்தோடு கூறப்படுவதா யிருத்தலால், எந்த எந்தச் சமயத்தில் எந்த எந்த அவயவத்தைப்பற்றிக் கூறுதல் ஏற்றதோ, அவ்வவ் வமையத்தில் அவ்வவ் வவயவத்தைப்பற்றிக் கூறியதாய் எவ்வகைக் குற்றமும் இல்லாத தென்க.

இதற்கு அடுத்த முந்திய பாட்டிலேதான் 'நான் உனக் குரைப்ப தென்னே' என்று சீதையின் அவயவங்களைப் பற்றி 'நான் சொல்வானேன்'

---

* மு. ரா. க. † வை. மு. கோ.

*என்றவள், இந்தப் பாட்டில் அவைகளைப்பற்றிச் சொல்லுதல் முன்னுக்குப் பின் முரண்பட மொழிதலன்றோ வெனின், அந்த முந்திய பாட்டில் 'நான் உனக் குரைப்ப தென்னே' என்னுமுன் 'நாளையே காண்டி யன்றே' என்ற சூழ்ச்சியான சொற்களால் இராவணன் மோகத்தை உச்ச நிலையுறச் செய்தாள்; செய்தவள் சீதையை அவன் காணுமளவும் பொறுத்திராமல், அதற்கு முன்னமேயே அவள் அங்க லக்கணங்களை அறிய இயற்கையாக அவனுக்கு எழுந்த அவாவைத் திருத்திசெய்வாளாய், உரைக்கவேண்டிய தில்லை யென்ற உறுப்புக்களைப்பற்றி உரைக்கலாயினு ளென்க.*

பாட பேதம்: *வற்றோ.* (சஎ)

இந்திரன் சசியைப் பெற்றா னிருமூன்று வதனத் தோன்றன்
தந்தையு முமையைப் பெற்றான் றாமரைச் செங்க ணானும்
செந்திரு மகளைப் பெற்றான் சீதையைப் பெற்றாய் நீயும்
அந்தரம் பார்க்கி னன்மை யவர்க்கில்லை யுனக்கே யையா

கொண்டுகூட்டு: *'இந்திரன் சசியைப் பெற்றான்; இருமூன்று வதனத்தோன்தன் தந்தை உமையைப் பெற்றான்; தாமரைச் செங்கண்ணான் செந்திருமகளைப் பெற்றான். ஐயா, நீயும் சீதையைப் பெற்றாய். (உங்களுள்) அம் தரம் பார்க்கின், நன்மை அவர்க்கில்லை; உனக்கே (உண்டு).*

பொருள்: *'இந்திரன் இந்திராணியையும், (நான்முகன் நாமகளையும்,) பரமசிவன் பார்வதியையும், திருமால் திருமகளையும் அடையும் பாக்கியம் பெற்றார்கள்: அவர்கள் போல நீயும் சீதையை அடையும் பாக்கியத்தைப் பெற்றாய். (இவ்வாறாக, நீங்களெல்லாரும் அவரவர் அடைந்த பெண்களால் உயர்வுற்றீர்கள்.) உங்களுள் உயர்வு மிகுதி, யாருக்கென்று ஆராய்ந்து பார்த்தால், அந்த உயர்வு மிகுதி, (அழகிற் குறைந்த பெண்களை அடைந்த) அவர்களுக் கில்லை; (அழகிற் சிறந்த பெண்ணை அடைந்த) உனக்கே உண்டு.*

*சசி - இந்திராணி. இருமூன்று வதனத்தோன்தன் தந்தை - ஆறு முகம் உடையோன் (ஆன குமாரக் கடவுளுக்குப்) பிதா (ஆகிய சிவபிரான்). தாமரை செம் கண்ணன் - (செந்)தாமரை (மலர்போலும்) சிவந்த கண்ணுடையோன் (ஆன திருமால்). செம் திருமகள் - சிவந்த (நிறம் படைத்த) இலக்குமி. அம் தரம் - அழகிய தரம். தரம் - உயர்வு. உயர்வு தாழ்வு என்னும் பொருளுடைய* **தர தமம்** *என்ற வடமொழிச் சொற்றொடரில்*

தரம் உயர்வு குறித்தல் காண்க. அந்தரம் என்பது வேறுபொருள்களில், மந்தரை சூழ்ச்சிப் படலம் சு௦-ம் கவியில், 'அந்தரம் தீர்ந்துலகளிக்கும்' என்பதிலும், கைகேயி சூழ்வினைப் படலம் ச௦-ம் கவியில் 'எனக்கென் மனை வாழும்—பெண்ணால் வந்ததந்தரம்' என்பதிலும் வந்திருத்தல் கண்டுகொள்க. நன்மை - மிகுதி (நல்ல மழை, நல்ல வெயி லென்ற உலகவழக்கிற்போல). —த. அ. 'நன்மை உலகவழக்கில் மிகுதி குறித்தல்போல, அதன் பரியாய பதமாகிய' 'நன்று' பெரிது என்ற பொருள்படச் செய்யுளில் வழங்குதல் 'மையவாரி நடந்தது நன்றரோ' என வருதலால் அறிக — சிந்தா. 37. உரையில் நன்று என்பது பெரிது எனப் பொருள்செய்யப்பட்டிருத்தல் காண்க.

உபலக்கணத்தால் 'நான்முகன் நாமகளையும்' என்பது உரையில் சேர்த்துரைக்கப்பட்டது. அடுத்த பாட்டில் நான்முகன் சிவ விட்டுணுக்களோடு சேர்த்துக் கூறப்பட்டிருத்தல் காண்க.

சூர்ப்பநகை, இதன் முன், 'நாளையேகாண்டி' என்று இராவணனுக்குச் சீதையைக் காணும் ஆசையை எழுப்பியதுபோல, இப்போது, 'சீதையைப் பெற்றாய்' என்று அவளை அடையும் ஆசையை மூட்டிய சூழ்ச்சி கவனித்தற்பாலது.

' "நீ அவளைப் பெறுதல் நிச்சய" மென்பாள், "பெற்றாய்" என இறந்த காலத்தாற் கூறினாள்'. 'சூர்ப்பநகையின் வார்த்தை—நன்மை அவர்களுக்கு, இல்லை உனக்கு என்று பொருள்கொள்ள இடந்தந்து, இவனுக்குச் சீதையைப் பெற முயலுதலால் நேரும் தீஙகுக்குச் சூசகமாகும் அமங்கல மொழியாக அவள் வாயில் வந்ததென்று கொள்ளுதல் சம்பிரதாயம்'.—வை. மு. கோ.

(சஅ)

பாகத்தி லொருவன் வைத்தான் பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தி லொருவன் வைத்தா னந்தண னாவில் வைத்தான்
மேகத்தின் மின்னை வென்ற நுண்ணிடை யிவளை நீயும்
மாகத்தோள் வீர பெற்றா லெங்ஙனம் வைத்து வாழ்தி

கொண்டுகூட்டு: 'ஒருவன் பாகத்தில் வைத்தான்; (வேறு) ஒருவன் பங்கயத்து இருந்த பொன்னை ஆகத்தில் வைத்தான்; அந்தணன் நாவில் வைத்தான்; மாகத்தோள் வீர! நீயும், மேகத்தின் மின்னை வென்ற நுண் இடை இவளைப் பெற்றால், எங்ஙனம் வைத்து வாழ்தி?

பொருள்: '(மேற்கூறியவாறு சிறந்த அழகுடைய பெண்களைத் தமக்கு உரிமையாக அடைந்தவர்களுள்ளே) ஒருவன் (ஆன

சிவன் தான் அடைந்த உமையவளைத் தன்னுடம்பின் இடப்) பாகத்தில் வைத்துக்கொண்டான்; வேறு ஒருவன் (ஆன விட்டுணு தான் அடைந்த) இலக்குமியை மார்பகத்து வைத்துக்கொண்டான்; மற்றொருவனான பிரமன் (தான் அடைந்த சரசுவதியை) நாவி னிடத்தே வைத்துக்கொண்டான்: (அவர்கள் தத்தமக்குரிய மடந்தையரை அடைந்தமைபோல) நீயும் சீதையை (அடைவாய்;) அடைந்தால், (அவர்கள் தாங்கள் அடைந்த தையலரைத் தங்கள் சரீரத்தில் ஒவ்வோர் இடத்தில் வைத்துக்கொண்டது போல, நீ அடையும்) இவளை உன் உடம்பில் எவ்விடத்தில் வைத்துக் கொண்டு வாழப்போகிறாய்? (அவள் தலைமேல் வைத்துக்கொள்ளத் தக்கவளென்பது உட்கோள்.)

பாகம் - பக்கம்; பாதி. பாகத்தில் என்பதற்கு (உடம்பில் ஒரு அல்லது இடப்)பக்கத்தி லென்றேனும் (உடம்பில் ஒரு அல்லது இடப்) பாதியி லென் றேனும் பொருள் கொள்ளலாம். பங்கயம் - தாமரை. பொன் - இலக்குமி. ஆகம் - மார்பு. அந்தணன் - பிராமணன் - பிரமன். நுண் இடை இவளை - நுண்ணிய இடையையுடைய சீதையை. மாகம் - ஆகாயம். மாகத்தோள் - ஆகாயத்(தை அளாவும்படி பருத்துயர்ந்த) தோள்(களையுடைய). 'இப் படலத்தின் மூன்றாங் கவியில் "பொற்றோள் விண்டலங்க ளூறவீங்கி" என்றதை ஒப்பிடுக'. —வை. மு. கோ. எங்ஙனம் - எவ்விடம்; எவ்விதம். வாழ்தி - வாழ்வாய். எங்ஙனம் வைத்து வாழ்தி - எவ்விடத்து வைத்து வாழ்வாய்; எவ்விதம் வைத்து வாழ்வாய் (வாழமாட்டாய் - இறந்துவிடுவாய் என்பது தொனிப் பொருள்).

'"எங்ஙனம் வைத்து வாழ்தி" என்பது "நீ எப்படி வைத்துக் கொண்டு வாழ்வாய்? (வாழமாட்டாய்)" என்று அநிஷ்டமாகப் பொருள் படும்படி அமைந்துள்ளதை அறிக.' —வை. மு. கோ.

'பாகத்தில் ஒருவன் வைத்தான்' என்பதில் 'பாகத்தில்' என்பதன் முன், 'சிவன் தன் உடம்பின் ஒரு' என்ற நீண்ட சொற்றொடரோடு 'உமையை' என்ற இன்றியமையாத செயப்படுபொருளையும், 'நாவில் வைத்தான்' என்பதில் 'நாவில்' என்பதன்பின் 'சரசுவதியை' என்ற அவசியமான செயப்படுபொருளையும் கூறாமல், அவைகளை எளிதாகவும் இனிதாகவும் புலப்படச் செய்திருக்கும் கவிசாதுரியம் கண்டு களிக்கத் தக்கது.

பாட பேதம்: முன்னே வென்ற நுண்ணிடையை. (சகூ)

பிள்ளைபோற் பேச்சி னாளைப் பெற்றபின் பிழைக்க லாற்றாய்
கொள்ளைபோ கின்ற செல்வ மவளுக்கே கொடுத்தி யைய
வள்ளலே யுனக்கு நல்லேன் மற்றுநின் மனையில் வாழும்
கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாங் கேடுசூழ் கின்றே னன்றே

கொண்டுகூட்டு : 'ஐய! வள்ளலே! பிள்ளைபோல் பேச்சினாளைப் பெற்ற பின்(பு) பிழைக்கல் ஆற்றாய். கொள்ளைபோகின்ற செல்வம் அவளுக்கே கொடுத்தி. (அவளை நீ அடையச் செய்வதால், நான்) உனக்கு நல்லேன் : மற்று, நின் மனையில் வாழும் கிள்ளைபோல் மொழியார் எல்லார்க்கும் கேடு சூழ்கின்றேன்.

பொருள் : 'குழந்தைகளினது மழலைச்சொற்கள் போல இனிமையான சொற்களையுடைய சீதையை அடைந்த பின்பு (அவள் சொற்படி செய்யத்) தவறமாட்டாய். (இப்போது மற்றை மாதருக்கு நீ கொடுத்து அவர்களாற் கொள்ளப்பட்டுக்) கொள்ளை போகிற செல்வத்தை அவளுக்கே கொடுப்பாய். (அப்படி நீ செய்யும்படி அழகுமிக்க அவளை நீ அடையச்செய்கின்றேனாதலால், நான்) உனக்கு நல்லவள் ஆகின்றேன்: (ஆனால், வண்டோதரி முதலிய) உன் மனைவிமார்(களை நீ வெறுக்கும்படி செய்து அவர்)கள் எல்லாருக்கும் (வேண்டுமென்று கெடுதிசெய்ய விரும்பவில்லையாயினும், விரும்புவார் போலக் காரியத்தில்) கேடு செய்யக் கருதுகின்றேன். (ஆகவே அவர்களுக்குக் கெட்டவளாகின்றேன்)'.

பிள்ளை - குழந்தை. பிள்ளை, பிள்ளையின்பேச்சுக்கு ஆகுபெயர். பேச்சு - சொல். பிழைக்கல் - பிழைத்தல் - தவறுதல். ஆற்றாய் - செய்யாய்; மாட்டாய். (ஆற்றார் - வலியில்லார்.—புற. நா.) பிழைக்கலாற்றாய் - தவறுதல் செய்யாய் - தவறாய்; தவற வலியில்லாய் - தவறமாட்டுவாயல்லை - தவறமாட்டாய். கொடுத்தி - கொடுப்பாய். உன்மனையில் வாழும் கிள்ளைபோல் மொழியார் - உன் மனைவிமார். கிள்ளை - கிளி : கிளிமொழிக்கு ஆகுபெயர். அன்று, ஏ, ஈற்றசைகள். அன்றே என்பதற்கு அல்லவா வென்று பொருள்கூறலுமாம்.

பிழைக்கலாற்றாய் - பிழைத்தல் செய்யாய் - பிழையாய் - இறந்துவிடுவாய் என்பது தொனி அர்த்தம். இக் கவியிலும் இதற்கு முந்திய இரண்டு கவிகளிலும் சூர்ப்பநகை அபுத்திபூர்வமாக அமங்கலமான தொனிஅர்த்தம் தோன்றக் கூறிய சொற்றொடர்கள் உள்ளன. இத்தகைய சொற்றொடர்களுள், ஒரு தொடர் ஒரு கவியில் மட்டும் வந்தாலும், சில தொடர்கள் இடையிட்டுச் சில கவிகளில் வந்தாலும், அவைகள் கவி கருதாது தற்செயலா

*யமைந்தவை' யென்று கருதலாம். அவைகள் மூன்று கவிகளில் தொடுத்து வந்திருத்தலால், அவைகள் கவி வேண்டுமென்று கருதி அமைத்தவைகளோ வென்றெண்ணும்படி யிருத்தல் கருதுதற் குரியது.*

பாட பேதம் : *பிழைத்த லாற்றாய்.* (ரு௦)

**51.** தேர்தந்த வல்குற் சீதை தேவர்த மூலகி லிம்பர்
வார்தந்த கோங்கை மாதர் வயிறுதந் தாளு மல்லள்
தார்தந்த கமலத் தாளைத் தருக்கினர் கடையச் சங்க
நீர்தந்த ததனை வெல்வா னிலந்தந்து நிரம்பிற் றன்றே

கொண்டுகூட்டு : *'தேர் தந்த அல்குல் சீதை, தேவர் ... பரில், வார்தந்த கொங்கை மாதர் (எவர்) வயிறும் தந்தாள் அல்லள். (தேவாசுரர்) தருக்கினர் கடையச் சங்க நீர், தார் தந்த கமலத்தாளைத் (தன்பால்) தந்தது. அதனை வெல்வான் நிலம் (சீதையைத்) தந்து நிரம்பிற்று.'*

பொருள் : *'சீதை, தேவலோகத்து மாதர் பூலோகத்து மாதர் (நாகலோகத்து மாதர் ஆகிய இவர்கள் எவர்கள்) வயிறும் பெற்றுத் தரப்பட்டவளல்லள். (பின்னை எவ்வாறு தரப்பட்டா ளென்னில், தேவாசுரர் "அமுதம் அருந்திக் களிப்போ" மென்னும்) களிப்புடையோராய்க் கடலைக் கடைய, அந்தக் கடல் நீர், இலக்குமியைத் (தன்பால் தோன்றச் செய்து) தந்தது. (தரும் வரை, "பாரும் நீரும்" என்றும் "நீரும் நிலமும்" என்றும் சேர்த்துச் செப்பப்படுதற் கியையப், பூமியும் கடலும் ஒன்றற் கொன் றேற்றத் தாழ்வில்லா திருந்தன. பின்பு இலக்குமியை ஈந்த காரணத்தால் நீர் நிலத்தை வெற்றி கொண்டதா யிருந்தது. அப்படி வெற்றி பெற்றிருந்த நீரை) வெல்லும்படி நிலமானது (திருமகளினும் சிறந்த அழகுடைய சீதையைத்) தந்து நிறைவுற்றது.*

*ஈற்றடியில் வந்த 'தந்த' என்பது அதற்கு இயல்பாகவுள்ள 'கொடுத்த' என்ற பொருளையும், ஏனை மூன்றடிகளிலும் வந்த 'தந்த' மூன்றும், எதுகையில் நிற்றல்பற்றி, முறையே 'போன்ற', 'அணிந்த', 'பூத்த' என்ற பொருள்களையும் தருதல் காண்க. இம்பர் - இவ்வுலகம் - பூமி. வார் - கச்சு. பாட்டிற் கூறப்பட்ட தேவமாதர் மானுட மாதரோடு, கூறப்படாத நாகமாதர் உபலக்கணத்தால் உரையிற் சேர்த்துக் கூறப்பட்டிருத்தல் அறிக. 'மாதர் வயிறு தந்தாளு மல்லள்' என்பதன் பொருள் 'மாதர்(கள் எவர்கள்)*

வயிறும் தந்தாளல்லள்' என்பதாதலால், அதற்கியைய 'வயிறு தந்தாளு மல்லள்' என்பதில் உள்ள உம்மையைப் பிரித்துக்கூட்டி 'வயிறும் தந்தா ளல்லள்' எனக் கொள்க. 'தரப்பட்டாள்' என்ற செயப்பாட்டுவினை படுவிகுதி தொக்குத் 'தந்தாள்' என வந்தது; எழுதப்பட்ட ஓலை எழுதிய ஓலை யென வரல்போல. தார் - பூ. 'தார்தந்த' என்பது 'கமலத்தாள்' என்பதிலுள்ள கமலத்துக்கு அடை. பூவாத தாமரை இலக்குமி இருக்கைக் குரியதன்று. அதனை நீக்குதற்குத் 'தார் (- பூ) தந்த (- பூத்த) கமலம்' என்றுரை ளென்க. தார்தந்த கமலத்தாள் - பூப் பூத்த தாமரையை (அப் பூவை ஆதனமாகக் கொண்டு) உடையவள் - இலக்குமி. 'தார்' என்ப தற்கு மாலையெனப் பொருள் கொண்டால், (திருமாலுக்கு மண) மாலை அளித்த எனப் பொருள்பட்டுத், 'தார்' 'கமலத்தாளுக்கு' அடையாம். தருக்கு - களிப்பு. தருக்குதலுக்கு மிகுதல் (—சிந்தா., புற. நா., ஐங்குறு.) என்றும், மேம்படுதல் (— பரிபா.) என்றும் பொருளுண்டு. அப்பொருள் கள் கொண்டால், 'தருக்கினர்' என்பதற்கு (எண் அல்லது தொகை) மிகுந்தோர் (ஆன தேவாசுரர்) என்றும், (மக்களாதி உயர்திணை உயிர்களுள்) மேம்பட்டோர் (ஆன தேவாசுரர்) என்றும், பொருள் செய்க. சஙகநீர் - சங்குகளையுடைய சமுத்திரம். முந்நீர் என அடைபெறுமலே நீர் சமுத்தி ரத்தின் பெயராம்.—உரி. நி. வெல்வான் - வெல்லும் பொருட்டு. வான், எதிர்காலங் காட்டும் வினையெச்ச விகுதி. அன்றே, ஈற்றசை.

'கமலத்தாளை நீர் தந்தது. அதனைப்போலச் சீதையை நிலம் தந்தது' என்னுமல், 'அதனை **வெல்வான்** சீதையை நிலம் தந்தது' என்றதனால், இலக்குமியினும் சிறந்த அழகுடையாள் சீதை யென்பது சூசிப்பிக்கப்பட் டது.

சீதை இலக்குமியினும் சிறந்த அழகுடையா ளென்பது குறிக்கக், 'கமலத்தாளை நீர் தந்தது; அதனை வெல்வான் சீதையை நிலம் தந்தது' என்று கூறியவள், அம்மட்டோடு நில்லாமல், 'நிலம் தந்து நிரம்பிற்று' என **நிரம்பிற்று** என்பதை அதிகமாக ஏன் கூறினு ளென்றுல், நீர் ஒரு மகளைத் தந்ததுபோல, நிலம் ஒரு மகளைத் தராதிருந்த குறை இப்போது சீதையைத் தந்து நிரம்பிற்று என்பதன்று: அது சிறப்புடைய காரணமாகாது, திரு மகளினும் சிறந்த ஒரு மகளைத் தந்து பெருவெற்றி பெற்ற நிலம் கேவலம் குறை நிரம்பியதினும் சிறந்த பயன் அடைந்ததாதலால். 'நிரம்பிற்று' என்றதற்கு வேறு காரணம் யாது என்றுல், சிறந்த அழகு நிறைந்த சீதை, சிறந்த கலைகள் நிறைந்த பௌர்ணிமிச் சந்திரன் போல்வாள்; ஏனைய எழி லுடை மாத ரெல்லாரும், பௌர்ணிமித் திதி யல்லாத பல திதிக் கலாமதி கள் போல்வார்; குறைமதிகளான மற்றெல்லாச் சந்திரர்க்கும் மேம்பட்ட நிறைமதியான பூரணைத் திங்களுக்கு மேற்பட்ட திங்கள் உளதாதல்

இயலாதது: அதுபோல, இலக்குமியை யுள்ளிட்ட, அற்பமாகவேனும் அதிகமாகவேனும் அழகு குறைந்த மாத ரனைவர்க்கும் மேம்பட்டு நிறைந்த அழகுடைய சீதையினும் சிறந்த அழகுடைய பெண் உள ளாதலும் இயலாதது. சீதை, 'இருதிறத்தார்க்கும் செய்த வரம்பிவர் இருவர்' என்றதற் கேற்ப, அழகுக்கு இறுதி எல்லையான சம்பூரண சௌந்தரி; இலக்குமி, ஏனைய மாதர் யாவரினும் மிக்க அழகுடையாளே யன்றி முற்றழ குடையா ளல்லள், முற்றழ குடையாளா யிருந்தால் மற்றொரு முற்றழ குடையாளால் நிகரப் பெற்றிருப்பாளே யன்றி வெல்லப்பட்டிரா ளாதலால். நீரும் நில மும் என்ற இரு பிரிவினவாகக் 'கமலத் தண்ணல் - ஆக்கிய உலகமெல்லாம் அன்றுதொட் டின்றுகாறும் - பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்திரு படிவம் ஆகி'ய* (நீர் தந்த) திருமகள் (நிலம் தந்த) சீதை யென்பா ரிருவருள்ளே சற்றுக் குறைய முற்றழகுடைய திருமகளைத் தந்த நீர், பூரண பாக்கியத் திற் சிறிது குறைந்த பாக்கியமே யுடையதாய்ப், பாக்கியம் நிரம்பாதது; குறைபா டறவே யில்லாத முழுத்த வனப்புடைய சீதையைத் தந்த நிலம், சற்றுங் குறைவற்ற சம்பூரண பாக்கியமுடையதாய்ப், பாக்கியம் நிரம்பி யது என்பாள், 'நிலம் நிரம்பிற்று' என்று ளென்பது. இப் படலத்தில் 'கோபமு மறனும்' என்ற அஉ-ம் பாட்டில் 'நன்மை எல்லாம்' என்பது, 'எல்லாம்' எனப்பட்டதுபோலப், 'பாக்கியம் நிரம்பிற்று' என்பது, 'நிரம் பிற்று' எனச் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கின்றது.

எனக் கூறியதன் காரணம, 'நீர் அபூரண அழகுடைய இலக்குமியைத் தந்து பெற்ற வெற்றி அபூரணமானது, நிலம் பூரண அழகுடைய சீதையைத் தந்து பெற்ற வெற்றி பூரணமான' தென்பாள், 'நிரம்பிற்று' என்று ளென்பதுமாம்: இனிமேல், 'நீர் ஒரு பூரண அழகுடையாளைத் தரினும், அதனால் அது நிலத்துக்குச் சமான மாமேயன்றி மேலானதாகி வெற்றிபெற முடியாத குறைவுடையதாக, நிலம் பூரண அழகுடையாளை முதற்கட் டந்து, முன், நீர்பெற்றுத் தோற்றுவிட்ட வெற்றி போலாத தோலாத வெற்றிபெற்று, நிறைவுடையதாகிய' தென்பாள் 'நிரம்பிற்று' என்று ளென்பதுமாம்.

இந்த அருமந்த கவி, முதற்கட் படித்த மாத்திரத்தில் அவசமாம்படி அதிசயமான களிப்பளிப்பதாய், மேற்கொண்டு படித்து ஊன்றி நோக்க நோக்க, மேன்மேலும் விருப்பு விளைக்கும் சுவை மலிந்த ஆழ்ந்த கருத்துக்கள் தொடுத்துப் புலப்படுவதாய், பேராச்சரியமும் பேரானந்தமும் ஒருங்கு பயந்து, அருமையிலு மருமையாய், இனிமையினு மினிமையாய், நனி சிறந்த கவிகளுள்ளே சிறந்ததோர் கவியாய்த் திகழ்வ தென்பது திண்ணம். இது, சீதை அழகை விளங்கச்செய்யும் பன்னிரு சூரியர் போன்ற பன்னிரு கவி களின் முடிவில் உள்ளதாய், அவ் அழகு வருணனையை இனிது முடிப்ப

* நட்புக்கோட் படலம் சஅ-ம் பாட்டு.

தாய், அக் கவிமணிகளுள் முடிமணியாய் விளங்குவது உள்ங்கொண்டு கருதுதற் குரியது.

சீதையின் அழகைப்பற்றிய சூர்ப்பநகையின் வருணனையை விட்டு அப்பாற் செல்லுமுன், அவ்வழகைக் கம்பர் சூர்ப்பநகை வாயிலாக வருணித் திருப்பதற்கும், அவர் கவிக்கூற்ருக வருணித்திருப்பதற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்வது தகுதியாகத் தோன்றுகின்றது.

இருவரும் இலக்குமியே சீதையாக வந்ததாகக் கொண்டார்களென்பது, கம்பர் கவிக்கூற்ருகச் சீதையை, ' எப்பெண் பாலும் கொண்டுவ மிப்போர் உவமிக்கும்—அப்பெண் தானே ஆயினபோது' என்றும், 'மலர்மேல் நின்றிம் மங்கையிவ் வையத் திடைவைக' என்றும், 'போதினை வெறுத்தரசர் பொன் மனை புகுந்தாள்' என்றும் கூறியதனுலும், அவர் சூர்ப்பநகை கூற்ருக, 'அர விந்த மலருு ணீங்கி அடியிணை படியிற்ருேயத்—திரு இங்கு வருவாள் கொல்லோ' என்றும், 'தாமரை தவிரப் போந்தாள்' என்றும் கூறியதனுலும் விளங்கும்.

சூர்ப்பநகை கூற்றில், இலக்குமி வேறு, சீதை வேறு, அவளினும் இவள் சிறந்த அழகி யென்று கொள்ளுதற் கிடனுகச், சீதையை நோக்கத் 'தாமரை இருந்த தையல் சேடியாம் தரமும் அல்லள்' என வருகிறதே யெனின், அது வும் சீதை 'திருவின் முகத்துத் திரு அன்னுள்' என்ற கவிக்கூற்றும், உப சாரக் கூற்றுக்களன்றி, உண்மைக் கூற்றன்ரு மென்க.

பல இடங்களிற் கவிக்கூற்றும் சூர்ப்பநகை கூற்றும் சீதையை இலக்குமி யென்பதில் ஒத்திருப்பினும், சூர்ப்பநகை கூற்ருன 'தோர்தந்த' என்ற மேற் கூறிய பாட்டு வரும் ஓரிடத்தில், எதுக்காட்டி விவகரித்துச், சீதை இலக்குமி யினும் சிறந்த அழகுடையா ளென்பது புலப்பட உயர்த்துக் கூறப்பட்டிருப் பது, உபசாரமாகக் கொள்ளுதற் கிடங்கொடாமல், உண்மையாகக் கொள்ளக் கடவதா யுள்ளது. இஃதொன்றே கவிக்கூற்றுக்கும் சூர்ப்பநகை கூற்றுக்கும் வேற்றுமை குறிப்பது.

கதாசிரியர் கூற்றுக்கும் அவர் கதாபாத்திரங்களின் கூற்ருகக் கூறும் கூற்றுக்கும் ஒற்றுமை யிருக்கவேண்டிய அவசியமில்லை. அதனிலும், சூர்ப்பநகை போன்ற சற்பாத்திர மல்லாத பாத்திரங்களின் கூற்று, கவிக்கூற் ருேடு ஒத்திராமை சகசமேயாம். ஆதலால் மேற்கூறிய வேற்றுமை தோற் றத்தி லன்றி உண்மையினும் வேற்றுமையா யிருப்பினும், அதற்குச் சமாதா னம் கூறவேண்டிய் ஆவசியகமில்லை.

*அவ் வேற்றுமை, தோற்றம் மாத்திரத்தில் வேற்றுமையோ, உண்மையினும் வேற்றுமையோ வென்னின், உண்மையில் வேற்றுமை யன்றென்பது, சூர்ப்பநகை, தான், சீதையைத் 'தாமரை தவிரப் போந்தாள்' என்றதற்கியைய, அவளை மகாலக்குமியேயாகவும், பாற்கடலில் அமுதம் தோன்றிய காலத்திலே தோன்றிய இலக்குமியை மகாலக்குமியின் ஓர் அமிசமேயாகவுங் கருதிக் கூறினளாகக் கொண்டால் விளக்கமாம்.*

*சீதாலக்குமியும் திருப்பாற்கட லிலக்குமியும் மகாலக்குமியின் அவதாரங்களேயாக, அவருள் ஒருத்தி மேல், ஒருத்தி கீழ் என்பது எவ்வாறு பொருந்து மெனின், பரசுராமனும் தசரதராமனும் மகாவிட்டுணுவின் அவதாரங்களா யிருந்தும், முன்னவனைப் பின்னவன் வென்று மேம்பட்டவாறு பொருந்து மென்க.* (௫க)

## சூர்ப்பநகை, சீதையை இராவணனும், இராமனைத் தானும் அடையவேண்டும் எனல்

[ *சூர்ப்பநகை, சீதை 'கண்ணெதிர்ப் பட்டாள்போலும்' தன் வருணனையால், இராவணன் சீதைமீது கழிபெருங் காமமும், அவளைத் தான் அவனுக்கு அறிவித்த உபகாரத்துக்குப் பிரதி உபகாரமாக (அவன் பின்பு 'தளை அவிழ் குழல்இவட் கண்டு தந்த என்—இளையவட் களிப்பன் என் அரசு' என்றவாறு) தான் எச் செயலைச் செய்யும்படி வேண்டினும் அதனைத் தடையின்றிச் செய்யுமளவு தன்பால் நன்றியறிவுணர்ச்சியும், உடையனானென் பதை அவன் முகக்குறியா லுணர்ந்து, தான் இராமனை அடைதற்கு இதுவே உபாயமென்று எண்ணி, இராவணனை நோக்கி, 'உன் வீரத்தை உலகோர் காணும்படி அதிவீரனான இராமனை ஊறுபடுத்தாமல் வென்று, அவனுக் குரிமையான சீதையை வெற்றிக் குறியாக உனக் குரிமையாகக் கொண்டு, அவளோடு கூடியாடிக் குலாவுவாயாக; அவளை நீ அடையும்படி நான் செய்ததற்குப் பரிசாக, இராமனை நான் கலந்து களிக்கும்படி எனக்குத் தருவாயாக' என்று கூறிப் பின்னும் கூறுகின்றாள்.* ]

## சூர்ப்பநகை தான் அங்க பங்கமானதை அறிவித்தல்

[ *'அவரவர்க் குரியவற்றை அவரவர் அடையச்செய்வது விதியே. ஆயினும் அது அவைகளை அவ்வவர் அடைதற் குரிய*

மனநூல்வாணர் * நெடுங்கால ஆராய்ச்சியும் சோதனையும் செய்து அரிது கண்டுபிடித்து நிலைநாட்டியுள்ள அதிமுக்கியமான உண்மையைக் கம்பர் மானதப் பிரத்தியக்ஷமாகக் கண்டு, இக் கவியிலே, எளிது விளங்க இனிது புகன்றிருப்பது, இறும்பூதினு மிறும்பூதென்பது கேள்விப்பட்டது. மனஇயல் விஷயத்தில் கம்பர் எத்துணை ஆழ்ந்த அபூர்வ ஞானமுடையவ ரென்பது இந்தக் கவியினால் விளங்குதல்போலக், கோலங்காண் படலம் ௧௧-ம் கவியில் 'மஞ்சர்க்கும்† மாத ரார்க்கும் மனமென்ப தொன்றே யன்றோ' என்பதனாலும், இந்நூல் 56-ம் கவியில் 'இன்பமும் துன்பந் தானும் உள்ளத்தோ டியைந்த வன்றே' என்பதனாலும் விளங்குதல் காண்க. அவர் மனவியல்பை நுனித் தறிந்திருந்தமையை விளக்கும் கவிகளை வேறு பல இடங்களினும் பார்க்கலாம்.

பாடபேதம் : நின்றார் : முன்னம். (௫௨)

**இராவணன் மனத்தில் காமம் வேகமாய்ப் பெருகி வளர்தல்**

சிற்றிடைச் சீதை யென்னு நாமமுஞ் சிந்தை தானும்
உற்றிரண் டொன்றாய் நின்றா லொன்றனை யொழித் தொன்றை யுன்ன
மற்றொரு மனமு முண்டோ மறக்கலாம் வழிமற் றியாதோ
கற்றனர் ஞான மின்றேற் காமத்தைக் கடக்க லாமோ

கொண்டுகூட்டு : சிற்றிடைச் சீதை என்னும் நாமமும், (இராவணன்) சிந்தையும், உற்று, இரண்டு ஒன்றாய் நின்றால், ஒன்றை ஒழித்து ஒன்றை உன்ன(லாகா. அதற்கு) மற்றொரு மனம் (வேண்டும். அஃது) உண்டோ? (சீதையை) மறக்கலாம் வழி மற்று யாதோ? கற்றனர்க்கு ஞானம் இன்றேல் காமத்தைக் கடக்கல் ஆமோ?

பொருள் : சீதை யென்ற நாம(ங் குறிக்கும் பொருளின் உருவ)மும், இராவணனது மனமும் பொருந்தி, இரண்டும் ஒன்றாய் விட்டால், (அவ் விருபொருள்களுள் மனமாகிய ஒரு பொருள் தான் அவசமாய் இரண்டறக் கலந்துவிட்ட சீதை உருவாகிய) ஒரு பொருளைத் தன்னினின்றும் நீக்கி மறந்து விட்டு (அவ் விரு பொருள்களல்லாத பொருள்களுள்ளே கொல்லுண்ட கரன், அரியுண்ட தங்கை மூக்கு முதலியவற்றுள் யாதாயினும்) ஒன்றைப் பற்றி நினைக்க(முடியாது. அப்படி நினைக்க) மற்றொரு மனம் வேண்டும். அஃது உண்டோ? (இல்லை. அஃதில்லாமற் சீதையை)

---

* Psychologists. † மஞ்சர் - மைந்தர்.

மறக்கக்கூடிய உபாயம் வேறு யாதேனும் இருக்கிறதோ? (ஒன்றும் இல்லை. இல்லாத இரண்டாம் மனம் துணையாக, இராவணன் சீதையை மறத்தல் கிடக்க, கற்ற அவன் கல்வி துணையாக ஏன் காமத்தைக் கடந்தானில்லை யென்றால்,) கற்றவர்களுக்கு மெய்யுணர்வில்லையானால் காமத்தை வெல்ல முடியுமோ? (முடியாது: இராவணன் கற்றவனா யிருந்தும் மெய்யுணர்வில்லாதாதலால், காமத்தைக் கடக்கவில்லை யென்க.)

்டை - சிறு இடை. நாமம், நாமத்தாற் குறிக்கப்படும் பொருளான சீதையின் உருவத்துக்கு ஆகுபெயர். சிந்தை - (இராவணனுடைய) மனம். ஞானம் - மெய்யுணர்வு. அதாவது, தோற்றப் பொருட்டொகுதியான பிரபஞ்ச நிலையையும், உண்மைப் பொருளான கடவுள் நிலையையும் உள்ளபடி அறியும் அறிவு.

ஒருவனுக்கு இரண்டு கைகளிருத்தல் போல இரண்டு மனங்களில்லை. ஒரு கையில் அந்தக் கையோடு கையாய் ஒட்டிய ஒரு பொருளை மற்றொரு கையால் நீக்கிவிடுதல் சாத்தியமாதல் போலச், சீதை உருவும் இராவணன் மனமும் பொருந்தி இரண்டும் ஒன்றாய்விட்ட நிலையில் அவைகள் ஒன்றினின் றொன்றைப் பிரித்தல், இரண்டாம் மனம் இல்லாமையால், இயலாததாயிருந்த தென்பது கருத்து.

'சீதை யென்னும் நாமமும் சிந்தை தானும் உற்றிரண் டொன்றாய் நின்றால், ஒன்றொழித் தொன்றை உன்ன' என்பதில் 'ஒன்றொழித் தொன்றை' என்ற தொடருக்குச் 'சீதையை ஒழித்துச் சிந்தையை' அல்லது 'சிந்தையை ஒழித்துச் சீதையை' யென்ற முந்திய உரைகளைப்போல் நேரான பொருள் கூறாமல் 'சீதையை நீக்கிக் கரன் முதலிய பொருள்களுள் ஒன்றை' யென்ற நேரல்லாத பொருளைக் கூறியதன் காரணம் யாதெனில், இப்பாட்டு இதற்கு முந்திய 'கரனையும் மறந்தான்' என்ற பாட்டுப் பொருளை விளக்கப் பாடியதாயிருத்தலா லென்பது.

ஈற்றயலடியிற் சீதையை 'மறக்கலாம் வழிமற்றியாதோ' என்ற வினா எழுப்பி, ஈற்றடியிற் காமத்தைக் கடந்தா லன்றிச் சீதையை மறக்கலாகாது; காமத்தைக் கடத்தல் கல்வியா லாகாது; கல்வியுடன் அதனினும் சிறந்த தத்துவ ஞானமும் இருந்தாற்றான் காமத்தைக் கடக்கலா மென்பாராய்க், 'கற்றனர் ஞானம் இன்றேல் காமத்தைக் கடக்கலாமோ?' என்ற வினாவால் விடையிறுத்தார். இதனால் காம பரவசனான இராவணனது மன இயல்பை விளக்குதலை யொட்டிச், சிறந்த பயனுடைய ஒரு பொது உண்மையைப்

போதித்திருத்தல் புந்தியிற்கொண்டு போற்றுதற் குரியது. இவ்வாறுகக் கதையோடு பொருந்தப் பொது நீதிகளும் உண்மைகளும் போதிக்கப்பட்டிருத்தலைக் கம்பராமாயணத்திற் பல இடங்களிற் பார்க்கலாம். உதாரணங்கள் காணத் தூரம் போகவேண்டா; இதனை அடுத்துத் தொடுத்துவரும் மூன்று கவிகளின் முடிவுகளை நோக்குக.

பாட பேதம் : *கற்றறி ஞானம்.* (ருங)

**54.** விதியது வலியி னலு மேலுள விளைவி னலும்
பதியுறு கேடு வந்து குறுகிய பயத்தி னலும்
கதியுறு பொறியின் வெய்ய காமநோய் கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே

கொண்டுகூட்டு : *விதி வலியினலும், மேல் உள்ள விளைவினலும், (இலங்கைப்) பதி உறு கேடுவந்து குறுகிய பயத்தினலும், (இராவணன் கொண்ட) வெய்ய காமநோய், கல்வி நோக்கா மதியிலி மறையச் செய்த தீமை (வளர்தல்) போலவும், கதி உறு பொறியின் (வேகமாகவும்) வளர்ந்தது.*

பொருள் : *('ஊழிற் பெருவலி யாஉள மற்றென்று—சூழினும் தான்முந் துறும்' என்றவாறு தடுக்கக்கூடாத) ஊழின் பலத்தினலும், இனி (நிகழ்தற்பாலனவாக) உள்ள (மாரீசன் இறத்தல் முதலாய் இராவணன் இறத்தல் இறுதியான) சம்பவங்களாலும், இலங்கை நகரம் அடையவேண்டிய தீங்கு வந்து நெருங்கிய தன் பயனலும், (இராவணன் கொண்ட) கொடிய காமநோய், கல்வி (இருந்த திசையையும்) பாராத அறிவிலி ஒருவன் ஒருவரும் காணுதபடி மறைவாகச் செய்த தீவினை எல்லாரும் காணும்படி பெரிதாக வளர்ந்திடல் போலவும், வேகம் மிகுந்த யந்திரம் போல வேகமாகவும், வள*

*'விதி - இருவினைப்பயன் செய்த உயிரையே சென்று அடையும் நியதி.'*

*பல் ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று*
*வல்லதாம் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்*
*பழவினையும் அன்னதகைத்தே தற்செய்த*
*கிழவனை நாடிக் கொளற்கு*

*என்பது இங்கே கருதத்தக்கது. விளைவு - சம்பவம். —இ. அ. பயம் - பயன் - பலன். பதி - ஊர்; தலைவன்; இராவணனுகிய தலைவனைக் குறிப்பதாகவுங் கொள்ளலாம். கதி - விரைவு - வேகம். உறுதல் - மிகுதல். பொறி - இயந்திரம். பொறியின் - இயந்திரம்போல (வேகமாக). தீமை - தீங்கு.*

'கதிஉறு பொறியின்' என்பதற்கு 'விரைதலுற்ற அறிவினாலே' என்பதும்* '(புலன் நுகர்தலில்) வேகம் பொருந்திய (இராவணனுடைய) இந்திரியங்களிலே' என்பதும் † முந்திய உரைகள். 'பதி உறு கேடு வந்து குறுகிய பயம் - நந்தியினது சாபத்தின்படி வானரரால் இலங்கை அழிய வேண்டியமை.'—வை. மு. கோ. (ருச)

பொன்மய மான நங்கை மனம்புகப் புன்மை பூண்ட
தன்மையோ வரக்கன் றன்னை யயர்த்ததோர் தகைமை யாலோ
மன்மதன் வாளி தூவி நலிவதோர் வலத்த னானன்
வன்மையை மாற்று மாற்றல் காமத்தே வதிந்த தன்றே

கொண்டுகூட்டு: அரக்கன், (தன்) மனத்தில் பொன்மயமான நங்கை புகப், புன்மை பூண்ட தன்மையாலோ, தன்னை(த் தான்) அயர்த்தது ஓர் தகைமையாலோ, மன்மதன் வாளி தூவி நலிவது ஓர் வலத்தன் ஆனான். (இது வியப்பன்று;) வன்மையை மாற்றும் ஆற்றல் காமத்தே வதிந்தது.

பொருள்: இராவணன், தன் மனத்தினுள்ளே சீதை புகுந்ததனால், சிறுமை அடைந்த தன்மையினாலோ, தன்னைத் தான் மறந்த தன்மையினாலோ, (வன்மை மிக்க தேவர்கள் யாவரும் அஞ்சும் அவனை, மெல்லிய பூவே அம்பாகக் கொண்ட மென்மை மிக்க) காமதேவன் அம்பு எய்து வருந்தச் செய்யத்தக்க வல்லமையுடையவனானான். (இது வியப்பன்று;) எல்லாருடைய வல்லமையையும் நீக்கிவிடும் வல்லமை 'வெற்றி அரனையுங் கொண்ட' காமத்தின்கண்ணே தங்கியுள்ளது.

மயம் - அழகு; வடிவம்; சொரூபம். —இ. அ. புன்மை - சிறுமை; இங்கே எளிமை குறித்தது. தன்மையாலோ என்பது தன்மையோ என ஆல் உருபு தொக்கது. வருந்தல் வருத்தல் என்னும் பொருளுடையதாய்த், தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொதுவான 'நலிதல்', இங்கே வருத்தலென்னும் பிறவினைப்பொருளில் வந்தது. வலம் - பலம். வதிதல் - தங்குதல். அன்று, ஏ அசைகள்.

சிவமயம் என்பது சிவத்தாலாகிய நிறைவு, சிவரூபம் (— த. அ.) என்ற பொருளில் வருதல்போலப், பொன்னாலாகிய (— மகாலக்குமியாலாகிய, அதாவது, அத் தேவியின் எல்லா அமிசங்களாலும் ஆகிய, எனவே மகாலக்குமியினது பூரணாவதாரமான) நிறைவு பொருந்திய என்ற பொருளிலும், பொன்னின் (- மகாலக்குமியின்) சொரூபமான என்ற பொருளிலும்,

* மு. ரா. க.　　　　† வை. மு. கோ.

'பொன்மயமான' என்பது வந்ததாகக் கொள்ளல் பொருந்தும். இது, முன்வந்த 'தோ்தந்த' என்ற 51 ம் கவியுரையின் கடைசியில் உள்ள மகாலக்குமியே சீதையாக வந்தா ளென்பதனோடு பொருந்துதல் காண்க. 'பொன்மயமான நங்கை' என்பதற்கு '(மிக்க ஒளியால்) பொன்மயமானவள் போலுள்ள சீதை' என்பது முந்திய உரை. —வை. மு. கோ. (ருரு)

## இராவணன் விரக தாபம்

[ காமபரவசனான இராவணன், 'இனி இங்கிருந்தால், நம்முடைய காமம் வெளிப்பட்டுவிடு' மென்று, கொலுவிருக்கைவிட்டு, இயல்பாக எழுகின்ற நேரத்துக்கு முன் எழுந்து, தன் மாளிகையினுள்ளே போனான். போனவன், பள்ளியறையுள்ளே சென்று, தேவியர் யாவரும் போய்விட ஏவிய பின்பு, படுக்கையிற் சேர்ந்தான். காமாக்கினியால் ஆகமும் அகமுமே யன்றி ஆவியும் வேவதாயினன். அவ் வெப்பம் பொறுக்கமாட்டானாய்ப், படுக்கையிலே தரிக்கமாட்டானாய், மாளிகை உள்ளினும் வெளியே மரங்கள் நிறைந்த வனம் குளிர்ச்சியை அளிக்குமென்று புறப்பட்டுப், பணிப் பெண்கள் அணி அணியாகத் தீபங்க ளேந்திச் செல்லாநிற்கச் சென்று, ஒரு சோலையை அடைந்து, அங்குள்ள ஒரு வசந்த மண்டபத்தில், அவன் எப்போது வரினும் அப்போது சயனித்தற்குச் சன்னத்தமாய் அப்போதப்போது புதிது புதிதாக மலர்மெத்தை பரப்பிவைத்திருந்த மஞ்சத்தைச் சார்ந்தான். அப்போது பின்பனிப் பருவத்திறுதியும் இளவேனிற் பருவத்துவக்கமும் சந்திக்கும் சமயமா யிருந்தது. தானுற்ற காம வெப்பத்தை அப்போது நிகழ்ந்த பருவ வெப்பமென்று அவன் கோபிக்க, அஞ்சி அகன்றது போலப் பின்பனிப் பருவம் கழியக், கிரமமாக அடுத்துவருவதாகிய இளவேனிற் பருவம் எய்தியது. ]

**56.** வன்பனை மரமுந் தீய மலைகளுங் குளிர வாழும்
மென்பனி யெரிந்த தென்றால் வேனிலை விளம்ப லாமோ
அன்பெனும் விடமுண் டாரை யாற்றலா மருந்து முண்டோ
இன்பமுந் துன்பந் தானு முள்ளத்தோ டியைந்த வன்றே

கொண்டுகூட்டு: வன்பனை மரமும் தீய, மலைகளும் குளிர, வாழும் மென்பனி(க் காலம் இராவணனுக்கு) எரிந்தது என்றால், வேனிலை விளம்பல் ஆமோ? அன்பு என்னும் விடம் உண்டாரை ஆற்றலாகும் மருந்தும் உண்டோ? இன்பமும் துன்பமும் உள்ளத்தோடு இயைந்த அன்றே?

பொருள்: *மரங்கள் தீய, மலைகள் குளிர (அவைகளின் மீது பனி படிந்து) தங்கும் பனிக் காலமே இராவணனுக்கு வெப்பமாயிருந்த தென்றால், வேனிற் காலத்தின் வெப்பத்தை விளம்ப வேண்டுமோ? (வேண்டா.) காமமாகிய விடத்தை உண்டவர்களை அவ்விடத்தால் விளையும் வேதனையால் வருந்தாதபடி ஆற்றக் கூடிய மருந்தும் உண்டோ? (இல்லை.) இன்பமும் துன்பமும் (என்ற இரண்டு நிலைகளும் அவரவர்க்குப் புறத்தேயுள்ள நிலையோடு பொருந்தாமல் அவரவர் அகத்தேயுள்ள) மன நிலையோடு பொருந்தியவைகளன்றோ?*

*பணை - கிளை. பணை மரம் - கிளைகளையுடைய மரம். பணைத்தல் பருத்தலென்னும் பொருட்டாதலால், 'பணைமரம்' பருத்த மரமுமாம்.*

*மிகக் குளிர்ச்சியான தேசங்களில், பனிக் காலத்தில், மரங்கள் தீயினாற் கருகினாற்போல இலைகள் உதிர்ந்து நிற்றலை யுட்கொண்டு, வெயிலிற் பிற பொருள்களினும் குளிர்ந்திருக்கும் மரங்களும் கரிந்து தீந்துபோக வென்பார் 'மரமும் தீய' என்றார். வெயிலில் மற்றைப் பொருள்களினும் வெப்புற்றிருக்கும் மலைகளும் குளிர என்று விரித்துக் கூறி 'மலைகளும் குளிர' என்பதில் உள்ள உம்மைப் பொருளை விளக்குக. பனி, பனிக் காலத்துக்கு ஆகுபெயர்.*

*'எதிரிடைகள் இயைபுடையன' எனப் பொருள்படுகின்ற ஓர் ஆங்கில வாக்கியப்படி*, துக்கமேலீட்டாற் போலவே சந்தோட மேலீட்டாலும் கண்ணீர் பெருகுதலும், மிக்க இருளிற்போல மிக்க ஒளியிலும் அறவே கண் தெரியாமையும் உண்டு. திடீரெனத் தெரியவந்த அதி துக்க சமாசாரத்தாலும் அதிசந்தோட சமாசாரத்தாலும் சிலர் இறந்திருக்கின்றனரென்று கூறப்படுவதுண்டு. கடும் பனித் தேசத்திற் கொடுங் குளிர்க் காலத்தில் இரும்புத் துண்டைத் தொட்டோர் கை, தீக்கங்கைத் தொட்டோர் கை போலக், கொப்புளங் கொள்ளுமென்றும், அதிவெப்பமான சூடு உள்ள பிரதேசத்தில், கொடிய கோடைக் காலத்தில் மரங்கள் இலைகளிழந்து கருகி நிற்றல் போல, உறை பனித் தேசங்களிற் கடுமையான பனிக் காலத்தில் மரங்கள் இலைகள் உதிர்ந்து நிற்குமென்றும் கூறப்படுவதுமுண்டு. ஆதலால், 'வன்பணை மரமுந் தீய வாழும் மென்பனி(க் காலம்')* என்றது *மிக்க பொருத்த முடைத்தாம். இதற்கு '(வெயிலின் கொடுமையால்) உஷ்ணத்தையுடைய மரங்கள்' என்றும்†, 'தீய' என்பதை மலைக்கு அடையாக்கிக் 'காட்டுத் தீயை யுடைய மலைகள்' என்றும்‡ முன்னவர் உரை கூறினர்.*

---

* 'Extremes meet.'   † மு. ரா. சு.   ‡ வை. மு. கோ.

அன்பு - ஆசை: அது, இங்கே ஆண் பெண்ணையும், பெண் ஆணை யும் விரும்பும் ஆசையாகிய காமத்தை உணர்த்திநின்றது. 'அன்றே' என் பது, அல்லவா என்று பொருள்படுகின்ற, சொல்வோன் குறிப்பாலும் முன் பின் தொடர்ச்சி * யாலும் உடன்பாட்டுப் பொருளுணர்த்தும் எதிர்மறை வினவாக வாயினும், 'அன்று' 'ஏ' என்னும் இரண்டு அசைச் சொற்கள் இயைந்துநின்று வேறுபொருளுணர்த்தாது ஓசை நிறைக்கும் அசைநிலை யாகவாயினும் கொள்ளும்படி நிற்றல் குறித்துக்கொள்ளற் குரியது.

மேலே 'கானையும் மறந்தான்' என்ற பாட்டுரையின் முடிவிலே இப் பாட்டின் ஈற்றடி வாக்கியம் கம்பர் மக்கள் மனநிலை மிக்குணர்ந்தவ ரென்பதை விளக்கும் பல உதாரணங்களுள் ஒன்றாக எடுத்துக் காட்டப்பட் டிருக்கிறது. இவ் வாக்கியம், சீதளமான சோலையிலே குளிர்ச்சியான இர விலே இராவணனுக்கு வெப்ப உணர்ச்சி மிக்கது, அவன் மனநிலை காமம் காரணமாக மாறியதனு லெனப் புலப்படுத்தலோடு, சிறந்ததோர் பொது உண்மையைப் போதிக்கின்றது.

இந்த அனுபவசித்தமான அருமந்த அறிவுபொதிந்த அழகிய அரும் பெற லமுதவாக்கியம், தமிழ்ப் பெருங்காப்பியக் கவிஞருள் கம்ப ரொரு வருக்கே பிந்தியவ ரென்று கருதப்பெற்ற கச்சியப்பமுனிவர் தணிகைப் புராணத்தில், வீராட்டகாசப் படலத்தில், 'அறிவுடையார்க்கு நரகமும் சுவர்க்கமாம்: அறிவிலார்க்குச் சுவர்க்கமும் நரகமாம்' என்னும் உயரிய உண்மைப்பொருள்படக் கூறியுள்ள,

> விரகு மேவரின் நரகமும் துறக்கமே; வெதிர்க்கும்
> நரக மேவிர கில்லுழி நயத்தகும் இடமும்:
> அரவ மாலையான் கயிலையும், அலரவன் தனக்குப்
> புரவி லாத்துயர்க் கவதியில் புவனம் ஆகியதே

என்னும் ருo-ம் கவியை நினைவுகூரச் செய்கின்றது. கைலாசத்துக்கு வந்து சிவனை வணங்கித் தன்னை வணங்காத அகந்தை மிகுந்த பிரமனைக் குமாரக் கடவுள் வேதமுதன்மொழிப்பொருள் வினவ, அவன் விளம்பமாட்டாது விளம்பனஞ்செய்து † விழிக்க, அக்கடவுள் வெகுண்டு அவனை அக்கயிலை யின்கண்ணேதானே சிறையிலிட்ட சந்தர்ப்பத்திற் கூறப்பட்டது இக் கவி.

மாளிகைவிட்டுச் சோலையை உற்ற இடமாறுபாட்டாலும் பனிக்காலம் போய் வேனிற்காலம் வந்த காலமாறுபாட்டாலும் விரகதாப வேதனை குன்றாமல் மீதூரக், காமாவேசமான மனநிலை காரணமாக வருந்திய இரா வணனாகிய இராமாயண காவிய கதாநாயகனது எதிரியின் திறத்துக் கவிச் சக்கரவர்த்தி கூறிய '**இன்பமும் துன்பந்தானும் உள்ளத்தோ டியைந்த** அன்றே' என்ற கருத்தே

---

* Context. † தாமதித்து.

காதை நாயகன் கடவுளே! கதைநிகழ் களனோ,
மீத லத்தொடு பாதலம் பூதலம்! விடயம்,
பேத மின்றிமாந் தருக்கெலாம் உரித்து எனப் பெரிதும்
ஓத நின்ற காப்பியம்.........*

ஆகிய **பாரடைஸ் லாஸ்டு** † என்ற ஆங்கிலப் பெருங்காவிய கர்த்தாவான **மிலிட்டனார்** ‡ மனத்திலும் தோன்றியிருக்கிறது.

மேற்படி ஆங்கில காவியத்தின் கதாநாயகனான கடவுளின் எதிரியான சாத்தனது§ வீராவேசமான மனநிலை விளங்க, 'காலத்தான் இடத்தான் மாறிடுதல் மருவா மனத்தேன்' $; 'மனமே தனக்கு வாழிடமாம்; மனம் தன் உள்ளே பவர்க்கத்தைத்—துனுவான் சுவர்க்க மதுஆக்கச் சுவர்க்கம் பவர்க்கம் ஆக்கவல்லும்' §§ என்று அச்சாத்தன் கூறினானென்று கூறிய மிலிட்டனார் கூற்று, கால மாறுபாடு இட மாறுபாடுகளால் இன்ப துன்பங்கள் எய்துவன வல்ல; அவை அவரவர் மனநிலையைச் சார்ந்தன என விளக்கும் 'இன்பமும் துன்பந்தானும் உள்ளத்தோ டியைந்த அன்றே' என்ற கம்பர் கூற்றோடு கருத்தொத்திருத்தல் பெருத்த வியப்பை அளிப்பதாம். இது, ஒரு வகையிலும் ஒருவரை யொருவ ரறியாத உத்தமக் கவிகள் உள்ளங்களிலே ஒரே தன்மையான ஒள்ளிய உயரிய உண்மைகள் உதயமாவதற்கு ஓர் உதாரணமாக உள்ளது.

மேலே எடுத்துக்காட்டிய கவிப்பகுதிகள் வரும் சந்தர்ப்பத்தையும் அவற்றை விளக்கும் முன்பின் தொடர்ச்சியான பகுதிகளையும் 'சுவர்க்க நீக்கம்' முதற்காண்ட ¶ த்திலிருந்து எடுத்து இதனடியில் தருகிறேன்.

---

* சுவர்க்கநீக்கச் சிறப்புப்பாயிரம் 8–ம் கவி.

† Paradise Lost.

‡ Milton.

§ Satan.

$ One who brings a mind not to be changed by place or time.

§§ The mind is its own place, and in itself
Can make a Heaven of Hell, a Hell of Heaven.

¶ இக் கம்பராமாயண சார ஆசிரியரவர்கள், அரை நூற்றாண்டுக்கு முன் 'பாரடைஸ் லாஸ்டு' என்ற ஆங்கில காவிய முதற் பகுதியைச் 'சுவர்க்கநீக்க முதற் காண்டம்' என்னும் பெயரால் மொழிபெயர்த்து வெளியிட்டார்கள். அப்பொழுது டாக்டர் ஜி. யு. போப் அவர்கள் அதைப்பற்றிக் கூறியதாவது: 'இந் நூலின் முதற் பகுதி முற்றுப்பெற்றிருக்கும் தன்மையைப்பற்றி மனம் நிறைந்த துதிமொழியன்றி வேறொன்றும் கூற இடமில்லை. இம் மொழிபெயர்ப்பை அதி நுட்பமாகக் கவனஞ் செலுத்தி ஆராய்ச்சி செய்த யாம், மொழிபெயர்த்தவர் மூலப் பெருநூலுக் கிணங்க முட்டுப்பாடின்றி யொழுகும் இனிய தமிழ்க் கவிகளமைப்பதில மிக அதிகமான — மெய்யாகவே ஆச்சரியகரமான — சித்தியடைந்திருக்கின்றார் என்று கூறக் கடவேம்.'

மேலுமவர் தமது திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்பு முகவுரையில் இந் நூலை நன்கு மதித்துக் கூறியிருக்கின்றார். —பதிப்பாசிரியர்.

பரமண்டலத்தில், பராபரன் ஒருவனுக்கே குறைந்த உயர்ந்த பதவியில் இருந்த சாத்தன், அப் பராபரன் இட்ட கட்டளையைக் கடந்ததற்காக, அவனும் அவனைப் பின்பற்றிய அவனுடைய பரிவார தேவதைகளும் பாதாளத்திலே படைக்கப்பட்டிருந்த நரகத்துள்ளே தள்ளப்பட்டபோது, அவன் கூறியது.

'இன்ன நாடோ இந்நிலமோ இவ்வெங் குளிரும் வெப்பும் உறும்
இன்ன இடங்கொல் லோதுறக்கத் தீடா யாம்எற் றிடக்கடவேம்?
இன்னல் தரும்இவ் இருளோ அவ் எல்லுக் கிணையா ஏற்பதும்?' என்
றின்ன காலை அழிந்துளதூ துவர்கோன் இயம்பிப் பினும்இ சைப்பான்.

'நன்றஃ தாக, இன்றிறையா நண்ணும் அன்னோன் எதுநீதி
என்று விதிக்க விதித்தபடி இயைக்க வல்லா னாதலினால்.
ஒன்றும் மனோதத் துவங்களின்ஒத் தூற்றமதனால் நமின்மேலாத்
தோன்றும் அவன் பால் நின்றுநெடுந் தூரத் திருத்தல் நனிநன்றே.

'தருக விடைநீர் களிப்பென்றும் தங்கும் ஆனந் தத்தலங்காள்!
வருக வருக பயங்கரங்காள்! வருக தாழ்ந்த பிலஉலகே!
அரிய ஆழ நரகே!கா லத்தான் இடத்தான் மாறிடுதல்
மருவா மனத்தேன் நின்புதுக்கா வலனேன் வரவேற் றிடுவாயே.

'மனமே தனக்கு வாழிட மாம், மனம்தன் உள்ளே பவர்க்கத்தைத்
துனுவான் சுவர்க்க மதுவாக்கச் சுவர்க்கம் பவர்க்கம் ஆக்கவல்லும்.
தனிவான் உருமின் எனின்உயர்ந்தோன் தனக்குத் தாழ்வாம் தாழ்வொழிய,
எனவாற் றானும் குறையில்லா திருக்கும் முறையே உளென் என்னில்,

'முன்னம் இருந்த படியென்றும் முற்றும் உளெனேல், யாங்கணியான்
மன்னி யிடினும் அதனாலென்? மற்றிங் கெனினும் சுவாதீனம்
துன்னி வாழ்தும்; இங்கணியாம் துய்க்க நோக்கி அழுக்கறுக்கும்
அன்ன பொருள்ஒன் றும்படைத்தான் அல்லான் எல்லாம் வல்லானே.

'இங்கு நின்று நமைத்துரத்தான்; யாம்ஓர் கவற்சி யிலாதாட்சி
இங்கு புரிய லாம்; நரகின் எனினும் இறைமை நயத்தகும்; ஈ
திங்கென் கருத்தால்; வானிடைத்தொண் டியற்று குடியா வாழ்தலினும்
இங்கு நிரயத் திறையவனா எய்தல் இனிய தினியதரோ.' *

—சுவர்க்க நீக்கம், முதற்காண்டம், பாட்டுக்கள் ௯௬—௧௦௧.

---

* ஆங்கில மூலகாவியத்தில் இப்பகுதி வருமாறு:—

'Is this the region, this the soil, the clime,'
Said then the lost Archangel, 'this the seat

இதன் பொருள் வருமாறு:

அழிவடைந்துள்ள தேவதூதத் தலைவன் இந்தச் சமயத்தில் (அவர்கள் இறங்கிய இடத்தை நோக்கிப்) பின்வருமாறு கூறுகின்றான்: 'இந்த நாடோ, இந்த நிலமோ, இந்தக் கொடுங்குளிரும் கொடும் வெப்பும் உள்ள இடமோ நாம் பரமண்டலத்துக்குப் பிரதியாக ஏற்றுக்கொள்ளவேண்டும்? துக்ககரமான இந்த இருளோ, அந்தத் திவ்ய ஒளிக்குப் பதிலாகப் பெற்றுக்கொள்ளவேண்டியது? இப்போது அரசனா யுள்ளவன், இன்னது நீதி என்று விதிக்கவும் விதித்தபடி நிலைநிறுத்தவும் வல்லவனாதலால், அவையெல்லாம் அவன் கருத்துப்படியே யிருக்கட்டும். மனோசக்திகளால் நம்மை ஒத்துப் பலத்தினால் நமக்கு அதிகனாகிய அவனிடத்திலிருந்து நாம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறோமோ, அவ்வளவும் நல்லதே. நித்தியானந்தத் தலங்களே! நீங்கள் எனக்கு விடை கொடுப்பீர்களாக! பயங்கரங்களே! வருவீராக! பாதாளமே! நீயும் வருவாயாக! ஏ அரிய ஆழமுடைய நரகே! காலதேச பேதத்தால் மாறுதல் அடையாத மனத்தை உடையனாகிய உன்னுடைய புதிய அரசனாகிய என்னை வரவேற்றுக் கொள்வாயாக. மனமானது (மற்றொன்றையுந் தனக்குச்

---

That we must change for Heaven ?–this mournful gloom
For that celestial light ? Be it so, since He
Who now is sovran can dispose and bid
What shall be right: farthest from him is best,
Whom reason hath equalled, force hath made supreme
Above his equals. Farewell, happy fields,
Where joy for ever dwells! Hail, horrors! hail,
Infernal World! and thou, profoundest Hell,
Receive thy new possessor—One who brings
A mind not to be changed by place or time.
The mind is its own place, and in itself
Can make a Heaven of Hell, a Hell of Heaven.
What matter where, if I be still the same,
And what I should be, all but less than he
Whom thunder hath made greater? Here at least
We shall be free; the Almighty hath not built
Here for his envy, will not drive us hence:
Here we may reign secure; and, in my choice,
To reign is worth ambition, though in Hell:
Better to reign in Hell than serve in Heaven.'

**— Paradise Lost, Book I, lines 242—26**

சாரிடமாக வேண்டாது) தனக்குத்தானே இடமா யிருக்கிறது. அது (சுகம் அநுபவிக்கும் சுபாவமுடையதா யிருந்தால் நரகமத்தியிலும் சுகம் அடைவதா யும், துக்கம் அநுபவிக்கும் சுபாவமுடையதா யிருந்தால் சுவர்க்கமத்தியிலும் துக்கம் அடைவதாயும் இருப்பதால்) தனக்குள்ளே நரகத்தைச் சுவர்க்கமாக் கவும் சுவர்க்கத்தை நரகமாக்கவும் வல்லது. இடி ஒன்றினால் அதிகனாகிய அவனுக்குச் சற்றுத் தாழ்ந்திருக்கும் தாழ்வொழிய, வேறெந்த வகையிலும் குறையின்றி நான் இருக்கவேண்டியபடியே முன்னிருந்ததுபோலவே எப் போதும் இருக்கின்றனன் என்னில், நான் எங்கிருந்தாலும் என்ன? இங் காயினும் நாம் சுவாதீனராக வாழ்வோம். இங்கு, நாமனுபவிக்கப் பார்த்துத் தான் பொறாமை கொள்ளும்படியான பொருளொன்றையும் எல்லாம் வல் லான் படைத்துவைக்கவில்லை. ஆதலால், அவன் இங்கிருந்தும் நம்மைத் துரத்தமாட்டான். இங்கு நாம் கவலையில்லாமல் அரசாட்சி செய்யலாம். நரகத்திலாயினும் இராசாங்கம் ஆசைப்படத் தக்கதென்பது என் அபிப்பிரா யம். பரமண்டலத்தில் தொண்டு செய்வதிலும் நரகத்தில் அரசாளுதல் நல்லதே.'* (ருசு)

## இராவணன் விரகதாபத்தால் மதிமயங்கல்

[ பனிக்காலத்திலும் குறையாமல் இயல்பாக வளர்ந்துகொண் டிருந்த விரகதாபம், வேனிற்காலத்தில் விரைவாய் மிகுதிப்பட்ட தற்கு வருந்திய இராவணன், அந்தத் தாபம் மழைக்காலத்திலும் வளர்தலுறவே, அதிக வருத்தமடைந்தான். சந்திரன் உதிக்கக் கண்டு, தன் தாபம் சந்திரனால் தணியுமென் றெதிர்பார்த்ததற் கெதிராக மிகுதிப்பட, அத்தியந்த வேதனை அடைந்தான். சமுத் திரத்தினின் றெழுந்த சந்திரன், சமுத்திரத்திற் கண்வளரும் திருமால், சமயம் நோக்கிக் காத்திருந்து, இராவணன் உயிர் குறித்துச் சமுத்திரத்தினின் றெறிந்த சக்கராயுதம் போன்றது. இராவணனது காமாக்கினி, அவன் அமரரிடம் கவர்ந்து வைத் திருந்த அமுதத்தை அள்ளியள்ளி அருந்தியும் அணுவளவும் குறையவில்லை. அவன் மேனி மீது வெண்ணிலா வீசியது, நெருப்பிலுருக்கிய வெள்ளியை அள்ளி வீசினாற்போன் றிருந்தது. இதுகாறும் தான் விரும்பிய மாதரை விரைவாய் மேவிக் காம இன்பம் அனுபவித்ததன்றிக் காமத் துன்பத்தை அறிந்திராத இராவணன், இப்போது அவ்வாறு மேவப் பெறாமையால், விரக வேதனை மிகுந்து, விவேகமிழந்து, சந்திரனைச் சூரியனென மதி

* சுவர்க்கநீக்க வசனம், முதற்காண்டம், பக்கங்கள் கஙக-கச௦.

*மயங்கித் தன் அயல்நின்ற ஏவலரை நோக்கி, 'இரவில் சூரியன் வருவானேன்?' என, அவர்கள், அஞ்சி வாய்புதைத்து, 'இது சூரிய னன்று, சந்திரன்; சூரியன் எதிரே மறையும் விண்மீன்கள் விளங்குவதை நோக்குக' என்றனர். பகலும் சூரியனும் வர, விரகதாபம் தன்னியல்பாக அதிகப்பட, அஃதறியாமல், 'காமத்தை வளர்த்தலால், இது, காமோத்தீபகமான சந்திரன்' என்றான்.* ]

அவன் பிறையைப் பழித்தல்

[ *நிறைமதிப் பக்கம் போய்க் குறைமதிப் பக்கம் வர, பிறைச் சந்திரன் பூரணசந்திரன்போலாகாமல், தன் தாபத்தைத் தணிக்கு மென்று, ('கட்டில் தலைதிருப்பி வைத்தால் தலைவலி போம்' என்று எண்ணிய தலைநோயாளி போலக்) கருதிய இராவணன், பிறைமதியினால் தாபம் தணியாமை கண்டு, அதனை வெறுத்து, 'ஏ! பிறையே! வடவாமுகாக்கினியின் நாவையும் படவாளராவின் பல்லையும்போ லிருக்கின்றாய். மாலைக்காலமான காலன் பிடித்த வாளையும் ஒக்கின்றாய். கருவிடத்தைக் கழுத்தில் தரித்த பரமன் உன்னை வெள்விடமென்று கருதியதனா லன்றோ உன்னைச் சென்னி யில் தரித்தான். கொல்லுந்தன்மையில் இளம் பாம்புக்கும் முது பாம்புக்கும் பேதமில்லாமைபோலத் தாபத்தை அதிகமாகச் செய்தலில் பிறைமதிக்கும் நிறைமதிக்கும் பேதமில்லை!' என் றான்.* ]

இருள் வருணனை

**57.** ஆண்டப்பிறை நீங்கலு மெய்திய தந்தகாரம்
தீண்டற்கெளி தாய்ப்பல தேய்ப்பன தேய்க்கலாகி
வேண்டிற்கர பத்திரத் தீர்த்து வி ழுத்தலாகிக்
காண்டற்கினி தாய்ப்பல கந்துதி ரட்டலாகி

கொண்டுகூட்டு: *ஆண்டு அப்பிறை நீங்கலும், அந்தகாரம், தீண் டற்கு எளிதாய், பல தேய்ப்பன தேய்க்கலாகி, வேண்டில் கரபத்திரத்து ஈர்த்து விழுத்தலாகி, காண்டற்கு இனிதாய், பல கந்து திரட்டலாகி, எய்தியது.*

பொருள்: *அப்போது அந்தப் பிறை அத்தமனமாய் நீங்கிய உடனே, (பிறை மறையு மளவும் மறைவுற்றிருந்த) இருளானது,*

தொடுதலால் உணர்தற்குச் சுலபமானதாய்(ச், சந்தனக்கட்டை போல) உரைத்தற்பாலனவான பொருள்கள் பலவற்றையும் உரைத் தற்கேற்ற (கல்லுப்போலக்) கடினமானதாய், (மரம்போல் ஈர் வாள் கொண்டு) அறுத்துவீழ்த்தற் கானதாய்ப், பார்த்தற்கு இனிமை யானதாக (உருட்சி அடைந்து அழகுறும்படி) பல தூண்கள் (ஆகக் கடைந்து) திரட்டுதற் கமைவுடையதாய், (மிக இறுகிய கட்டிப் பொருள்போலத் திண்மையான தோற்றமுடையதாய்) வந்து சேர்ந்தது.

ஆண்டு - அப்போது. வேண்டில் - வேண்டுமானால். கரபத்திரம் - கைவாள் - கைரம்பம். ஈர்த்தல் - அறுத்தல். கந்து - தூண்.

இதையும், அடுத்துவரும் பாட்டையும், அடியிறுதிச் சீர்களை இரண் டிரண்டு சீர்களாகப் பிரித்துப் படித்தலுமுண்டு. (ருஎ)

58. முருடீர்ந் துருட்டற் கெளிதென்பதென் முற்றுமுற்றிப்
பொருடீங்கில் கேள்விச் சுடர்புக்கு வ ழங்கலின்றிக்
குருடீங்கி தென்னக் குறிக்கொண்டுகண் ணோட்டங்குன்றி
அருடீர்ந்த நெஞ்சிற் கரிதென்பதவ் வந்தகாரம்

கொண்டுகூட்டு : (இருளை) முருடு ஈர்ந்து (என ஈர்ந்து, தூண் போல) உருட்டற்கு எளிது என்பது என்? பொருள் முற்றும் முற் றித் தீங்கு இல் கேள்விச் சுடர் புக்கு வழங்கல் இன்றி, 'ஈங்கு குருடு இது' என்னக் குறிக் கொண்டு, கண்ணோட்டம் குன்றி, அருள் தீர்ந்த நெஞ்சின் அவ் அந்தகாரம் கரிதென்பது.

பொருள் : அவ்விருளை மரக்கட்டையை அறுத்தல்போல அறுத்து(த் தூண்போல) உருட்டற்கு எளிதான தென்று சொல்வா னேன்? (சிறந்த) பொருள் (-அர்த்தபுஷ்டி) பூரணமாய், முதிர்ச்சி யுடையதாய்க், குற்றம் சற்றும் அற்ற நூற் கேள்வி (ஆன்றோர் வாய்க் கேள்வி) யாகிய தீப ஒளி சிறிதும் உள்நுழைந்து செல்லு தற் கிடங் கொடாமல், 'இவ்வுலகத்திலே (குருடென்று கூறப்படு வது குருடன்று) இதுவே - இம்மனக் குருடே - (உண்மைக்) குருடு'—என்று எடுத்துச் சொல்லுதற் கிலக்கானதாய்த், தாட் சணியம் (சற்றும் இல்லை யென்று சாற்றும்படி) குறைந்ததாய், இரக்க மென்பது (இம்மியும் இல்லாது) நீங்கி ஒழிந்ததான நெஞ் சைக் காட்டிலும் கருமையானது அவ்விருள்.

முருடு - தறித்த மரத்தின் அடி. ஈர்தல் - அறுத்தல். குறி - இலக்கு. கண்ணோட்டம் - தாட்சண்யம்.

மனத்தில் அறிவில்லாமையும் இருளில் ஒளியில்லாமையும் கருமை யெனப்பட்டன.

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார்* றுடைத்து

என்ற குறள் இங்கு நினைவுகூரத் தக்கது.

தமிழிலும் ஆங்கிலத்திலும் வல்லவராய் இருமொழிகளினும் பல இனிமையும் அறிவும் ஒருங்கு பொருந்திய பல உபயோகமான நூல்கள் இயற்றிய அ. மாதவையர் இவ் விருகவிகளின் அருமையை நுணுகி நோக்கித், 'தமிழர்நேசன்' பத்திரிகை, இரண்டாம் தொகுதி முதலாம் பகுதியில், 'தமிழ்ச் செல்வம்' என்ற தலைப்பின் கீழ், வெளியிட்டிருப்பது பின் வருவது :—

'இவ் விரண்டு செய்யுள்களிலும், கம்பர், பிறைச்சந்திரன் நீங்கிய பின் உண்டாகிய இருட்டை வருணித்திருக்கிறார். ஆங்கில பாஷையிலே ஜான் மில்டன் என்கிற மகாகவி இருட்டை வருணிக்கும்பொழுது, "தொட்டுணரக்கூடியது" † என்று கூறியிருப்பதை, வியப்பதுண்டு. கீழ் நாட்டுக் கவிகளின் சுவபாவப்படி, நமது கம்பரோ, அஃதுடன் நிற்காது, "வாளால் வெட்டி வீழ்த்தலாம், தூணுகத் திரட்டலாம், எளிதில் உருட்டலாம்" என்று கூறியிருக்கிறார். இஃது அவ்விருட்டின் திண்ணிய தன்மையை மட்டும் குறிக்கும். அதன் கருமையையும் தனிப்படுத்தி யுரைக்க வெண்ணி, கம்பர், "நன்கு விளைந்த பொருள், நற்கேள்வி முதலிய வெளிச்சங்கள் யாவுமின்றி, குருடென்னும் பெயருக்கே தக்கதாய், கண்ணோட்டம் குன்றி, அருள் சிறிதுமே யில்லாத அறிவிலியின் வன்னெஞ்சிலும் கரியது" என்று வருணித்திருப்பது எவ்வளவு அழகாயும் சாதுரியமாயும் இருக்கின்றது.'

இவ் விருகவிகளும் நளவெண்பாவில் வரும் 'இளம்பேய்க்குந் தோன்றாவிருள்' என்றதனையும், 'கருவிக்கும் நீங்காத காரிருள்' என்றதனையும்,

அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்—உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதையமே போன்ற திரா

என்றதனையும் நினைவுகூரச் செய்கின்றன. (௫௮)

---

* இருண்டிருப்பார். † 'Palpable darkness'

## இராவணன் இருளைப் பழித்தல்

[ அந்த அந்தகார அந்தகன் அகில உலகத்தையும் அருந்தி விட்டானென, எல்லா உலகத்தையும் இருள் கவர்ந்துகொண்டதைக் கண்ட இராவணன், 'இதுவரை இவ் விருள்விடத்தைக் கழுத்துள் அடக்கி வைத்திருந்த கண்ணுதற் கடவுள், இது வெளிப்பட்டால் உலகிலுள்ள உயிருள் பொருள்கள் உயிரில் பொருள்களெல்லாவற்றையும் ஒருங்கழித் தொழித்துவிடு மென்பதை உன்னுமல், அந்தோ! உமிழ்ந்து வெளியில் உலாவ விட்டுவிட்டான்; "சிங்கி* குளிர்ந்துங் கொலும்" † என்றவாறு விடத்தினது குளிர்ச்சியும் கொல்லுந் தன்மையும் கொண்டிருத்தலுடன் கொதிப்பும் உடைத்தாயிருத்தலால், இவ்விருள் காளவிடமுண்டு கறுத்த காலாக்கினிபோலும்!' என்றான். ]

## இராவணன் சீதையின் உருவெளித்தோற்றங் கண்டு உரைத்தல்

[ 'அம்பும் அனலும் ஊடுருவமாட்டாததாய் இறுகிய மையினும் இருண்டதாயுள்ள இந்த இருளிலே, இனிய தீபம்போல ஒரு பெண்ணின் உருவம் ஒளிர்கின்றது. இந்தப் பெண்ணுருப்போல, யான் சஞ்சாரம் செய்த ஏழுலகங்களிலும் எந்தப் பெண்ணுருவையும் இதுவரையும் கண்டிலேன். இந்த வடிவம் என் தங்கை தெரிவித்த மங்கை வடிவமே!' என்றெண்ணினன். ]

## இராவணன் சூர்ப்பநகையைத், தன் னெதிர் நிற்பவள் சீதைதானு, வென்று கேட்க, அவள் இராமன் எனல்

[ 'இவள் யான் விரகவேதனையால் வருந்துதற் காற்றளாய்த் தானே என்னைத் தேடி வந்திருக்கின்றாள். இவளுக்கு யான் செய்யும் கைம்மாறு யாது மில்லை. இவளைப்பற்றி, இவளைக் கண்டுவந்து எனக்குத் தெரிவித்த என் தங்கையைக் கேட்பேனுக' என்று எண்ணி, ஏவலரை நோக்கிச், 'சூர்ப்பநகையைக் கொணர்க' என ஏவ, அவர்கள் கூட்டிவர, 'இதோ! என்முன் நிற்பவள் சீதைதானு?' என்று கேட்டான். அவள், தன் காம மிகுதியால் தனக்குத் தோன்றிய உருவெளித்தோற்றத்தின்படி, 'செந்தாமரைக் கண்ணும், செங்கனிவாயும், திரண்ட தோளும், சிலையேந்திய கையும் திகழ நிற்கும் இவன்தான் இராமன்!' என்றாள்.

* சிங்கி - விஷம். † நீதிநெறி விளக்கம்.

இராவணன், 'என் கண்ணெதிரே தோன்றுவது பெண்ணுருவம், அதனை, யான் நினைத்தலும் செய்யாத ஆணுருவ மென்கின்றாய்! அறிவிலீ! உன் அறியாமை இருந்தவாறு என்னே! மனிதர்கள் மயங்க மாயவித்தை செய்யவல்ல நாம் மயங்கும்படி மனிதரா மாயை செய்வார்கள்? இது நன்றாயிருக்கின்றது!' என்றான். அவள், 'நீ காமாதுரனாய் அவனே நினைவா யிருத்தலால் நீ நோக்கு மிடமெல்லாம் அவன் உருவெளித்தோற்றத்தைக் காண் கின்றாய். இது இயல்பே' என்றாள். ]

சூர்ப்பநகை தன் காமக் கருத்தைச் சாதுரியமாய் மறைத்தல்

[ இராவணன், 'யான் சீதையைக் கண்டது உருவெளித் தோற்றமே ஆகுக; நீ இராமனைக் கண்ட தெவ்வாறோ?' என்றான். சூர்ப்பநகை, முன், 'யான் கொண் டோடும் வண்ணம் இராமனைத் தருதி' என்று சொல்லத்தக்க சமயத்தில் துணிந்து தன் காமத்தை வெளிப்படையாகப் புலப்படுத்திச் சொல்லியவள், இது சமயம் அது தகாதெனக் கருதித் தன் காமத்தை மறைத்துக் கூறுவா ளாய், 'யான் செத்தாலன்றித் தீராத துன்பமுறும்படி அவன் என்னை எக்காலம் இக்கோலம் கண்டானோ, அக்கால முதலாக அச்சத்தால் அவனை அனவரதமும் அயர்க்கா திருக்கின்றேன்; அதனால் அவன் உருவெளித்தோற்றத்தைக் கண்டேன்' என்றாள்.

அவன், 'நீ புகன்றது பொருந்தும். அது நிற்க. எனது ஆவியையும் ஆக்கையையும் அடையப் பற்றிஎரிகின்ற இந்தக் காமத்தீயை ஒழிக்க உபாயம் உளதோ?' என, அவள், 'உலக முழுவதையும் பொது நீக்கித் தனிகாக்கும் ஒரு நீ சாமானியர் போல வருந்துவானேன்? உடனே போய் அவளைக் கவர்ந்து வருவாயாக. இதுவே உபாயம்' என்று கூறி அகன்றாள். அவன், அறிவு அடங்கி ஒடுங்க, ஆவி நிலைகுலைய, ஆருயிர் அகன்றதோ வென அயல் நின்றார் அச்சமுற, மரணாவத்தை அடைந்து, சாக வில்லை யென்னுமளவே ஆவிதரித்திருந்தான். ]

இராவணன் மாரீசனிடம் செல்லல்

[ மாண்டுபோன உயிர் மீண்டுவந்ததென மறதி நீங்கி நினைவு தோன்றப், 'பல பருவங்கள் நிறைமதி குறைமதி முதலிய இயற் கைப் பொருள்களால் இந்தத் தாபந் தணியாது வளர்தலால்,

இதனைச் செயற்கைப் பொருளாற் றணிப்பேனாக' என்று தெய்வத் தச்சனைக்கொண்டு சந்திரகாந்த மண்டபம் சமைப்பித்து, அத னுள் மலர்மெத்தை விரித்த மஞ்சத்தில் வைகலுற்றான். சாளரங் களின் வழியே தண்ணெனும் தென்றல் வந்து மெல்லென வீச, அந்த மண்டபத்தின் தண்மை தென்றலின் சீதளத்தோடு சேர்ந்து விரக வெப்பத்தை மிகுவிக்க, இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் இரண்டாலும் அவ்வெப்பம் தணியா தென் றெண்ணி, வேறு யாது செய்யத் தக்கதென ஆலோசனை சொல்ல அமைச்சர்களை அழைத்து, அவர்களிடம் ஆலோசித்து மாரீச னிடம் சென்றான்.

தவஞ்செய்துகொண்டிருந்த மாரீசன், 'இங்கே தனியனாய் இக்கொடியோன் யாது கருதி வந்தான்?' என்றெண்ணி, அச்சத் தோடு இதயம் பதைக்க, இராவணனை எதிர்கொண்டு வரவேற்று உபசரித்து, 'வந்த காரியம் யாது?' என, 'வலியற்ற மனிதர் கள், வலியுற்றவராய், உன் மருகி சூர்ப்பநகை மூக்கை அறுத்த தன்றி, அதனை அறிந்து எதிர்த்த கரன் முதலிய உன் மருகரைக் கொன்றுவிட்டார்கள். இது உன் குலத்துக்கும் என் குலத்துக் கும் பழிக்கிடமா யுற்றதன்றோ? நீ பழிக்குப் பழி வாங்கவேண் டிய கைகளைத் தலைமேற் சுமந்து (கும்பிட்டுக்)கொண்டு தவஞ் செய்கின்றாய். மானத்தாலும் கோபத்தாலும் மனம் கொதிக்க மரண வேதனைப்படுகின்ற யான், சிறிய மனிதரோடு பொருதல் தகாதென்று, உன் உதவியால் அம் மனிதரோடு வாழும் மகளைக் கவர்ந்து, உன் மருகியின் மானபங்கத்துக்கு எதிர் மானபங்கஞ் செய்து, பழிக்குப் பழி வாங்கக் கருதி வந்தேன்' என்றான்.

இராவணன் கூறியது, எரிகின்ற நெருப்பிற் காய்ச்சிய இரும் புச் சலாகையைச் செலுத்தியதுபோல, இரண்டு செவிகளோடு இருதயத்தையும் எரிக்க, இகழ்ச்சியும் கோபமும் வெளிப்பட, இராவணனை நோக்கி, 'சிச்சீ! என்ன சொன்னாய்?' என்று, அவ னுக்கு அஞ்சித் திடுக்குற்றிருந்த சிந்தையைத் திடப்படுத்திக் கொண்டு மாரீசன் செப்புகின்றான்: ]

### மாரீசன் இராவணனுக்கு நன்மதி கூறல்

[ 'மன்னர்மன்னா! மதியை யிழந்து வாழ்வைக் கெடுக்கத் தொடுத்துவிட்டாய். இது உன் செயலன்று, ஊழின் செயல்.

உன் கோபத்தால் எனக்கு மாள்வு நேருமானாலும் அதற்கு அஞ்சாது, உனக்கு வாழ்வு நீங்காதவாறு நினைந்து, யான் மனந் துணிந்து சொல்வதைக் கேள். நீ நெடுங்காலம் அருந்தவஞ் செய்து பெரும் பதவி யடைந்திருக்கின்றாய். தரும நெறியினாற் சம்பாதித்த சம்பத்தை அதர்ம நெறியினால் அழிக்கலாமோ? தம்மை நம்பி நட்ட அரசருடைய நாட்டைக் கவர்தலும், நல்வழியாலன்றி அல்வழியாற் குடியிறை கொள்ளலும், அயலான் மனையாட்கு ஆசைப்படுதலும் செய்வாரைத் தண்டிக்க, அவரினும் வல்லா ரில்லாரெனினும், அவர்களைத் தருமதேவதைதானே தண்டிப்பது சரதமென்று தெரிகுவாயாக. இதுவரையும், யாரே, துட்டரானோர் தொலையாது நிலையாக வாழ்ந்தார்? சொல்வாயாக. கௌதமர் மனைவியைக் காதலித்த தேவேந்திரன் தேவ ராசாங்கத்தை யிழந்து சிறுமைப்பட்டது போலப், பிறர் மனைவியை விரும்பிப் பெரும்பத மிழந்து இழிந்தோர் எத்தனைபேரென்பேன்! இலக்குமி ஒத்த இலக்கணம் மிக்க மனைவிமார் எத்தனைபேரோ உன் அருளை நாடியிருக்க, அவர்களைப் புறக்கணித்து, அறிவு கெட்டு, அயலான் மனையாளை அடைய முயல்கின்றாய்! நீ செய்யத் தொடங்கிய தீய முயற்சியைச் செய்து தீர்த்தாலும், அவளை அடையாய், பழியைத்தான் அடைவாய். என் தாய் தாடகையையும், என் தம்பி சுபாகுவையும், உன் தம்பியர் கரனாதியரையும் கொன்ற இராம னம்பால் நீ உன் குலத்தோடு மாண்டிடுவாய். இந்தத் தீய எண்ணத்தை விட்டுச் செல்வத்தோடு சிறப்பாக இதுவரை வாழ்ந்ததுபோல இனிமேலும் இனிது வாழ்வாயாக' என்றான். ]

இராவணன் கோபிக்க, அவன் மறுபடியும் உறுதிமொழி உரைத்தல்

[ இராவணன், இருபது நயனமும் எரியெழ நோக்கி, 'கைலை மலையைக் கண்ணுதற் கடவுளுடன் எடுத்த என் வலி எளிய மனிதர் வலிக்கும் எளிய தென்றாய். என் நெஞ்சின் நிலையை நினைத்துப் பாராது அஞ்சாமல் அவமதித்தாய். என் தங்கையைப் பங்கப் படுத்தியவரைப் பாராட்டிப் புகழ்கின்றாய். இது நீ என் திறத்தில் இழைத்த முதற் பிழையா யிருத்தலால் உன்னை ஒறுக்காது பொறுத்தேன்' என்றான். அப்போது, மாரீசன், 'இன்னமும் நன்மதி கூறினால், இவன் என்னை இதனினும் அதிகமாகக் கோபிப்பா'னென்று அஞ்சானாய், 'நீ என்னைக் கோபித்தாயல்லை.

உண்மையில் உன்னையும் உன் குலத்தையும் கோபித்தாய். நீ எடுத்தது கைலைமலை, இராமன் ஒடித்தது மேருமலை; அம்மலையினும் இம்மலை எவ்வளவு ஏற்ற மென்பதை எண்ணிப்பார். இராமன் வலியை அறிவாயல்லை; அறிந்த யான் சொல்லியும் தெரிவாயல்லை. அவனிடம் விசுவாமித்திரன் அளித்த தேவாத்திரங்கள் செகமுழுவதையும் சிதைக்க வல்லனவாய், அவன் ஏவல்வழிநிற்பனவாய் இருக்கின்றன. உன்னை வென்ற கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்ற பரசுராமனை ஒடுக்கிய இராமன் வலிமையை யொத்த வலிமை நமக்கு உளதோ? உனக்கும் உன் குலத்துக்கும் முடிவை நாடுதலே, அவன் பகையைத் தேடுதலாம். நஞ்சுண்ணத் தொடங்கினார்க்கு அயல் நின்றார், நஞ்சுண்பார் நெஞ்சுவக்க, "நஞ்சுண்ணல் நன்"றென்னலாமோ? அதுபோல உனக்கு உவப்பானதை உரையாமல் உறுதியானதை உரைத்தேன். நீ செய்யத் தொடங்கிய தீச்செயலைச் செய்யா தொழிவாயாக. விரகவேதனையால் மேனி மெலிந்து ஞான மிழந்து ஈன மொழிகளை இயம்பினாய் யான் உன் மாமனும் உன் குலத்து முதியோனுமாயுள்ள உரிமை பற்றி, உனக்கு இந்த உறுதிமொழிகளை உரைத்தேன். அப்பா! இப்பாதகச் செயலை அடியோடு மறந்துவிடு' என்றான். ]

## மறுபடியும் இராவணன் கோபிக்க, மாரீசன் இணங்கல்

[ 'உன் தாயைக் கொன்றவனுக்கு அஞ்சி, ஓடி ஒளித்துறைந்து உயிரைப் பேணுகின்ற நீ, செத்தா ரொத்தாய். உன்னையும் ஆளோடு ஆளாகச் சேர்த்தெண்ணலாமோ? திக்குயானைகளைச் செயித்துத், தேவரைச் சிறைப்படுத்தித், தேவலோகத்தைத் தீக்கிரையாக்கிச், செகமுழுதும் செங்கோல் செலுத்து மென்னைச், சிறுமனிதர் சிறுமை செய்யுந் திறமுடையரென்று செப்பினாய். தெவ்வர் கிடையாது தினவுதின்னும் எனது திண்டோள்களுக்கு எதிரிகள் கிடைத்தலினும் இனியது யாதிருக்கின்றது? நீ யான் ஏவியதைச் செய்தற்பாலையே யன்றி, எனக்கு ஆலோசனை கூறற்பாலை யல்லை. யான் இட்ட கட்டளையை இயற்ற மறுப்பையேல், என் வாளுக் கிரையாவாய். உனக்கு உயிர்மேல் ஆசையுளதேல் யான் வெறுப்பதை உரைத்தலை விடுத்து என் குறிப்புவழி நடப்பையாக' என்றான். எனவே, மாரீசன், அடங்கி, 'உண்மையாக உன் நன்மையை உத்தேசித்து உனக்கு உறுதியாயுள்ளதை

உணர்த்தினேன. என் நன்மையை எண்ணி அச்சத்தினால் எதுவும் இசைத்தே னல்லேன். கெடுகாலம் கிட்டினார்க்கு நன்மை கூறினாலும் தீமையாகத் தோன்றுமன்றோ? யான் செய்யவேண்டியதைச் செப்புக எனறான. ]

மாரீசன் மாய மானாக் மனமிசைதல்

[ இராவணன், மாரீசன் கூறியது கேட்டுக் கோபம் தீர்ந்து, குதுகலம் கூர்ந்து, அவனை ஆலிங்கனஞ்செய்து, 'மாமா! நீ கூறுமாறு நான் ராமனம்பாற் சாதல் காமனம்பாற் சாதலினும் மேன்மையான தன்றோ? நீ செய்யவேண்டிய காரியம் சீதையை யான் அடையச்செய்தலே' என, 'இராமனம்புக் கஞ்சி இங்கே ஒளித்திருக்கின்ற யான் செய்யக்கூடியது யாது?' என, 'மாயையால் வஞ்சித்து மைதிலியை வெளவுதல்' என, 'வஞ்சித்து வெளவுதல், மன்னர்மன்னனான உன்னுடைய உன்னத நிலைக்கு ஒவ்வாதது. இராமனை எதிர்த்து வென்று சீதையைக் கைக் கொள்ளல்தான் தருமநெறி. அதனால் உன் வீரப் பிரதாபத்தை மிகுவித்தவனு மாவாய்' என, 'அது தக்கதன்று, அவனைக் கொன்றால், அவள் இறந்துவிடுவாள். ஆதலால் மாயையால் வஞ்சித்து வெளவுதலே செவ்வியது' என, மாரீசன், தன்னுள்ளே, 'இந்தத் தீயோன் சீதையைத் தீண்டுமுன்பே இராமனம்பால் இறந்தொழிவா' னென்று எண்ணி, 'இராமனை எதிர்க்கச் சொல்லிய என் சூழ்ச்சி வீணாயிற்று. எனக்கு இறுதிக்காலம் எய்தியதுபோலும்! விதியின் விளைவை எவர் அறிவார்? இவன் ஏவியதைச் செய்வதன்றி இனி வேறொன்றும் செய்தற்கில்லை' என்று எண்ணி, இராவணனை நோக்கி, 'யான் என்ன மாயம் செய்யவேண்டும்?' என, அவன், 'நீ பொன் மானாகி உன்னைப் பிடிக்கும் ஆசை சீதையைப் பிடிக்கும்படி செய்வாயாக' என, 'அப்படியே செய்கிறேன்' என்று செப்பி விடைபெற்றுச் சென்றான். இராவணனும் வேறு வழியாக ஏகினான். ]

மாரீசன் மனக் குழப்பம்

59. வெஞ்சுற்ற நினைந்துகும் வீரரைவே
றஞ்சுற்று மறுக்குறு மாழ்குழிநீர்
நஞ்சுற்றுறு மீனி னடுக்குறுமால்
நெஞ்சுற்ற தோர்பேற்றி நினைப்பரிதால்

கொண்டுகூட்டு: (மாரீசன்) வெம் சுற்றம் நினைந்து உகும்; வீரரை அஞ்சுற்று மறுக்கு உறும்; ஆழ்குழி நீரில் நஞ்சுற்று (அதில்) உறு மீனின் நடுக்குஉறும்; (அவன்) நெஞ்சு உற்றது ஓர் பெற்றி நினைப்ப அரிது.

பொருள்: (தானாக மானாகச் சம்மதியாமல் இராவணன் ஆணைக் கஞ்சி மானாக மனமிசைந்த மாரீசன், 'இம் முயற்சியில் இறந்துபடுவேன். இனி, என்) பிரியமான உறவினரை(க் காணப் பெறுவேனோ!' வென்று அவரை) நினைந்து நிலைகுலைவான்; ('இராம லக்குமணர் என்னைக் கொன்றுவிடுவாரே' யென்று அவ்) வீரருக்கு அஞ்சி மறுக்கமுறுவான்; நீரில் நஞ்சு கலக்க, அந்நீரில் வாழும் மீன் (அந்நீரை நீங்கினாலும் நீங்காதிருந்தாலும் உயிர் போய்விடு மென்று நடுங்குதல்) போல (இராவணன் ஏவற்படி செய்தால் இராமனால் உயிர்போம், செய்யாவிட்டால் இராவணனா லுயிர்போம் என்று) நடுங்குவான். அவன் நெஞ்சு அடைந்த நிலைமை நினைத்தற்கே அரிது (என்னில், சொல்லுதற் கெளிதன் றென்று சொல்லவேண்டுமோ?)

வெம்மை - விருப்பம். வெம் சுற்றம் - விரும்புதற் கிடமான - பிரிய மான உறவினர். உகுதல் - நிலைகுலைதல். —த. அ. பெருகுதல், பெருக் கம் பெருக்கு என வருதல் போல, மறுகுதல், மறுக்கம் மறுக்கு என வரும். 'மறுக்கம்' என்பது திருவவதாரப் படலம் ௩-ம் பாட்டில் 'எற்பின் வையகம் —மறுகுறு மென்பதோர் மறுக்கம் உண்டரோ' என்பதில் வருதல் காண்க. பெற்றி - தன்மை.

'இந் நீர்நிலையை விட்டுநீங்கி வேறோர் நீர்நிலையை மேவுவோ' மெனத் தாவி அகல முடியாத நீர்நிலை என்பது குறிக்க 'ஆழ்குழிநீர்' என்று ரென்ன லாம். மீன் மாரீசனுக்கும், அது வாழ்கின்ற நீர் அவன் வாழ்கின்ற இராவண ராச்சியத்துக்கும், அந்நீரில் நஞ்சு உற்றது அவ்விராச்சியத்தில் 'மானாவாயாக' என்ற இராவணன் ஆணை உற்றதற்கும், அம் மீன் அந்த நீரை நீங்கமுடியாமை அவன் அவ்விராச்சியத்தை அகலமுடியாமைக்கும், அது நஞ்சா லிறத்தல் அவன் இராவண னாணையால் இறத்தற்கும், அதன் நடுக்கம் அவன் நடுக்கத் துக்கும் உவமை.

இதையும் அடுத்துவரும் இரண்டு பாடல்களையும் நாற்சீரும் மாச்சீ ராகிய அளவடி நான்கு கொண்ட கலி விருத்தங்களாக்கிப் படிப்பது முண்டு.

பாடபேதம்: நஞ்சுற்றுழி மீனின் நடுக்குறுவான். (ருக)

மாரீசன் பொன்மானாகிப் பிராணிகள் பின்தொடர வருதல்

[ மாரீசன், இராமன் இருந்த வனத்தையெய்தி, அளவற்ற ஒளியுற்றுப் பூமியும் ஆகாயமும் பொலிவுறச் செய்யும் பொன்மானுருவம் பூண்டு, சீதை தங்குமிடத்தைத் தேடிச் சென்றான். ]

60. கலைமான்முத லாயின கண்டவெலாம்
அலைமானுறு மாசையின் வந்தனவால்
நிலையாம்மன வஞ்சனை நேயமிலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே

கொண்டுகூட்டு: நிலையாம் மன வஞ்சனை (யுடையவரும்), நேயம் இலா(தவருமான) விலைமாதர்கண் யாரும் விழுந்தென, (அம்மானைக்) கண்ட கலைமான் முதலாயின எல்லாம், அலை (கின்ற அம்) மான் உறும் ஆசையின்

பொருள்: நிலையான மன வஞ்சகமுடைய(வரும்) நேசமில்லாத(வருமான) விலைமாதரிடத்துக் காமுகர் யாவரும் மயங்கி விழுதல்போல, அம்மானைக் கண்ட கலைமான்கள் முதலான பிராணிகள், (சீதையைத் தேடி) அலைகின்ற அந்த மான் செல்லல் உற்ற திசையில் அதனை நாடித் தொடர்ந்து வந்தன.

'கண்ட கலைமான் முதலாயின' என்பது, செய்யுளாதலால், 'கலைமான் முதலாயின கண்ட' என மாறிவந்தது. இதன் பின் இராமன் 'முறையும் முடிவும் மிலை மொய்யுயிர்' * என்னலால், 'எலாம்' என்பதற்கு முதலான பிராணிகளெனப் பொருள் கூறப்பட்டது.

முதலடிக்குக் 'கலைமான் முதலாகிய மான் வகைகளில் (இப் பொன் மானைப்) பார்த்தவைகள் எல்லாம்' என்பது முந்திய உரைகள். இரண்டாமடிக்கு, 'கடலை ஒத்த (மிகவும் அதிகமான) ஆசையுடனே வந்தன' என்றும் † '(பிராட்டியைத் தேடி) அலைகின்ற (பொன்) மானினாலே அடைகின்ற ஆசையினாலே வந்தன' என்றும் ‡ பொருள் கூறுவர்.

'கலை - ஆண் மான். இப் பொன் மான் தன்னைத் தொடர்ந்து வந்த கலைமான்கள்மேல் சிறிதும் நேயம் வையாது பொன்னின்மேல் (இலக்குமி மேல்) நாட்டமாகத் திரிந்தமையால், தம்மை விரும்பும் ஆடவர்மேல் நேயம்

* இப்படலம் உ௨ரு-ம் பாட்டு. † வை. மு. கோ. ‡ பு. ரா. க.

வையாது பொன்னையே விரும்புகின்ற வேசையை அம் மானுக்கு உவமை கூறினர்'—பு. ரா. க. 'விலைமகளிரது வஞ்சனையை அறியாமல் அவர்கள் மேனி மினுக்கையே நோக்கி அவர்களிடத்துச் சாதாரண சனங்கள் பலரும் கண்டவளவில் ஆசைவைத்துச் சேர்தல்போல, அந்தப் பொன் மானினது மாயையை அறியாமல் அதன் உடம்பின் விளக்கத்தையே நோக்கி மான்கள் பலவும் அதனைக் கண்ட மாத்திரத்தில் மிக்க ஆசைப் பெருக்கத்துடன் தொடர்ந்தன என்பதாம்'. 'தம்மிடத்து ஆசைகொள்ளும் ஆடவரிடத்து விலைமாதர் தாம் ஆசைகொள்ளாமை போலத் தன்னிடத்தில் ஆசைகொள்ளும் பிற மான்களிடத்து அப் பொன்மான் ஆசைகொள்ளாமையின், இவ்வுவமை மிகப் பொருந்தும்'. —வை. மு. கோ. (௬௦)

### அம் மானைக் கண்டு சீதை இராமனுக்குத் தெரிவிக்க இலக்குமணன் அதை மாய மான் எனல்

[ அப்போது, கொய்யாத பூவென்று கூறுதற்குரிய கையால் பூக் கொய்வாளாய்ச், சாலையினின்று புறப்பட்டுச் சோலையிலே திரிந்துகொண்டிருந்த மெய்ம்மான் போன்ற சீதை, அந்தப் பொய்ம்மானைப் பார்த்தாள். அது வஞ்சனை மானென்று நெஞ்சினுணராளாய் அதன்மேல் ஆசையுற்று, 'இதனைப் பிடித்துத் தரும்படி என் நாயகனை வேண்டுவே'னென்று, இராமனிடம் சென்று, 'ஒரு மான், காயம் முழுதும் பொன்மயமாய்க், காதுகளும் கால்களும் மாணிக்கமயமா யுள்ளது, நீ காணத் தக்கது' என, அவனும் அதனைக் காண ஆசை பூண, இலக்குமணன், 'அம் மானின் காயமானது, அதனை மாய மானென ஐயுறச் செய்கின்றது' என, இராமன் கூறுவான். ]

### இராமன் மறுத்துக் கூறுதல்

**61.** நில்லாவுல கின்னிலை நேர்மையினல்
வல்லாரு மு ணர்ந்திலர் மன்னுயிர்தாம்
பல்லாயிர கோடி பரந்துளவால்
இல்லாதன வில்லை யிளங்குமரா

**கொண்டுகூட்டு:** 'இளங்குமரா! நில்லா உலகின் நிலையை, நேர்மையினல் (நோக்க) வல்லாரும் உணர்ந்திலர். மன்னுயிர் பல்லாயிரகோடி பரந்துள. (அவற்றுள்) இல்லாதன (எவையும்) இல்லை.'

பொருள் : 'இளையோய்! நிலையாத (தன்மை ஒன்றுமட்டும் நிச்சயமாகத் தெரியப்பட்டுள்ள இந்த) உலகத்தின் (மற்றைய) தன்மைகளை நுண்மையான மதியினால் நோக்க வல்லவரும் அறிந்திலர். (உலகின் பல தன்மைகளிலே பிராணிகளையுடைமை ஒரு தன்மை. அந்தப்) பிராணிகள் பல்லாயிரகோடி வகையாக அளவின்றிப் பூமியில் எங்கும் பரந்துள்ளன. (அந்தப் பிராணி வருக்கங்களுள் நாம் மனத்தாற் பாவிக்கக்கூடிய அங்க அடையாளங்களுடைய எப்படிப்பட்ட பிராணியும் இருத்தல் இயல்வதே. ஆதலால், இன்ன அங்க அடையாளங்கள் உள்ள பிராணிகள்) இல்லாதன என்று சொல்லக்கூடியவை எவையும் இல்லை.'

நிலை - தன்மை. நேர் - நுண்மை. மன் - நிலைபெற்ற. குமரன் - இளையோன். இளங்குமரன் - மிகவும் இளையோன்.

முந்திய உரைகளில், இறுதி அடிக்கு (உலகத்தில்) 'இல்லாத பொருள்கள் இல்லை' யெனப் பிராணிகளல்லாத பிற பொருள்களையும் உளப்படுத்திப் பொருள் கூறியிருப்பது பொருந்துமாயினும், இதன்பின், இராமன் 'முறையும் முடிவும் மிலை மொய்யுயிர்' என, இந்த இறுதியடிக் கூற்றை அனுவதித்துக் கூறுதலால், மேலே கூறிய பிராணிகளை மட்டும் குறித்த பொருளே இராமன் கருதிய பொருளா மென்க.

'இளங்குமரா' என்பதில் இளமை குமாரத்தன்மை என்ற ஒரு பொரு ளிருமொழிகள் அடுக்கிவந்து இளமை மிகுதி குறித்தன. இராமன் இலக்குமணனை நோக்கி, 'நீ என்னினும் மிகவும் இளையோனாதலால், புதியன புதியனவாக இயற்கைப் பொருள்களைக் கண்ட அனுபவம் என்னினும் குறைவாக உடையாய். ஆதலால் இம் மான் இயற்கையென யா னெண்ணுகிறபடி நீ எண்ணுகின்றாயில்லை' யென்பது குறிக்க இலக்குமணனை வேறு விதமாக விளியாது, 'இளங்குமரா' வென விளித்தா னென்னலாம். (சுக)

## இலக்குமணன் விலக்கியும், சீதைக்கு அம் மானைப் பிடித்துத்தர இராமன் இசைதல்

[ இவ்வாறாக, இராமன் இலக்குமணனுடன் பேசிக்கொண்டிருக்கும்போது, சீதை, 'உங்கள் பேச்சு முடியுமளவும் அம் மான் காத்திராது, எங்கேனும் ஏகிவிடும்' என்று வருந்தச், 'சீதா! அதைக் காட்டு' என்று அவள்பின் இராமன் செல்வானானான்.

இலக்குமணன் இராமன்பின் சென்றான். இராமன் அம் மானைக் கண்டு வியந்து இலக்குமணனை நோக்கித், 'தம்பி! இந்த மான் தன்னைத் தான் ஒக்குமன்றி வேறு ஒப்பு யாதும் இல்லாதது. இதனைக் கண்ட பிராணிகள் யாவையும் விளக்கைக்கண்ட விட்டில்கள் போல இதனிடம் வந்து விழுகின்றன வென்றால், ஆடவரும் அணங்காரும் இதனை அவாவுதல் ஆச்சரியமாமோ?' என்றான். இலக்குமணன், அது நல்ல தன்றென ஐயமின்றி அறிந்து, 'இது பொன்னிறமாயிருப்பது பொன்னாகவே யிருந்தாலும், இதனால் நமக்கு ஆகவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. இதனை விட்டு யாம் நம் இருப்பிடமேகுவதே ஏற்றது' என்றான். அது கேட்ட சீதை ஆத்திரப்பட்டு, 'இதனைப் பிடித்து எனக்குக் கொடுக்கவேண்டும். நாம் அயோத்திக்குத் திரும்பியபோது, அங்கே இது அனைவரும் ஆச்சரியமடையத்தக்க அபூர்வமான விளையாட்டுப் பொருளாயிருக்கும்' என, இராமன், பிடிக்க இசைய, இலக்குமணன் தடுப்பானாய், 'இது இராக்கதர் யாதோ ஒரு வஞ்சனை செய்யக் கருதித் தந்திரமாகச் செய்துவிட்ட மாயமான். இது, ஒருகால், முன் இருகால் தப்பியோடிய* மாரீசனா யிருக்கலா மென்பது முடிவில் தெரியவரும்' என்றான்.

'அது வஞ்சனை மானானால், வாளியினால் மடித்துவிடுவோம். அதனால் அரக்கரைக் கொல்ல நாம் மேற்கொண்டுள்ள கடனைக் கழிப்போ மாவோம். அன்றேல் அதனைப் பிடித்திடுவோம்.

---

* இருகால் (இரண்டு முறை) தப்பியோடிய வரலாறுகள், 'தாடகையை இராமன் கொன்றபின மாரீசன் தனது தம்பியான சுபாகு முதலிய அரக்கர்களுடன் சென்று விசுவாமித்திருடைய வேள்விக்கு இடையூறு செய்யத் தொடங்கிய பொழுது, இராமனெய்த அம்புகளால் சுபாகுவும் மற்றை யரக்கர்களும் இறக்க, அப்பெருமான் பிரயோகித்த வாயவ்யாஸ்திரத்தால் மாரீசன் கடலிலே தள்ளப்பட்டு உயிர்கொண்டு மீண்ட வரலாறு' ம, 'தன் தாயையும் தம்பியையும் கொன்று தன மேலும் அம்பு செலுத்தித் துரத்திய காரணத்தால் இராமனிடம் பகைகொண்ட மாரீசன், பின்பு இராமன் தண்டகாரணியத்தில் பஞ்சவடி யாச்சிரமத்தில் எழுந்தருளி யிருந்தபோது, இரண்டு அரக்கர்களுடன் மான்வேடம் பூண்டு அத் தண்டக வனஞ் சேர்ந்து முனிவர்கள் ஓமஞ்செய்யு மிடங்களையும் நீராடுமிடங்களையும் கிட்டி அவர்களை வருத்திக் கொன்று தின்றுகொண்டுவருகையில், இலக்குமணனுடனும் சீதையுடனும் தவவேடங்கொண்டிருந்த இராமனைக் கண்டு, 'இவன் இப்பொழுது தவவேடம் பூண்டிருத்தலால், என்னைக் கொல்லா' னென்று கருதி அருகில் ஓடிவந்து தனது கூரிய கொம்புகளினால் இராமனை முட்டிக் கொந்திக் கொலைசெய்ய முயலுமளவில், அப்பெருமான் சினங்கொண்டு சரங்களைத் தொடுத்து விட்டதனால், இவனுடன் வந்த இரண்டு அரக்கரும் அம்புபட்டுத் தலையறுப்புண்ண, இவன் மாத்திரம் தப்பியோடி யொளித்துத் தவவேடம்பூண்டனன் என்ற வரலாறும்' ஆம்,

இவ்விரண்டு செய்கைகளில், எதுவும் தீயதன்று' என்றான். இலக்குமணன், 'இது, யான் எண்ணுகிறபடி மாயை மானானால், இதனை ஏவிவிட்டுப் பின்னின்றார் எத்தனை யிராக்கதரேனும் அவர்களெல்லாரையும் கொன்று திரும்புவேன். அன்றேல், இதனைப் பிடித்துவருவேன்' என்றான். ]

இராமன் பொய்ம்மானைத் தொடர்ந்துபோய் அதனை மாய்த்தல்

[ அப்போது, சீதை, இராமனைநோக்கி, 'நீயே பிடித்துத் தரல் வேண்டும்; தாராய்போலும்' என்று தாரைதாரையாகக் கண்ணீர் வடித்தாள். உடனே, இராமன், 'இலக்குமணா! நானே போய்ப் பற்றி வருவேன். நீ இவளைப் பர்ணசாலைக்குக் கூட்டிப் போய்ப் பாதுகாத்துக் கொண்டிரு' என, அவன் அவ்வாறு செய்வானாக, இராமன் பொய்ம்மானைத் தொடர்ந்துபோனான்.

அது அதிவேகமாக ஓடியது. அவன் விரைந்து நெருங்கியபோதெல்லாம் மிகு வேகமாக ஓடியும், சற்றுப் பிந்தியபோதெல்லாம் தாழ்த்து நின்றும், (அவனை இராவணன் கருத்துக்கிசைவாகச் சீதையைவிட்டு நெடுந்தூரம் செல்லச் செய்துகொண்டு)சென்றது. இவ்வாறு செல்வதைக் கண்டு, 'இதன் தோற்றமும் தொழிலும் ஒற்றுமையுடையன அல்ல; வேற்றுமையுடையன; இது இராக்கதர் மாயமே; இதனை இலக்குவன் முன்னமே அறிந்தான்; யான் இப்போதுதான் தெரிந்தேன்' என்றெண்ணினான். அவ்வாறு அவன் எண்ணிய குறிப்பறிந்து, அம்மான், 'இனி இவன் என்னைப் பிடிக்க முயலான், மடிக்க முயல்வான்' என்று தப்ப எண்ணி மிக்க வேகமாக ஓடியது. உடனே இராமன் அம்பை அதன்மேல் விட, அதுபட்டு இறக்கும்போது மானாக வந்த மாரீசன், 'சீதா! லக்குமணா!' என்று, இராமன் குரலாகச் சத்தமிட்டுச் செத்து வீழ்ந்தான். ]

இறந்தது மாரீசனென்றறிந்து, இராமன் விரைந்து திரும்புதல்

[ அதுகண்டு, தம்பியின் அறிவை வியந்து, இறந்துவீழ்ந்த வடிவத்தை நோக்கி மாய மானாக வந்தவன் மாரீசனென்று தெரிந்தான். 'இவன் என் குரலால் சீதா லக்குமணரை விளித்

திறந்தான். இக் குரல் கேட்டுச் சீதை வருந்துவாளே!' என்று சிந்தை நொந்து, செத்தவனை மாரீசனென்று தெரிந்த இலக்குமணன் உண்மை உரைத்துச் சீதையைத் தேற்றுவானென்று தேறி, 'இவன் இறப்பதே கருத்தாக வந்திரான், இதற்கு ஏதோ ஒரு சூழ்ச்சி அடிப்படையாக இருக்கின்றது. அதனால், கெடுதி விளையுமுன் விடுதிக்குத் திரும்புவோ' மென்று விரைந்து திரும்பினான். ]

—சூழு—

## 8. சடாயு உயிர்நீத்த படலம்

[சடாயு உயிர்விட்டதைக் கூறுவது] *

### கூக்குரல் கேட்ட சீதை இலக்குமணனைக் கோபித்துக் கூறல்

[ மாய மானான மாரீசன் இறக்கும்போது இராமன் குரலாற் கதறியதைச் செவியுற்ற சீதை, அக்குரல் இராமனுடையதே யென்று எண்ணி, அவன் அபாயம் அடைந்தா னென்று பூமியில் விழுந்து புரண்டு, 'பாவியேன், "இம் மானைப் பிடித்துத்தா" என்று என் வாழ்வை முடித்துவிட்டேன்' என்று அலறியழுதாள். இறந்தது இராக்கதனே என்று தெரிந்ததனால் வருந்துதலேயில் லாமல் வாளாநின்ற இலக்குமணனை நோக்கி, 'எங் கோமான் அபாயமுற்றா னென்றறிந்தும் உதவிசெய்ய ஓடாமல் நிற்கின் றாயே!' என்று கோபித்துக் கூறினாள். ]

### இலக்குமணன் சீதைக்குத் தேறுதல் கூறுதல்

[ 'இராமன் பெருமையை நீ பெண்தன்மையால் அறிந்தா யில்லை. அவன் ஆற்றென் றறியாமல் அல்லலுறுகின்றாய். எல்லா

* 'இவர், இராவணனோடு எதிர்த்துச் செய்யும் போரில் அடிபட்டு இறகொடிந்து வீழ்ந்த உடனே இறந்திடாமல், இராம லக்குமணர்க்குச் செய்தியை அறிவித்த பின்னரே இறக்கக் கருதிச் சிறிதுபொழுது அரிதின் உயிர்தாங்கியிருந்து, அச் செய்தியை அவர்கட்குக் கூறியபின்னரே உயிரை விடுதலால், இப்பகுதிக்குச் 'சடாயு உயிர்நீத்த படலம்' என்று பெயரிட்டார். விராதன் வதைப் படலம், சரபங்கர் பிறப்புநீங்கு படலம், கரன் வதைப் படலம், மாரீசன் வதைப் படலம், சடாயு உயிர் நீத்த படலம், சவரி பிறப்புநீங்கு படலம் என இவ்வாறு நூலாசிரியர் படலங்களுக் குத் தக்கவாறு பெயர் நாட்டும் நயம் நன்குமதிக்கற்பாற்று.'—வை. மு. கோ.

உலகங்களுக்கும் இறைவனே அவன். அவனுக்கு அபாயம் ஒரு காலும் அணுகாது. அணுகியிருந்தால் அகில உலகமும் அழிந்திருக்கும். அவனுடைய அம்புபட்டு இறக்கும் அரக்கன் மரிக்கும் போது அரற்றிய வஞ்சகக் குரலே நாம் கேட்டது. அஞ்சாதிருப்பாயாக' என்று இலக்குமணன் இயம்பினன். ]

சீதை 'சேத்துவிடுவேன்' என, இலக்குமணன் இராமனிடம் ஏகுதல்

[ சீதை சிறிதும் தேறுளாய்த், திரும்பவும் சினந்து, 'எங்கோனோடு ஒருநாட் பழகினோரும் அவனுக்காக உயிரைக் கொடுப்பார்கள். நீ அவன் ஆபத்தடைந்து அலறியதைக் கேட்டும் மனங் கலங்காமல் வாளா நிற்கின்றாய்! அதோ எரிகின்ற காட்டுத் தீயிலே விழுந்து இறந்துவிடுவேன்!' என்று கூறிச், செந்தாமரை நிறையப் பூத்த தெண்ணீர்த் தடாகத்துக்குச் செல்லும் அன்னம்போல, அத்தீயிலே பாயப் புறப்பட்டாள். அப்போது, 'நீ இறப்பாளேன்! நீ சொல்லியபடியே செல்லுவதனால் உனக்கு அபாயம் நேருமென் றஞ்சினே னன்றி, உன் கட்டளையைக் கடக்கக் கருதினே னல்லேன். இதோ ஏகுகின்றேன். இது விதியின் செயல்; அதனை வெல்ல வல்லே மல்லேம். நீ தனிமை யுறுகின்றாய். ஆபத்து நேரப்போகின்றது!' என்று சொல்லிவிட்டு இலக்குமணன் சென்றான். 'யான் இங்கே யிருந்தால் இவள் இறந்துவிடுவாள். ஏகினால் இவளுக்கு இடையூறு எய்தும். இந்தத் தருமசங்கடத்தினின்று தப்புதற்கு ஒரே வழி யுள்ளது. அது உயிரை விடுதலே. இவள் ஆவி அழியவில்லையானால், தீது நேர்ந்தாலும் தீர்க்கலாம். அதற்கு யான் உயிர்விடா திருந்தால் உதவுவேனாகலாம். ஆதலால், இவளை இறக்கவிடுதலினும் இருக்கவிட்டு, யான் இறவாது ஏகுதலே ஏற்றதாம். ஒருகால் தீங்கு நேர்ந்தால், சடாயு கண்டு காத்துக்கொள்வான்' என்று சிந்தித்துத் தேறுதலுற்று, இலக்குமணன் இராமனிடம் ஏகினன். ]

இராவணன் விருத்த சந்நியாசி வேடங் கொள்ளல்

[ சீதை தனிமையுறுஞ் சமயம் பார்த்திருந்தவனை இராவணன், விருத்த சந்நியாசி வேடங்கொண்டு, உணவில்லாமல் உலர்ந்து வற்றிய உடலும், நெடுந்தூரம் நடந் திளைத்த வருத்தமும் உடையவனானான். ]

**62.** பூப்போதி யவிழ்ந்தன நடையன் பூதலம்
தீப்போதிந் தாமென மிதிக்குஞ் செய்கையன்
காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்
மூப்பெனும் பருவமு முனிய முற்றினன்

கொண்டுகூட்டு: *பூ பொதி அவிழ்ந்த அன்ன நடையன், பூதலம் தீ பொதிந்தது ஆம் என மிதிக்கும் செய்கையன், காப்ப(தற்க)ரும் நடுக்கு உறும் காலன் கையினன், மூப்பு எனும் பருவமும் முனிய முற்றினன்.*

பொருள்: *அரும்பு பூவாக அவிழுந் தருணத்தில் மெல்ல விரிதலால் இதழ்கள் இடம் பெயர்ந்தாற்போன்ற தாமத நடையுடையனாய்த், தரை நெருப்பினால் மூடப்பட்டதாமென்று (நினைப்போர் அதன்மேல் அஞ்சி மிதித்தல் போலக்) கால் அழுந்தாமல் மிதிப்பவனாய்த், தடுக்க முடியாத நடுக்க முடைய (தலை,) கால், கையுடையனாய், (மூப்படைந்த தன்னைக் கண்டோர் வெறுப்ப தல்லாமல்,) அந்த மூப்புப் பருவமே வெறுக்கும்படி மிகவும் முதிர்ந்தவனாய்(ச் சீதை யிருந்த பர்ணசாலை யருகே சென்றான்).*

*பொதி - அரும்பு. காத்தல் - தடுத்தல். முனிதல் - வெறுத்தல். முற்றுதல் - முதிர்தல்.*

*'முன்னிரண்டடியிற் கூறிய குறுநடையும் குந்தி மிதித்துச் செல்லுதலும் அந்தணர்க்குரிய இயல்பு. தொல்காப்பியப் பொருளதிகார உரையில், "பார்ப்பாராயின் குந்திமிதித்துக் குறுநடைகொண்டு வந்து தோன்றலும், அரசராயின் எடுத்த கழுத்தோடும் அடுத்த மார்போடும் நடந்துசேரலும்" என உரைத்தலுங் காண்க'.* —வை. மு. கோ.

*இதற்கு முந்திய பாட்டில் 'ஊனிலனாமென உலர்ந்த மேனியன்' என்றது தணிகைப் புராணம் களவுப் படலத்தில் (கஉஎ-ம் பாட்டில்), வாயால் ஊதும் சிறு காற்றையுந் தாங்கி நிலைநிற்க மாட்டாது சருகுதிர்ந்து வீழ்தல் போல வீழ்ந்துவிடும்படி மெலிந்து வெகு லகுவான மேனியுடையானென்று பொருள்படும் 'ஊத உகுவான்' என்ற பொருள் பொதிந்த சொற்றொடரை நினைப்பூட்டுகின்றது.*

*இந்தப் பாட்டின் முதல் மூன்றடியும், ஷெ புராணம் ஷெ படலத்தில் (கஉரு-ம் பாட்டில்)*

> *கைத்தசை கவுட்டசை கழற்றசைகள் தூங்க*
> *மெத்திய சழங்கலுடை வீழ்ந்துநடை தட்பத்*
> *தத்தடி யிடுங்கழல் தளர்ந்து தடுமாற*
> *ஓத்தகர் ணேடுதலை யுங்குலை குலைப்ப*

என வருவதுடன் (௯௨௭-ம் பாட்டில்) 'மேதினி அளப்பவரின் மென்மெல நடந்து' என வருவதையும், 'மூப்பெனும் பருவமும் முனிய முற்றினன்' என்ற இறுதியடி, க. ரா. சா. பாலகாண்டம் வேள்விப் படலத்தில் (70-ம் பாட்டில்) 'பயந்தவர்களும் இகழ் குறளன்' என வருவதையும் நினைவுறுத்துகின்றன.

பாட பேதம் : குடையன். (௬௨)

இராவணன் சீதையின் அழகைப் பார்த்து வியந்தல்

[ இராவண சந்நியாசி பர்ணசாலை வாயிலிற் சென்று நின்று, 'இங்கே யிருக்கின்றவர் யார் ?' எனச், சீதை அவனை உண்மைச் சந்நியாசி யென்றுன்னி, 'உள்ளே வருக' என்றுரைத்துக்கொண்டு எதிரே வரக் கண்டு, அவன் அகத்தினுள்ளே ஆசைக்கடல் ஆர்த்தெழுந்து அலைமோதிப் பொங்கிப் புரண்டு பெருகா நிற்கத், தேவமாத ரழகினுஞ் சிறந்து தூக்கநிலையினும் சொலிக்கும் அவள் அழகை நோக்கித், தீவிய தேனை விரும்பி அருந்தும் ஈக்களின் கூட்டம் போல, இருபது கண்களின் ஈட்டம் களிக்க, இதயங் களித்து, 'இவள் எழிலை இனிது காணுதற்கு எனக்கு இமையாத கண்கள் எண்ணிறந்தன இல்லை, இமைக்குங் கண்கள் இருபதே இருக்கின்றன' வென்றும், 'இவள் இன்பக்கடலில் இனிது ஆடித் திளைத்தற்கு யான் பெருந்தவம் புரிந்து பெற்றுள்ள மூன்றரைக் கோடி ஆயுள் முழுவதுமே போதாது' என்றும் எண்ணினன். ]

**63.** உளைவுறு துயர்முகத் தொளியி தாமெனின்
முளையெயி றிலங்கிடு முறுவ லென்படும்
தளையவிழ் குழலிவட் கண்டு தந்தவென்
இளையவட் களிப்பனென் னரசென் றெண்ணினன்

கொண்டுகூட்டு : '(இவளது) உளைவு உறு துயர்முகத்து ஒளி இது ஆம் எனின், முளை எயிறு இலங்கிடும் முறுவல் என்படும்! தளை அவிழ் குழல் இவளைக் கண்டு தந்த என் இளையவட்கு என் அரசு அளிப்பன்' என்று எண்ணினன்.

பொருள் : 'இவளது துக்கமுகப் பொலிவே இப்படிப்பட்ட இனிமைவாய்ந்த தென்றால், (சிறிது வெளிப்பட்டுத்) தோன்றும்

(வெண்) பல் விளங்கும் புன்னகை பொருந்திய சந்தோஷ முகப் பொலிவு என்ன இனிமையுடையதா யிருக்கும்! இவளை நாடிக் கண்டுபிடித்துக் காட்டிக்கொடுத்த என் தங்கைக்கு என் இராச்சி யத்தை ஈவேன்' என் றெண்ணினன்.

உளைவு - மனவருத்தம். உறு - உற்ற; மிக்க. முளைத்தல் - வெளிப் பட்டுத் தோன்றல். —தி. அ. எயிறு - பல். முறுவல் - சிரிப்பு.

தளை அவிழ் குழல் - (சூட்டியிருக்கிற பூமாலையினது மலர்தருணத் தரும்புகளின் இதழ்கள்) கட்டு(ண்டாற்போல ஒன்றோடொன்று இறுகப் பொருந்தி யிருந்தமை நீங்கிப் பிரிந்து விரிந்து) அவிழ்ந்த கூந்தல். 'இராம னுக்கு வருத்தம் நேர்ந்ததாக அறிந்ததனாலாகிய சோகத்தால், சீதை, குழல் சோர நின்றனளென்பதுபடத் "தளை அவிழ்குழல்" என்றதாகவுங் கொள்ளலாம்.' 'சீதையைத் தான் பெறுதல் நிச்சயமென்ற துணிவினால் "தந்த" என்றான்.'—வை. மு. கோ.

முன்னிரண்டடிக் கருத்தும் பின்னிரண்டடிக் கருத்தும் ஆகிய இரு வகைக் கருத்துக்களும் அருமையினு மருமையாய் இனிமையினு மினிமை யாய் அமைந்திருத்தல் நுணுகி நோக்கி நுகரத்தக்கது. (௬௩)

## சீதா ராவண சம்வாதம்

[ சீதை கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, 'இங்கே வருக, இந்த இருக்கையில் எழுந்தருள்க' என, இராவணன் இருந்தான். இருந்தபோது, அவனைக் கண்டு அஞ்சி மலைகளும் மரங்களும் நடுங்கின; பறவைகளும் மிருகங்களும் குரலடங்கின; பாம்புகள் படங்க ளொடுங்கிப் பதுங்கி யொதுங்கின.* அவன், 'இங்கே வசிக்கும் முனிவர் யார்? நீர் யார்?' என, அவள், 'தசரத சக்கர வர்த்தி தநயன், தாய் சொல்லைத் தலைமேற்கொண்டு, தவவேடம்

* இராவணன் சீதையைக் கவரும் தீவினை நிகழ்தற்கு முன் உற்பாதமாக இந்தச் சுபாவாதீத சம்பவங்கள் நிகழ்ந்தனவாகக் கவிச்சக்கரவர்த்தி கூறியது, விவிலிய நூல் கூறும் ஆதிமக்கள் முதற்கட் பாவஞ்செய்தபின் உற்பாதமாக நிகழ்ந் தனவாக மிலிட்ட (Milton) மஹாகவி கூறியிருப்பவைகளை ஞாபகமுறச் செய்கின் றது. அவை வருமாறு:— 'அதை (ஆதி மாது கடவுளால் விலக்கப்பட்ட மாத்துக் கனியைத் தின்று பாவஞ்செய்ததை)ப் பூமி வெட்டுண்டது போல அறிந்தது, இயற்கை (பிரகிருதி) பெருமூச் செறிந்து வியாகுல சின்னங்களை வெளியிட்டது. (சுவர்க்க நீக்கம் ௫௱-ம் பக்கம்). (அக்கனியை ஆதி மனிதனும்) அருந்தவே, பூமி விசனோபாதி அடைந்து குடல் கலங்கி உடல் நடுங்கியது. இயற்கை (Nature) இரண்டாமுறை ஏங்கி விம்மிப் பெருமூச் செறிந்தது. மாணகாரணமான ஆதிப் பாவம் முற்றுப்பெற்றதைக் கண்டு, ஆகாயம், தாழ்ந்து இடிக் குமுறலால் முணு முணுத்துப் புலம்பிச் சில துக்க நீர்த்துளிகள் சிந்தியது'.

தாங்கி இங்கே தங்கியிருக்கின்றான். அவன் பெயரை அறிவீர்' * என்றாள். அவன் 'நீர் யார் மகள்?' எனச், 'சனகன் மகள்' என்று சாற்றி, 'எங்கிருந்து இங்கு வந்தீர்?' என்றாள். அவன்,

'இந்திரன் றனக்கும் ஏற்றமாம் இந்திரன்;
மன்மதன் றனக்கும் வனப்பாம் மன்மதன்;
பிரம தேவன் பெருங்குலத் துதித்தோன்;
மூன்றுல கத்தையும் முறைமையோ டாள்வோன்;
நான்கு வேதமும் நவிலும் நாவான்;
வலியஎண் திசைக்கரி மருப்பொடி மார்பான்;
ஈசுரன் கயிலையை எடுத்த தோளான்;
அப்பரன் அருளிய திப்பிய வாளான்;
எண்ணிய எண்ணிய யாவும் ஈயக்
கற்பக தாருவும் காம தேனுவும்
கட்கடை நோக்கிக் காத்து நிற்பவன்;
ஏவல் புரிபவர், தேவர் தேவியர்;
திண்கால் வருடல் செருப்பினை இடுதல்
அடைப்பை ஏந்த லாம்பணி செய்பவர்
மேனகை யாதிய வானக மாதரார்;
பிரமன் உதவிய பிரபல வரபலம்
கொண்டவன்; மூன்றரைக் கோடியாம் ஆயுளான்;
எந்நகர்ச் செல்வமும் தன்னகத் தெய்திச்
சந்திர சூரியர் சாய்ந்தொதுங் கிச்செலும்
மேம்பா டெய்திய வியன்நகர் அவன் நகர்;
எவ்வுல கமும்உள ஏழையர் யாவரும்
தன்னைவேட் டுருகித் தவியா நிற்ப,
அன்னவ ரெவர்க்கும் அருளா னுய்த்தன்
மனத்துக் கினியஓர் மாதினை நாடுவான்:
அனையவன் வீற்றிருந் தரசாள் நகரில்
இருக்கும் விருப்போ டிருந்தேன் சிலநாள்;
திரும்பி யிவ்விடம் சேர்ந்தேன் அணங்கே!'

என்று சூழ்ச்சியாகப் பிறன் கூறுவதுபோலத் தன் மேம்பாடுகளை யெல்லாம், தன் பெயரையும் தன் நகர்ப்பெயரையும் வெளியிடாமற்

* 'கணவன் பெயரைக் கூற லாகாதென்பது முறைமையாதலால், 'அன்னவன் பெயரினைத் தெரிகுதிர்' என்றாள்'.

கூறி, அவள் தன்பாற் சிரத்தையுடையவளாகித், தன் பெயர் யாது? தன் நகர்ப் பெயர் யாது? என்று கேட்டால் அவள் தன் வசப்படுமாறு மேற்கொண்டு கூறத்தக்கன கூறக் கருதியிருந்தான்.

அப்போது, அவள், 'மாதவர் வாழும் வனத்தில் வாழாமல், பாதகர் இருக்கும் பதியிலேன் இருந்தீர்?' என்றாள். அவன், 'இராக்கதர், தேவரினும் தீயோரல்லர்; எம்போலியர்க்கு நல்லவர்' என்றான். அவள், இராக்கதர் மாயையால் வேண்டிய உரு எடுப்பரென்பதை அறியாளாதலால், அவனை அரக்கனென ஐயப் படாமல், 'தீயவரைச் சேர்ந்தவர் தீயவராவார்' என்றாள். அவன், தன்பாற் சந்தேக முற்றாளென் றுன்னி, அதனை மாற்ற எண்ணி, 'ஆற்றல் மிகுந்த அரக்கரை அநுசரித்தலன்றி மூப்புவன வாசிகளுக்கும் தப்பும் வழி யாது?' என்றான். 'இராகவனால் இராக்கதரெல்லாரும் இறப்பர். பின்பு உலகுக்குத் துன்பம் இல்லை' என்றாள். 'அற்ப மனிதர் அரக்கரைச் செயிப்பரென்றால், ஆனையை முயல் கொல்லும்; சிங்கத்தை மான் கொல்லும்!' என்றான். 'விராதன் கரன் முதலிய இராக்கதரைக் காகுத்தன் கொன்றதை அறியீரோ? அவனால் இலங்கையிலுள்ள எல்லா இராக்கதரும் இறத்தலையும் இமையோர் சிறத்தலையும் நாளையே பார்ப்பீர்!' என்றாள். எனவே, கோபித்து, 'வில்வலிமை குறைந்த விராதன் முதலியோரை மனிதர் கொன்றார் என்றாய். அந்த அற்ப மனிதப் பஞ்சுகள் இராவணனது இருபது திண்டோட் பெருங்காற்றுக்கு எதிர்நிற்ற லாற்றாமற் பறந்தோடி யொழிந் தழிந்துபோம். இராவணன் செய்தற் கரியது யாது? அவனை ஆரென் றெண்ணினாய்? அவனா லாகாத தொன்றுமின்று' என்றான். 'மக்களைக் காட்டிலும் மிக்க தோள்களிருந்தால், வல்லமையுண்டோ? அந்த இலங்கை வேந்தனைச் செயித்துச் சிறையிலிட்ட கார்த்தவீரியார்ச்சுனனது ஆயிரந் தோள்களை அறுத்தெறிந்தவன் இருதோளுடைய ஒரு மானுடன்தானே!' என்றாள். ]

அவனது சந்நியாசி வேடம் தானே நீங்கல்

**64.** என்றவ ளுரைத்த லோடு மெரிந்தன நயனந் திக்கிற்
சென்றன திரடோள் வானந் தீண்டின மகுடந் திண்கை
ஒன்றேடொன் றடித்த மேகத் துருமென வெயிற்றி னொளி
மென்றன வெகுளி பொங்க விட்டது மாய வேடம்

கொண்டுகூட்டு : என்று அவள் உரைத்தலோடும், (இராவணன்) நயனம் எரிந்தன ; திரள் தோள் திக்கில் சென்றன ; மகுடம் வானம் தீண்டின ; திண்கை ஒன்றோடு ஒன்று அடித்த ; மேகத்து உரும் என்ன எயிற்றின் ஒளி மென்றன ; (இவ்வாறு) வெகுளி பொங்க, மாய வேடம் விட்டது.

பொருள் : என்று சீதை சொன்ன மாத்திரையே, இராவணன் கண்கள் கோபத் தீயெழச் சுவாலித்தன ; (இயல்பிலேயே) திரட்சி(யாய்ப் பருமை)யான தோள்கள் கோபத்தாற் பூரித்துப் புடை பருத்துத் திக்குகளில்(முட்டச்செல்வன போலச்) சென்றன; கோபக் கிளர்ச்சியினால் நிமிர்ந்துயர்ந்த தலைகளின்மீதுள்ள கிரீடங்கள் ஆகாயத்தைத் தொட்டன ; கைகள் ஒன்றையொன்று அறைந்து கொண்டன ; இடி முழக்கம் போலப் பேரொலி யுண்டாகப் பல் வரிசைகள் (நெறுநெறென ஒன்றோடொன்று கடிது உரைசிக் ) கடித்தன ; (இவ்வாறு இராவணன் கோபங்கூர்ந்து வசமிழக்கவே, அவன் கொண்டிருந்த) மாயச் சந்நியாசி வேடம் நீங்கியது; (அவன் அதனை நீக்க நினையாமல் அது தானே நீங்கியதென்றபடி).

உரும் - இடி. எயிறு - பல். ஒளி - வரிசை. வெகுளி - கோபம்.

திடீரெனத் தோன்றிய இராவணனது கோபமிகுதியால் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் (உடல் உறுப்புக்களின் செயலும் தோற்றமும்) நன்றாக வருணிக்கப்பட்டிருத்தல் நன்கு மதிக்கத்தக்கது. 'விட்டது மாய வேடம்' என்ற சிறுத்த வாக்கியம் குறித்த பொருளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் புலப்படுத்தப் பொருத்தமாய் நன்கமைந்திருக்கும் நயம் மிக்க களிப்பை விளைப்பது.

பாட பேதம் : என்றிவள். (கூச)

அவன் சுயருபத்தோடு தோன்றல்

இருவினை துறந்த மேலோ ரல்லன்கோ லிவனேன் றெண்ணி
அரிவையு மைய மெய்தா வாரிவன் றுனேன் றேன்றும்
தெரிவரு நிலைய னாகத் தீவிடத் தரவந் தானே
உருகெழு சீற்றம் பொங்கிப் பணம்விரித் துயர்ந்த தொத்தான்

கொண்டுகூட்டு: அரிவை, 'இவன் இருவினை துறந்த மேலோர் அல்லன் கொல்!' என்று எண்ணி ஐயம் எய்தா, 'இவன் ஆர்?' என்று, ஒன்றும் தெரிவ(தற்க)ரும் நிலை(மை)யளாக, (இராவணன்) தீவிடத்து அரவம், உருகெழு சீற்றம் பொங்கிப் பணம் விரித்து உயர்ந்தது ஒத்தான்.

பொருள்: (வேடம் விலகியதைக் கண்ட) சீதை, '(நாம் இதுவரை எண்ணியபடி) இவன் பெரியோர்களுள் ஒருவர் அல்லன் போலும்!' என்று எண்ணிச் சந்தேகம் அடைந்து, 'இவன் பெரியா ரொருவ ரல்லனாயின், வேறு யாவன் ஆக இருக்கலாம்?' என்று தெரியமாட்டாத நிலைமையுடையவளாக,(த் திகைத்துக் கொண்டிருக்கும்போது, இராவணன்,) கொடிய விஷத்தையுடைய பாம்பு கோபங்கூர்ந்து படத்தை விரித்து உயர்த்திக்கொண்டு, நிமிர்ந்து மேலெழுந்ததை ஒத்தான். (தன் சொந்த வடிவம் தோன்ற இருக்கையைவிட் டெழுந்து நின்றானென்றபடி).

இருவினை - நல்வினை தீவினைகள் - பாவ புண்ணியங்கள். அரிவையும் என்பதில் உள்ள உம்மை வேறு பொருளின்றிச் செய்யுளிசை நிறைத்து நின்றது. உரு - அச்சம். கெழுதல் - கெழுமுதல் - பொருந்தல். உரு கெழு சீற்றம் - (கண்டோர்) அச்சமுறும் கோபம்.

இரு வினைகளில் எதனைச் செய்தாலும் அதன் பயனை அநுபவித்தற் குரிய பிறவியுறுதல் பற்றிப், பிறப்பை நீக்கி வீடடைய விரும்பும் பெரியோர் தீவினையைச் செய்யாது விலக்குதல் போல நல்வினையையுஞ் செய்யாது விலக்குதல் கருதி, 'இருவினை துறந்த மேலோர்' என்றாள்.

'பல தலைகளையுடைய பாம்பொன்று சீறித் தனது படங்களை விரித்துக்கொண்டு நிமிர்ந்து நின்றாற்போல, இராவணன் கோபித்துத் தனது பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் பரப்பி வெளிக்காட்டிக்கொண்டு எழுந்து எதிர் நின்றனன் என்பதாம். கீழ் (௫௩-ம் கவியில்) 'ஆமையினிருக்கையன்' என்றதனால், தனது பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் வேண்டியபடி அடக்கி வந்தமை கூறியவர், இங்கு அவற்றை வெளிப்படுத்தியமை கூறினார்.'—வை. மு. கோ.

பாட பேதம்: அல்லர்கொல் இவர்: ஆர்இவர் தாம். (௬௫)

### அப்போது சீதை ஆவி குலைதல்

**66.** ஆற்றவெந் துயரத் தன்னா ளாண்டுற்ற வலக்க ணோக்கின்
ஏற்றமேன் னினைக்க லாகு மெதிரேடுத் தியம்ப லாகும்
மாற்றமொன் றில்லை செய்யும் வினையில்லை வரிக்க லாகாக்
கூற்றம்வந் துற்ற காலத் துயிரேனக் குலைவு கொண்டாள்

கொண்டுகூட்டு: *ஆற்ற வெம் துயரத்து அன்னாள் (சீதை), ஆண்டு உற்ற அலக்கண் நோக்கின் (அதனினும்) ஏற்றம் என் நினைக்கலாகும்? (அதற்கு) எதிர் (என்) எடுத்து இயம்பலாகும்? (அவள் சொல்லக்கூடிய) மாற்றம் ஒன்றுமில்லை; (செய்யக்கூடிய) வினை (ஒன்றும்) இல்லை. வரிக்கல் ஆகாக் கூற்றம் வந்து உற்ற காலத்து உயிர் என்னக், குலைவு கொண்டாள்.*

பொருள்: *(இராமன் அபாயமுற்றானென்ற எண்ணத்தால் முன்னமே) மிகக் கொடிய துன்பத்தையுடையளாயிருந்த சீதை, (இடிமேல் இடிபோலத் துன்பத்துக்குமேல் துன்பம் உண்டாக, நல்ல பூமாலை பொல்லாத பாம்பானாற் போலப் பரம சாதுவான சந்நியாசி மிகக் கொடிய இராவணனான) அந்தச் சமயத்தில் அடைந்த துன்பத்தை ஆராய்வுற்றுப் பார்த்தால், அதனினும் அதிகமான துன்பமாக எதனை (= எந்தத் துன்பத்தை) நினைத்தல் கூடும்? (நினைக்கக் கூடிய துன்பம் எதுவும் இல்லை யென்றபடி. அதிகமான துன்பம் இல்லாமை கிடக்க,) சமமான துன்பமாகத் தான் எதனைச் சொல்லுதல் கூடும்? (சொல்லக்கூடிய துன்பமும் ஒன்றும் இல்லை யென்றபடி. அவனைக் கண்டு திடுக்கிட்டுப் பிரமித்திட்டதனால், அவளுக்குப் பேசக் கூடிய) வார்த்தை ஒன்றும் இல்லை ஆயிற்று; செய்யக்கூடிய செயலும் ஒன்றும் இல்லை ஆயிற்று. நமன் வந்தடுத்தபோது நடுங்கும் உயிர்போல நடுக்க மடைந்தாள்.*

'*ஆற்ற*' என்பது '*அமிழ்தினும் ஆற்ற*' (—குறள். ௬௪) என்பதிற்போல '*மிக*' என்னும் பொருட்டு. '*துயரத்தன்னாள்*', இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை; துயரத்தை உடைய அன்னாளென விரியும். ஏற்றம் - அதிகம். '*என்*' என்பது '*என்னுடையரேனும்*' (—குறள் ௪௩௦) என்பதிற்போல '*எதனை*' யென்னும் பொருள் பயந்து நின்றது. எதிர் - ஒப்பு. வரித்தல் - கட்டல்; விரும்பல்.—இ. அ. குலைவு - நடுக்கம்.

'*ஏற்றம் என் நினைக்கலாகும்? எதிர் (என்) எடுத்தியம்பலாகும்?*' என, ஏற்றம் என்பதன் பின்னுள்ள என் என்பதை எதிர் என்பதன் பின்னுங் கூட்டிப் பொருள் கூறப்பட்டது. சீதை உற்ற துன்பத்தினும் பெரிதான துன்பம் நினைத்தற் கரிதென்பார், '*ஏற்றம் என் நினைக்கலாகும்?*' என்றார். அத் துன்பத்துக்குச் சமமான துன்பம் ஒருகால் நினைக்கக்கூடு மாயினும் சொல்லக் கூடாததென்பார் '*எதிர் (என்) எடுத்தியம்பலாகும்?*' என்றார். இவ்வாறு '*எதிரெடுத்தியம்பலாகும்*' என்பதை இரண்டாம் அடியின் முற்பாதியுடன் சேர்த்துப் பொருள் கூறாமல், மூன்றாம் அடியில் வரும்

'மாற்றமொன்றில்லை செய்யும் வினையில்லை' என்பவற்றோடு தொடர்படுத்தி 'அவனெதிரிலே நின்று தைரியத்தோடு எடுத்துச் சொல்லத்தக்க தொரு வார்த்தையு மில்லை; (அவனை விட்டுத் தப்பிப் போதற்காகச்) செய்யத்தக்க தொரு செயலு மில்லை' என முந்திய உரைகாரர் பொருள் கூறியிருத்தல் காண்க.—வை. மு. கோ.

எவருயிரையும் அவர் ஆயு ளிறுதியில் தன் காலபாசத்தாற் கட்டுத லன்றித் தான் எவராலும் கட்டப்படாத இயம னென்பார், 'வரிக்கலாகாக் கூற்றம்' என்று ரெனலாம்: விரும்பக் கூடாத – வெறுக்கத்தக்க – இயம னெனப் பொருள் செய்தலுமாம். 'வரித்தல்' என்பதற்கு, அதன் பொரு ளான கட்டுதலின் பொருளான 'தடை செய்தல்' என்பதைத் தாற்பரியப் பொருளாகக் கொண்டு 'வரிக்கலாகாக் கூற்றம்' என்றதற்குத் 'தடுக்க வொண்ணாத யமன்' என முந்திய உரைகாரர் இருவரும் பொருள் கூறி யிருக்கின்றனர். 'மதிக்கலாகாக் கூற்றம்' என்ற பாடத்துக்கு '(இவ்வள வென) வரையறுக்க முடியாத (வலிமையுங் கொடுமையுமுடைய) யமன்' எனப் பொருள்கொள்ளலாம்.

சீதையின் துன்பமும் நடுக்கமும் மிக உருக்கமாக நம் கண்ணெதிர் கண்டாற்போலப் புலப்படும்படி வருணித்திருக்கும் கவிநயம் நன்கு மதிக்கத் தக்கது.

பாட பேதம்: மதிக்க லாகாக் கூற்றம். (கூகூ)

இராவணன் சீதையைப் பயத்தாலும் நயத்தாலும் வயமாக்க முயலல்

[ இராவணன் குலைகுலைந்துகொண்டிருந்த சீதையை நோக் கித், 'தேவர்களை ஊழியர்களாகும்படி செயித்திருக்கின்ற என் னுடைய வல்லமையை மதித்தாயில்லை. அற்ப மனிதரை ஆற்றல் மிக்கவரென்றாய். இப்படிச் சொல்லிய நீ பெண்பா லாதலாற் பிழைத்தாய். அன்றி, நீ இறந்தால் யான் இறவா தொழியே னாதலால், உன்னைக் கொல்லாது விட்டேன்' என்றான். ]

**67.** குலைவுற லன்ன முன்னம் யாரையுங் கும்பி டாவென்
தலைமிசை மகுட மென்னத் தனித்தனி யினிது தாங்கி
அலகில்பூ ணரம்பை மாத ரடிமுறை யேவல் செய்ய
உலகமீ ரேழு மாளுஞ் செல்வத்து ளுறைதி யென்றான்

கொண்டுகூட்டு : 'அன்னம்! குலைவுறல்! முன்னம் யாரையும் கும்பிடா என் தலைமிசை மகுடம் என்ன (உன்னைத்) தனித்தனி இனிது தாங்கி (- சுமக்க), அலகு இல்பூண் அரம்பை மாதர் அடி முறை ஏவல் செய்ய, உலகம் ஈரேழும் ஆளும் செல்வத்துள் உறைதி!' என்றான்.

பொருள் : '(உன் பிழையைப் பொறுத்தேன்.) அன்னம் போல்வாளே! நடுக்கமடையாதே! இதற்கு முன் யாருக்கும் வணங்காத என் தலைமேல் விளங்கும் கிரீடம் போல, (உன்னை எடுத்துத் தூக்கி ஒவ்வொரு தலையிலுமாக)த் தனித்தனியே மகிழ்வோடு வைத்துச் சும(ந்து நான் உபசரி)க்க, உன் கற்பனைப்படி தேவமாதர் ஏவல் செய்யப், பதினான் குலகங்களையும் பாதுகாத்து அரசாளும் என் இராச்சியச் செல்வ(த்துக்குத் தலைவியாய் அந்த மிக உயர்ந்த செல்வ வைபவ)த்தில் இனிது வாழ்வாயாக' என்றான்.

குலைவுறல் - நடுக்கமடையாதிருப்பாயாக. அன்னம், உவமை ஆகுபெயராய்ச் சீதையைக் குறித்தது. தாங்கி, தாங்க என்பது தாங்கியென நின்ற செயவெனெச்சத்திரிபு. 'சொற்றிரியினும் பொருள் திரியா வினைக்குறை'. அன்றித் தாங்கப்பட்டு என்பது படுவிகுதி தொக்குத் தாங்கியென நின்றதெனலாம். இது போல இப் படலம் அஅ-ம் பாட்டில் 'பாழிவன் கிரிகளெல்லாம் பறித்தெழுந்து......உதிர' என்பதில் பறிக்கப்பட்டு என்ற பொருளில் 'பறித்து' வருதல் காண்க. அடிமுறை ஏவல் செய்ய - அடி(க்கீழ்ப்பட்டுச் செய்யக்கடவனவாக) முறை (யாக ஏற்பட்ட) பணிவிடைகளைச் செய்ய.

பாட பேதம் : அமரர் மாதர் அடியிணை. (கூஎ)

[ கேட்கத் தகாத வார்த்தைகளைக் கேட்டதனால், சீதை செவிகளைச் சிக்கெனப் பொத்திச் சினமீக்கூர்ந்து, 'தேவர்க்குரிய அவிர்ப்பாகத்தை நாய் விரும்பியதுபோலக், காகுத்தனுக்குரிய கற்புடைய என்னைக் காமித்து, என்ன சொன்னாயடா, இராக்கதா! புல் நுனியில் தங்கிய சிறு பனிநீர்த் துளிபோல வெகு விரைவாக நீங்குந்தன்மையுடைய அற்பமான ஆவியை இழத்தற் கஞ்சி இற்பிறந்தவர்கள் கற்பிழந்திடுதல், என்றும் எங்கும் இல்லை. யான் என் உயிர்தப்ப உன்வச மாதலைக் கருதாயாகி, நீ உன் உயிர்தப்ப ஓடிக், காகுத்தன் கணைகள் உன்னைத் தொடருமுன் ஒளிப்பாயாக!' என்றாள். அவன், 'திசையானைக் கொம்புகளின் வலிமையைச்

சிதைவுசெய்த என் மார்பில் எய்யும் ராமபாணங்கள் கல்மலைமேல் எறியும் காமபாணங்கள் (புஷ்பங்கள்) போலாம். திருமகளுக்குத் திருமகளான நீ, உன் ஆசையால் வருந்தி மெலிந்த எனக்கு அருளாயானால், இறந்தேபோம் என்னுயிரைக் காத்தருளித் திரிலோகாதிபதியாயுள்ள எனக்கு இறைவியாகித் தேவமாதர் யாவர் பதவியினுஞ் சிறந்த பதவியைக் கைக்கொள்வாயாக' என்று பாதத்தடியில் விழுந்து பணிந்தான். ]

## இராவணன் சீதையைத் தரையுடன் பேர்த்தெடுத்துத் தேர்க்கண்வைத்துச் செல்லுதல்

[ அது கண்டு சீதை, வாளால் வெட்டுண்டு மாள்வாள்போல மனங்கலங்கி, 'இறையோனே! இளையோனே!' என்று கூவி ஏங்கினாள். அப்போது, இராவணன், 'மனமிசையாத மாதரைத் தொடுவாயெனில் மடிவாய்' என மலரோன் வழங்கிய சாபமுடையவனாதலால், சீதையைத் தீண்டானாய் அவளிருந்த தரையோடு பேர்த்தெடுத்துத் தேர்மேல் வைத்துச் செல்வானானான். அவள், வெந்தீயால் வெதும்பிய மென்கொடி போல விழுந்து புரண்டு, எழுந்து, 'தருமதேவதையே! நீயே தஞ்சம்; காப்பாயாக!' என்று கதறினாள். பெருந்துன்பத்தாற் பித்துப்பிடித்தவள் போலாகி, 'மான்களே! மயில்களே! யானைகளே! சிங்கங்களே! என்னைவிட்டு நீங்கும் என் உயிரே! நீங்கள் சென்று என் நிலைமையை என் நாயகன்பாற் சொல்லுங்கள்! அவன் வந்து அம்பெய்து என்னை மண்ணோடு பேர்த்தெடுத்த மாபாவியின் இருபது கைகளோடு பத்துத் தலைகளையும் கொத்துக் கொத்தாக அறுத்தெறிந்து சிதறிவிழச் செய்வதைக் கண்டு சிரியுங்கள்!' என்றாள். ]

## இராவணன் சீதையைப் பரிகசித்தல்

[ 'சின்ன மனிதரா என்னைக் கொன்று உன்னை மீட்பார்கள்?' என்று இராவணன் கைதட்டிக் கடகடவென்று சிரித்தான். அவள், 'பாவீ! வஞ்சகமாக மாய மானை ஏவி, உன் உயிருக்கு யமனான என் நாயகனை என்னைவிட்டு நீக்கிக், கள்வர்போல என்னைக் கவர்ந்து கொண்டு போகின்றாய். உன்னைக் காத்துக்கொள்ள வல்லமையுள்ளாயெனில், தேரை நிறுத்து. உன் கூட்டத்தாரான அரக்கரைக் கொன்று உன் தங்கை மூக்கைக் கொய்தவர்கள் இந்த

வனத்தில் இருக்கின்றார்கள். அவர்களை எளிய மனிதரென்று இகழும் நீ, அவர்களுக்கு அஞ்சியன்றோ வஞ்சஞ் செய்தாய்?' என்றாள். அவன், 'அறியாது கூறிறாய். யான் சொல்வதைக் கேள். வலியற்ற மனிதரோடு நான் போர்புரிவேனாதல், அது, வெள்ளிமலையை வேரோடெடுத்த என் வீரத்தோள்களுக்கு மிக்க பழிப்பை விளைக்கும். ஆதலால், சமர்செய்தலினும் சாலப் பயன் தருவது வஞ்சகம்' என்றான். அவள், 'ஆம்! சத்துருக்களை எதிர்ப்பது தப்பு. விற்போர் புரிவது வெட்கம். வஞ்சகத்தால் மாதரைக் கவர்வது வல்லமை. இரக்கமற்ற அரக்கருக்குப் பாவமேது! பழியேது!' என்றாள். ]

சடாயு இராவணனை எதிர்த்துச் சமர்செய்தல்

[ அப்போது, 'எங்கடா போவது? நில்லு! நில்லு!' என்று அதட்டிக்கொண்டு, கனற்பொறி கக்கும் கண்களும் மின்னென விளங்கும் மூக்கும், உடையனாய், மேருபர்வதம் விண்ணிற் செல்வதுபோலக் கழுகரசனான சடாயு பறந்து வந்து எதிர்ந்து இராவணனை நோக்கிச், 'சீராமனுடைய தேவியைத் தேரில் வைத்துக்கொண்டு எங்கடா போகின்றாய்?' என்று கூறிச் சீதையை நோக்கிப், 'பயப்படாதே!' என்று அபயவாக்கு அளித்து, அவளை அவன் தீண்டினானில்லை யென்று தெரிந்து சிறிது சினத்தைத் தணித்துக்கொண்டு, 'எட! முட்டாள்! என் செய்திட்டாய்! உன் வாழ்வைச் சுட்டாய்! கிளையோடு கெட்டாய்! இவளை விட்டால் பிழைப்பாய்! இல்லாவிட்டால் இறப்பாய்! துட்டா! நீ செய்த தீய செயல் இம்மையில் உன்னை உன் உறவினரோடு ஒழிக்கும்; மறுமையில் நரகத்தில் அழுத்தும். இராமன் கொள்ளை கொள்ளையான உன் கூட்டத்தாரைக் கொன்றதறியாயோ? கொல்லவந்த யானைமீது கல்லெறிந்து கோபமூட்டினாயே. காகுத்தன் மூன் கடவுளர் மூவரும் புலிமுன் புல்வாய்கள் போல்வார். அவன் வருமுன் இவளை விட்டுப் போய்விடு. இவளை நான் அவனிடம் சேர்ப்பேன். அவன் வந்து உன்னைக் கண்டுவிட்டானானால், நீ சாவது தப்பாது. அதனைத் தடுத்தல் ஆராலும் ஆகாது' என்றான்.

இராவணன் கோபித்துக் கண்கள் சிவந்து, வாய்மடித்து, 'உன் நெஞ்சூடு என் அம்புகள் புகுமுன் அப்பாற் போவாயாக. என் வசப்பட்ட இவளை எவராலும் விடுவிக்க முடியாது' என்றான்.

அதுகேட்ட சீதை அதிகமாக அச்சமடைய, அவளை நோக்கிச் சடாயு, 'இராமன் வில்லேந்தி விடுவிக்க வரவில்லையே யென்று வருந்தாதே. இவன் பத்துத் தலைகளையும் கொத்துக் கொத்தாகப் பனங்காய்கள் போலக் கொத்திப் பறித்தெறிந்து இவன் செயித்த பத்துத் திக்கிலும் திக்குக்கொன்றாகப் பலியிடுவேன்' என்று கூறி, அவ்வாறே செய்யத் தொடங்கி, முதலில் இராவணனது வீணைக் கொடியைக் கடித்து ஒடித்து வீழ்த்தினான். இதுவரையும் இவ்வாறு ஈடழியாத இராவணன், கண்கள் அதிகமாகச் சிவக்கப், புருவவில் வளையக், கைவில்லை வளைத்துக் கணைக ளெய்தான். அவைகளை மூக்காலும் காலாலும் சிறகாலும் ஒடித்தெறிந்து இராவணன் குண்டலங்களைச் சடாயு பறித்தான். இவன் மேல் அவன் அதிக வன்மையுடைய அம்புகளைச் செலுத்தி இரத்தம் வடியும்படி செய்தான். சிறிது சோர்ந்து தெளிந்து, சடாயு, திரும்பவும் அவனை எதிர்த்து இருபது தோள்கள்மேற் பாய்ந்து கவசத்தை அறுத்தான். அவன் திரும்பவும் அம்புக ளெய்யச் சினந்தெதிர்த்து வில்லைப் பறித்தான். அவன் தனக்குப் பலமா யிருந்த வில் லொழியவே, யாதுசெய்வதென் றாலோசித்துச் சூலாயுதத்தை யெடுத்துச் சுழற்றி யெறிந்தான், 'இராவணா! என் வலிமையைப் பார்ப்பாயாக!' என்று அந்தச் சூலாயுதத்தைச் சடாயு தன் மார்பில் ஏற்றுக்கொள்ளும்படி இறுமாந்து நின்றான். ]

68. பொன்னோக்கியர் தம்புல னோக்கிய புன்க ணோரும்
இன்னோக்கிய ரில்வழி யெய்திய நல்விருந்தும்
தன்னோக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னோக்கியர் நோக்கமு மாமென மீண்ட தவ்வேல்

கொண்டுகூட்டு: பொன் நோக்கியர் (ஆன விலைமாதருடைய) புலன் நோக்கிய புன்கணோர் ஆம் என, இன் நோக்கியர் (ஆன இல்வாழ்வார்) இல் வழி எய்திய விருந்து ஆம் என, தன்னை நோக்கிய நெஞ்சுடை யோகியரைச் சார்ந்த மெல் நோக்கியர் நோக்கம் ஆம் என (இராவணன் எறிந்த) அவ் வேல் மீண்டது.

பொருள்: விலைமாதர் வீட்டுக்குச் சென்று அவர்களுடைய ஐம்புல (நுகர்ச்சியாகிய கலவி யின்ப)த்தை அடையக் கருதிய தரித்திரர் (பொருள் கொடுக்கமாட்டாமையால் அம்மகளிரால்

ஏற்றுக்கொள்ளப்படாமல், அவர் வீட்டினுள்ளே நுழைய மாட்டாமல்) திரும்புதல் போலவும், (விருந்தினர் வரக் கண்டபோது உண்டாகிய மனமகிழ்ச்சியை வெளியுறச்செய்யும் முகமலர்ச்சியோடு கூடிய) இனிய பார்வையுடையார் (ஆகக் கணவன் மனைவியிருவரும்) இல்லாத வீட்டின் இடத்தே உற்ற உத்தம விருந்தினர் அவ்வீட்டினுள்ளே செல்லாமல் திரும்பிவிடுதல் போலவும், தன் ஆன்ம சொரூபத்தினை (அறியக் கருதி யோகாப்பியாசஞ் செய்து அந்தர்முகமாக) நோக்கிய மனத்தையுடைய யோகிகளை மோகிகளாக்கும்படி அடைந்த மாதர் காமக்குறிப்பொடு பார்க்கும் பார்வை (அவ் யோகியர் மனத்துள்ளே செல்லமாட்டாமல்) திரும்புதல் போலவும், இராவணன் எறிந்த அந்தச் சூலாயுதம் சடாயுவின் மார்பினுட் புகமாட்டாமல் திரும்பியது.

பொன் நோக்கியர் - (தம்பால் வரும் ஆடவர், அழகுடையாரோ அவலட்சணமுடையாரோ, இளைஞரோ கிழவரோ என்று நோக்காராய் அவர் தரும்) பொன்னையே (-பொருளையே) நோக்குதலுடையார் (ஆன விலைமாதர்). நோக்குதல் - கருதுதல். 'காமமாவது ஒருகாலத்து ஒரு பொருளால் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தான இன்பமாதலால், அதனைக் கருதுதல் 'புலனோக்குதல்' எனப்பட்டது.'—வை. மு. கோ. புன்கண் - வறுமை —புற. நா. 'பொருளின்மை துன்பத்துள் துன்பமாதலால், வறியவர் "புன்கணோர்" எனப்பட்டனர்.'—வை. மு. கோ. இன் நோக்கியர் - இனிய பார்வை யுடையார். இல் - இல்லாத. வழி - இடம்.

> மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து

என்றபடியுள்ள உத்தம விருந்தினர் 'நல்விருந்து' எனப்பட்டனர். நன்மை - உத்தமம்—பிங்கல. கஎஅக. தன் நோக்கிய - தன்னை நோக்கிய. மெல் நோக்கியர் - மெல்லிய பார்வை யுடையார். வடமொழிவாணர் 'மிருதுபாஷி'க ளென்னும் 'மென்மொழியார்' போல, 'மென்னோக்கியர்' மாதரென்னும் பொருளுடையது. நோக்கியர், நோக்கு என்ற பகுதியும் இ என்ற இருதிணை முக்கூற்றொருமை விகுதியும் அர் என்ற பலர்பால் விகுதியும் சேர்ந்து வந்தது. ஆம் - போலும்.

'இன்னோக்கிய ரில்வழி யெய்திய நல்விருந்தும்' என்பதற்கு 'இல்லாள் முகத்தைப் பார்த்து அவள் கருத்துப்படி நடப்பவராது மனைக்கண் சென்ற நல்விருந்தினரையும்...... இனிய பார்வையுடைய (நற்குண நற்செய்கையுள்ள) மகளிர் இல்லாதவிடத்திற் சென்றடைந்த நல்ல விருந்தினரையும்' என்பவை முந்திய உரை.—வை. மு. கோ.

'தன்னை யறிந்தவன் தலைவனை யறிவான்' என்னும் தத்துவஞான சம்பந்தமான பழமொழிப்படி கடவுளை யறிதற்கு வாயிலாகத் தன்னை யறிய முயலுதல் இப்பாட்டின் மூன்றும் அடியிற் குறிக்கப்பட்டது. சடாயுவின் மார்பி லெறியப்பட்ட சூலம் உள்ளே செல்லமாட்டாமல் (சுவர்மீ தெறிந்த பந்துபோலத்) திரும்பிய தென்பதற் குவமானமாகக் கம்பர் மூன்று உலக உண்மை நிகழ்ச்சிகளை இனிதெடுத்துக் கூறியிருத்தல் கவ6

'தன் (னை) நோக்கிய நெஞ்சுடை யோகியர்' என்பதில் 'தன்' நெஞ்சைக் குறித்ததாகக் கொண்டால் ஒருமை பன்மை மயங்காத வழா நிலையாம்; யோகியரைச் சுட்டுவதாகக் கொண்டால் அம் மயக்கமுடைய வழு நிலையாம்: அதனை ஒவ்வொரு யோகியும் தன்னைத் தன்னைத் தனித்தனி நோக்கிய யோகியரெனப் பொருள்செய்து வழுவமைதியாகக் கொள்ள

'புன்கண்' என்பது புறநானூறு சகூ-ம் பாட்டில் 'புலன்உழுதுண்மார் புன்கண்' என்ற இடத்தும் இப்பாட்டினிடத்து மன்றி வேறெங்கும் வறுமை யென்ற பொருளில் வருவதைக் கண்டதாக ஞாபகமில்லை. அச்சொல் அப்பொருள்பட வருவது அருமையா யிருந்தும் மேற்கோள் காட்டாமல் முந்திய உரைகாரர் புன்கணோர் வறிஞரென உரை செய்திருக்கின்றனர்: அதனால், 'புன்கணோர்' என்பது, அது நிற்கும் இடத்தின் ஆற்றலால் வறிஞ ரென்றே பொருள்கூறக் கடவதா யிருப்பதுபற்றியே அச்சொற்கு அப்பொருள் கூறினர் போலும்.

'புன்கணோரும்' என்ற சொல்லை எடுத்துவிட்டு, அது நிற்கு மிடத்தில் முன் வந்த 'பொன்'னையே மீட்டும் எடுத்தாண்டு, கூறியது கூறலாய்ச், சிறவாத 'பொன்னிலோரும்' என்பதைத் தவிர்த்து வே றெச்சொல்லைக் கொண்டு நிரப்பினும் பொருள் சிதைந்துவிடும்; அல்லது மோனை சிதைந்து விடு மென்ப தொருதலை. அவ்வாறாக, அந்தப் 'புன்கணோரும்' என்ற அரும் பொருட் சொல்லைப் பொருட் பொலிவும் மோனைப் பொலிவும் ஒருங்கு பொருந்த அமைத்த பாண்டித்தியம் விளங்கும் கவித்திறம் கவிஞராயுள்ளார் கருத்தை ஈர்த்துக் கவர்ந்து இன்புறுத்தும் இயல்பினது. (சுஅ)

[ இராவணனை வேறு படை யெடுக்க விடாமல், சடாயு, சாரதி தலையைப் பறித்து, புகத்தி லெறிந்து வருந்தச்செய்தான். அதனால் அவன் கோபங்கொண்டு தண்டாயுதத்தால் தாக்கச், சடாயு தரைமேற் சாய்ந்தான். சாயவே, சாரதி யில்லாத் தேரைத் தசமுகன் தானே செலுத்துவானாய் விரைவாக விட்டான். சீதை துடித்து விழுந்தாள். அது கண்டு, சடாயு, தன் வருத்தத்தைப்

பொருட்படுத்தாமல், 'பயப்படாதே!' என்று பார்த்துகொண்டு பறந்து வந்து, 'எங்கடா இனிப் போவது!' என்று தன்னை முன் தாக்கிய தண்டாயுதத்தை இனித் தாக்காதபடி பற்றிப் பறித் தெறிந்து, இராவணன் ஏறுவதற்கு இடையூறாகக் குதிரைகளைக் கொன்றதோடு நின்றுவிடாமல் தேரையுஞ் சிதைத்து, அம்மட்டில் அமையாமல் அவன் தலைமேற் பாய்ந்து தலைகளிலும் மார்பிலும் தோள்களிலும் சிறகாலடித்து அலகாற் கடித்தான். இராவணன் மூச்சு ஓய்ந்து முடி சாய்ந்து இருந்தான். மெலிந்துவிட்டவனை மேற்கொண்டு தாக்குதல் வீரமன்றென்று, சடாயு, தாக்குதலைத் தவிர்த்து, 'இராவணா! இவ்வளவுதானா உன் வலி!' என்றான். அவன், வெகுண்டு, கைவிடு படைகளாயிருந்த அம்பும் சூலமும் அவமானதன்றிக் கைவிடாப் படையாயிருந்த தண்டும் ஒழிந்ததை யும், வேறு கைவிடு படையோ கைவிடாப் படையோ எதுவும் இல்லாமையையும் எண்ணி, 'இதனால் இவனைத் தப்பாது கொல்வே' னென்று, உமாபதியிடம் பெற்று, உற்றுழி உதவ உயிர்க்குயிராக வைத்திருந்த ஒள்வாளை உறையினின்றும் உருவி ஓங்கி ஓச்சினன். அத் தெய்வ வாள் ஆர்மீது பிரயோகிக்கப் பட்டாலும் அவர் ஆவியை யுண்ணாமல் அவமாகா தாகையாலும் ஆயு ளிறுதிக் காலம் அடுத்ததாலும், சடாயு, சிறகறுப்புண்டு, மலைகள் சிறகுகளுடைய வைகளா யிருந்த காலத்தில் இந்திரன் எறிந்த வச்சிராயுதத்தால் இறகற்ற ஒரு மலைபோல, விழுந்தான். ]

### சடாயுவின் நிலைகண்டு சானகி தயங்கல்

[ தனக்கு ஆதாரமாயிருந்த கொழுகொம்பு முறிந்துவிழத் தானும் விழும் கொடிபோலச், சடாயு சாய்ந்து விழக்கண்ட சானகி, தயங்கித் தரையில் விழுந்து புரண்டாள். 'எனக்கு அபயம் அளித்துக் காக்கவந்த அந்தத் தூயோன் தோற்பதே! இந்தத் தீயோன் செயிப்பதே! நன்று! நன்று! "அறம் வெல்லும் பாவம் தோற்கும்" என்ற ஆப்த வாக்கியமும் பொய்த்ததே!' என்று வருந்தினள். ]

### இராவணன் சீதையைத் தரையோடு தோள்மேற் சுமந்துகொண்டு போதல்

[ இராவணன், இனித் தடுப்பாரில்லை யென்று, சானகியை அவள் இருந்த தரையோடும் தூக்கியெடுத்துத் தோள்மேல்

வைத்து விண் வழியே விரைவாகச் சென்றான். அவன் போகும் வேகத்தால் உண்டாகிய அதிர்ச்சியால் உடல் வருந்த, முன்னமே துன்பத்துக்கு மேல் துன்பமுற்று உள்ளம் சோர்ந்திருந்தவள், இப்போது உடலும் சோர்ந்து உணர்வு நீங்கிக் கிடந்தாள்.* ]

### சடாயு தரையிற் கிடந்து வருந்தல்

[ சடாயு, இராவணன் சென்றதுகண்டு, 'இராம லக்குமணர் வந்தாரில்லை. அவர்களை இவன் வெல்ல வல்லவனல்லன்; வஞ்சித்தே இந்த இழிந்த தீத்தொழில் செய்திருக்கிறான்: திசைமுகன் சாபத்தால் அவளைத் தீண்டமாட்டான்; என் வற்புச்சிறை† போல அவள் கற்புச்சிறை‡ சிதைவதன்று.' என்று கவலை நீங்கினான். 'சீதையை மீட்டேனில்லையே!' என்ற மானமும் இராம லக்குமணரைக் காணும் ஆசையும் நெஞ்சுள் நிலைத்து நிற்க, உணர்வு நீங்கானாய், இறகுகளினின்று இரத்தம் வடிவதால் சோர்ந்து தூங்குவான் போன்று கிடந்தான். ]

### இரர்வணன் சீதையை இலங்கையில் சிறை வைத்தல்

[ விண்வழிச் சென்ற இராவணன், இலங்கையை அடைந்து, அங்கே, அசோக வனத்திலே, அரக்கியர் சூழ்ந்து காவல் செய்யச் சீதையைச் சிறைவைத்தான். ]

### இலக்குமணன் இராமனைக் காணுதல்

[ சீதையை விட்டுப்போன இலக்குமணன் இராமனைத் தேடிச் சென்று கண்டான். அவன் இராமன் தீங்கெய்திலனெனக் கருத்துக் காட்சியாற் கண்டது, கண் காட்சியால் உறுதியுற்றது. மாதருக்குரிய பேதைமையால் மைதிலி மாரீசனது மாயக் குரல் கேட்டு மயங்குவாளே யென்று வருந்தி அவள் வசிக்குமிடத்துக்கு வந்துகொண்டிருந்த இராமன் இலக்குமணனைக் கண்டான். ]

---

* சீதையின் துன்பமிகுதியை இச்சமயத்தில் இதற்கதிகமாக வருணித்தால் வாசகர் மனம் தாஙகமாட்டாமல் சலித்துவிடுமென்று, கம்பர், இங்கே, அவள் துன்ப உணர்வு தொலையும்படி அறிவு மயங்குதற்கேற்ற ஏது எடுத்துக்கூறி, ஒருவர் இறந்துவிடாமல் எவ்வளவு துன்பமடையக்கூடுமோ, அவ்வளவு துன்பமடைந்த போது அயர்ந்து அறிவு மயங்குதல் இயற்கை நிகழ்ச்சியாயிருக்கும் உண்மை புலப்பட, அவள் அறிவு மயங்கி வீழ்ந்தாளென்ற உயரிய கவித்துவம் ஊன்றி நோக்குதற்குரியது.

† வலிமையுடைய சிறகு. ‡ கற்பாகிய காவல்.

இலக்குமணன் வந்த காரணத்தை இராமன் அநுமானித் தறிதல்

புன்சொற் கடந்த பகுவா யரக்க னுரைபொய் யெனாது புகல்வாள்
வன்சொற் கடந்து மடமங்கை யேவ நிலைதேர வந்த மருளே
தன்சொற் கடந்து தளர்கின்ற நெஞ்ச முடையேன் மருங்கு தனியே
என்சொற் கடந்து மனமுந் தளர்ந்த விளவீரன் வந்த வியல்பே

கொண்டுகூட்டு: 'என் சொல் கடந்து (அதனால்) மனம் தளர்ந்த இளவீரன், தன் சொல் கடந்து (அதனால்) தளர்கின்ற நெஞ்சம் உடையேன் மருங்கு தனியே வந்த இயல்பு, புன்சொற்கள் தந்த பகுவாய் அரக்கன் உரையை மடமங்கை பொய் எனாது புகல்வாள், வன் சொற்கள் தந்து ஏவ, (என்) நிலைதேர வந்த மருளே!

பொருள்: '("சீதையைப் பாதுகாத்திருப்பாயாக" என்ற) என் வார்த்தையை (மீறும்படி வற்புறுத்தப்பட்டு மனம் ஒருப் படாமல்) மீறி அதனால் மனம் தளர்ந்திருக்கிற இலக்குமணன், ("இது மாய மான், இதன்பின் ஏகற்க" என்று எச்சரித்துச் சொல்லிய) தன் சொல்லைத் தட்டியதனால் நேர்ந்த தீங்கை நினைந்து வருந்தித் தளர்கின்ற மனத்தினேன் மருங்கே, தனியாக வந்ததற்கு இயல்பு (ஆன காரணம், யான் அபாயத்துக்குள்ளாகி உதவி வேண்டி அலறினாற்போல என் தகுதிக்கு) ஈனமான வார்த்தை களை வழங்கிய இராக்கதன் சொற்களைச் சீதை பொய்யென் றெண் ணாமல் (மெய்யென்று நம்பி இலக்குமணனை நோக்கிக்) கூறு பவள், (அவன் தானாக என் உதவிக்கு ஏகாமைபற்றிக் கோபித்து,) வன்சொல் வழங்கி (என்னிடம் ஏகும்படி) ஏவியதனால், (தான் தெளிவாகத் தெரிந்திருந்த) என் நிலைமையைத் (தன் பொருட் டன்றி அவள் பொருட்டுத்) தெரிய வந்த மயக்கமே!' என்று இராமன் அநுமானித் தறிந்தான்.

புன்மை - குற்றம்; சிறுமை—இ. அ. புன் சொல் - அற்பமான வார்த்தை; குற்றமான வார்த்தை. பகு வாய் - பிளவுபட்ட வாய்: இராக்க தர் வாயைப் பிலவாய் என்பதும், முழை ( - குகை ) வாய் என்பதும் வழக் கம். இராமன் 'பகுவாய் அரக்கன்' என்றது மாரீசன் இறக்கும்போது வாய் திறந்து அலறியதை நினைந்து போலும். 'மடமங்கை' என்பதில் மடம் என் பதற்குப் பேதைமை இளமை என்ற இரு பொருள்களும் பொருந்துமாயி னும், இராமன் தனக்கு அபாயம் நேராமையை இலக்குமணன் தெரிந்து கொண்டது போலச் சீதை தெரியாமையால் அவளை 'மடமங்கை' என்றா னென்க.

'மனமுந் தளர்ந்த' என்பதற்கு '(உடம்பொடு) மனமுந் தளர்ந்த' என்று முந்திய உரைகளில் பொருள் கூறப்பட்டிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் இலக்குமணனுடைய உடற்றளர்ச்சிக்குத் தக்க காரணம் யாதுங் கூறப் படவில்லை யாதலாலும், இருந்தால் அது மனத் தளர்ச்சியே யாதலாலும் 'மனமும்' என்பதில் உம்மை ஒரு பொருளுங் குறியாது இசை நிறைக்க வந்ததென்க.

இராமன், இலக்குமணன் சீதையைத் தனிக்க விட்டுவந்ததற்குக் காரணம் சீதையின் மயக்கமே யென்று ஊகித்துணர்ந்தது இப்பாட்டிற் கூறப் பட்டிருக்கின்ற தாதலால், 'மருள்' இலக்குமணனது இயல்பு காரணமாக ஏற்படாமல் சீதை பேதைமையால் ஏவியது காரணமாக ஏற்பட்டதென்பது போதரும்.

'என்னால் இராக்கதன் இறந்தானென இலக்குமணன் தெளிவாகத் தெரிந்ததுபோலச் சீதையும் தெரிந்திருந்தால், இறந்தவன் எத்தகைய னென அறியவும் அவனைக் கொன்றதற்காக என்னோடு சந்தோடங் கொண்டாடவும் இருவரும் வந்திருப்பார்கள்; இலக்குமணன் மட்டுந் தனியே வந்திரான்; யான் எதிரியால் அபாய நிலையுற்றிருந்ததாகத் தவறுகச் சீதை யெண்ணி இலக்குமணனை எனக்கு உதவி செய்யும்படி ஏவியதனால் அவன் தனியே வந்திருக்கிறு' னென்று இராமன் கருதினு னுதலால், 'இளவீரன் வந்த இயல்பே' என்று மட்டுங் கூருது 'தனியே இளவீரன் வந்த இயல்பே' என்ரு னென்க. (சுகூ)

### சீதையிடம் சென்ற இராமன் அவளைக் காணுது திகைத்தல்

[ விதி என்ன கேடு விளைக்க விருக்கிறதோ என்று விசனித்துக்கொண்டிருந்த இராமன், தன் காலில் வீழ்ந்து இலக்குமணன் வணங்க, அவனை வாரியெடுத்து மார்போடணைத்து, 'எதற்காக வந்தாய்?' என, அவன் நிகழ்ந்ததைக் கூறச், 'சீதையைக் கவரக் கூடியவர்கள் நாம் அவளைவிட்டு நீங்கச்செய்த சூழ்ச்சி இது' என்று சொல்லி, 'உன் செய்கை அவள் சாவாது தடுக்கச் செய்ததாதலாற் குற்றமற்றது, அவள் மனக்கலக்கத்தாற் செய்ததால் அவள் செய்கையும் குற்றமானதன்று. உங்கள் இருவர் செய்கைகளுக்குங் காரணமாய், நீ தடுத்துங் கேளாது மாய மானின் பின் சென்ற என் செய்கையே குற்றமுடையது. இனித் தாமதித்தல் தகாது. அவளைக் கண்டாலன்றித் துன்பம் தொலையாது, காணச் செல்வோம்' என்று விரைந்தோடிப்போய்ப் பார்த்துச் சீதையைக் காணுமையால், தேகத்தைவிட்டு வெளியே போயிருந்த சீவன்

*திரும்பிவந்து தேகத்தைக் காணுமல் திகைத்தது போலத் திகைத்து நின்முன்.* ]

**70.** கைத்த சிந்தையன் கனங்குழை யணங்கினைக் காணு
துய்த்து வாழ்தர வேருெரு பொருளிலா னுதவ
வைத்த மாநிதி மண்ணொடு மறைத்தனர் வாரிப்
பொய்த்து ளார்கொளத் திகைத்துநின் முனையும் போன்முன்

கொண்டுகூட்டு: *கனங்குழை அணங்கினைக் காணுது சிந்தை கைத் தவன் (இராமன்), வேறு ஒரு பொருள் இலான், உய்த்து வாழ்தர உதவ வைத்த மாநிதியைப் பொய்த்துளார் மண்ணொடு வாரி மறைத்தனர் கொள, திகைத்து நின்முனையும் போன்முன்.*

பொருள்: *சீதையைக் காணுமல் (**திகைத்து உயிர்வாழ்க்கை யில் வெறுப்படைந்து**) மனங் **கசந்தவனை இராமன், (தான் புதைக் கும் பொருளன்றி) வேறு பொருள் ஒன்றும் இல்லாத வறிஞனொரு வன் (பின்பு புதைத்த இடத்தினின்று தோண்டி யெடுத்துக்) கொண்டுபோய் (வைத்துக்கொண்டு) வாழ்வதற்கு உதவும்படி (யாக ஒரு மண்பாத்திரத்திலிட்டுப் புதைத்து) வைத்த பெருந் திரவியத்தை வஞ்சகக் கள்வர் அது வைக்கப்பட்டிருந்த மண்பாத் திரத்தோடு தோண்டி எடுத்துத் திருடி மறைத்து வைத்துக் கொள்ள, (அவ் வறிஞன் திரும்பிவந்து புதையலிருந்த இடத்தைப் பார்த்து, அது வைக்கப்பட்டிருந்த பாத்திரத்தோடு அதனைக் காணுமல்) திகைத்து நின்றவனையும் ஒத்தான்.***

*கைத்தல் - வெறுத்தல்; கசத்தல். கனம் குழை அணங்கு - (திரளான பொன்னுற் செய்யப்பட்டமையால்) கனமான குண்டலங்களை(க் காதணி யாக) உடைய பெண் - சீதை. 'அணங்குகொல்' என்ற குறளில் 'கனங் குழை' வருதல் காண்க. உய்த்தல் - கொண்டுபோதல்.—சிந்தா. 425. மண், ஆகுபெயராய் மண்ணுலாகிய பாத்திரத்தை உணர்த்தி நின்றது. மறைத்தனர், முற்றெச்சமாய் மறைத்து என்ற பொருள் தந்து நின்றது. வாரி - திருடி. பொய்த்துளோர் - உண்மைக்கு மாறுபட்டோர் - வஞ்சகர் - கள்வர்.*

*'கைத்த சிந்தையன்' என்பதை விகுதிபிரித்துக் கூட்டிச் 'சிந்தை கைத்தவன்' எனக் கொண்டு 'கைத்த சிந்தையன் கனங்குழை அணங்கினைக் காணுது' என்பதைக் 'கனங்குழை அணங்கினைக் காணுது சிந்தை கைத் தவன்' என மாற்றியும், 'உய்த்து வாழ்தா வேருெரு பொருளிலான் உதவ*

வைத்த மாநிதி' என்பதை 'வேறொரு பொருளிலான் உய்த்து வாழ்தர உதவவைத்த மாநிதி' என மாற்றியும், 'மண்ணொடு மறைத்தனர் வாரிப் பொய்த்துளார் கொள' என்பதைப் 'பொய்த்துளார் மண்ணொடு வாரி மறைத்தனர் கொள' என மாற்றியும் பொருள் கூறியிருத்தல் காண்க.

'உய்த்து வாழ்தர' என்பதற்கு 'வைத்துக்கொண்டு வாழ்வதற்கு' என்பது முந்திய உரைகளிற் கண்டது. 'உதவ வைத்த மாநிதி மண்ணொடு மறைந்தன வாங்கிப் பொய்த்துளார் கொள' என்பதற்குத் '(தனக்கு) உதவுதற்காக (நிலத்தில்) புதைத்து வைத்த மிக்க செல்வங்களை வஞ்சனைச் செய்கையுடையோர் புதைத்துவைத்த மண்ணோடு மறையும்படி எடுத்துக்கொள்ள' என்பதும் முந்திய உரையிற் காணப்பட்டது.—வை. மு. கோ.

பழைய உரைகளில் 'மண்ணொடு' என்பது மண்ணோடு என்றே உரை கூறப்பட்டதே யன்றி மண்பாத்திரத்தோடு என்று பொருள் விளக்கப்படவில்லை. நிதியைப் புதைத்துவைப்பார் யாதாயினும் ஒரு பாத்திரத்துள் வைத்துப் புதைத்தல் வழக்கம். அப் பாத்திரம் செம்பு முதலிய உலோகங்கள் எதனாலாயினும் மண்ணாலாயினுஞ் செய்ததா யிருக்கலாம். புதையலெடுப்பார் புதையற்பொருளை அது வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தோடு எடுத்துப்போவாரே யன்றிப் புதையற்பாத்திர மிருந்த மண்ணையும் எடுத்துப் போகார். ஆதலால், 'மண்ணொடு' என்பதில் 'மண்' ஆகுபெயராய் மண்ணாலாகிய பாத்திரத்தை யுணர்த்துவதாகக் கொண்டு 'மண்ணொடு' என்பதற்கு மண்பாத்திரத்தோடு என உரைகூறப்பட்டது.

சீதையை இராவணன் 'மண்ணொடும் வீங்குதோள் மேற்கொடு விண்ணினேகினான்' (இப்படலம் கஅ௭) என்றதனோடு பொருந்த இங்கே 'மாநிதி மண்ணொடு......வாரி' என்றார். முந்திய 'மண்' பர்ணசாலை யடியிலுள்ள மண்ணையும், பிந்திய 'மண்' ஆகுபெயராய் மண்பாத்திரத்தையும் உணர்த்துதல் தெளிவாம். உவமானத்தில் 'மாநிதி மண்ணொடு வாரி' என்றதனால், உவமேயத்தில் சீதை அவளிருந்த மண்ணோடு எடுத்துக்கொண்டுபோகப் பட்டதை உய்த்துணர்ந்துகொள்ளவைத்தார்.

'உய்த்துவாழ்தர வேறொரு பொருளிலான்', 'இந்த இப்பிறவிக்கிரு மாதரைச் — சிந்தையாலும் தொடேன்'* என்றவனுக்குக் கூடி வாழ வேறொரு பெண்ணு மில்லாத இராமனுக்கும்; 'மாநிதி' சீதைக்கும்; 'வேறொரு பொருளிலான் (பூமியில் மண்பாத்திரத்திலிட்டுப் புதைத்து) வைத்த மாநிதி' இராமன் வனத்திலே பர்ணசாலையிலே வைத்த சீதைக்கும்; 'பொய்த்துளார் மாநிதி(யை) மண்ணொடு வாரி மறைத்தனர் கொள'ல், இராவணன் சீதையை

* சூளாமணிப்படலம் ௩௪.

அவளிருந்த் தரையோடு எடுத்துக்கொண்டு காவாக வைத்தலுக்கும் உவமை: திகைத்து நிற்றல் உவமான உவமேயங்க ளிரண்டுக்கும் பொது.

பாட பேதம்: மறைந்தன வாங்கி. (எ0)

## இராமன் சடாயுவைக் காணல்

[ இராமன் திகைக்கவே, பிரமாதி தேவரெல்லாம் திகைத்து, யாது செய்வானோ, ஏது விளையுமோ, என்று அஞ்சி நடுங்கினர். அப்போது, இலக்குமணன் இராமனை நோக்கிச், 'சீதையைக் கவர்ந்தவர் தீண்டுதற் கஞ்சித் தரையொடு பேர்த் தெடுத்ததையும் தேர்த் தடத்தையும் பார்த்தனம். வலியில்லார் போல வாளா நில்லாமல், அவர்கள் நெடுந்தூரங் கடந்தேகுமுன் தொடர்ந்து போவோம்' என, இராமன், 'ஆம், அதுவே இனிச் செய்தற்பாலது' என்று இலக்குமணனோடு தேர்சென்ற வழியே தீவிரமாகச் சென்றான். அவ்வழியில் ஒரு வீணைக் கொடி ஒடிந்துகிடப்பதைக் கண்டார். அது ஆயுதத்தாலன்றித் துண்டத்தால் * துண்டமாயிருப்பதைக் கண்டு, சடாயு செயலென்று தெரிந்து, அவன் அன்பை நினைந்து கண்ணீர் சோர, 'இலக்குமணா! சீதையைக் கவர்ந்து சென்றவரை நம் பெரியதந்தை தடுத்துச் சமர்செய்திருக்கிறான். அந்தோ! அதி வயோதிகன்! அசகாயன்! †' என்று கவலைகூர, இலக்குமணன், 'அவன் எவராலும் மெலிவிக்கமுடியாத வலிமிக்கவன். பகைவர்களை இன்றைப்பொழுது முழுதும் தடுப்பது திண்ணம். தனியாகவே சத்துருக்களைச் சயித்துச் சீதையை மீட்டாலும் மீட்பான். ஆயினும் நாம் சென்று அவனோடு சேர்ந்துகொள்வோம். ஆலோசனை செய்துகொண்டு ஆலசியஞ்செய்தலாகாது' என்றான்.

விரைந்து தொடர்வதே மேலென்று மிகுவேகமாக இருவோரும் போகும்போது, அந்தரத்தினின்று இந்திரவில் முறிந்து வீழ்ந்து கிடந்தாற்போன்ற ஒரு பாரமான வில் ஒடிந்து கிடக்கக் கண்டார்கள். இராமன், 'இலக்குவ! இந்த வில்லின் வலிமை வியக்கத்தக்கது. இப்படிப்பட்ட வில்லை இறுத்தவன் பலத்தை என்னென்பேன்!' என்றான். இருவரும், இறைப்பொழுது விம்மிதராய் நின்று, மீண்டும் விரைந்து தொடர்ந்து செல்லும் வழியில்

* துண்டம் - மூக்கு. † அசகாயன் - துணையில்லாதவன்.

*ஒரு நெடிய சூலாயுதத்தையும் இரண்டு பெரிய அம்பறாத் தூணிகளையுங் கண்டு, மேற்செல்கையில் தேர்க் குதிரைகளும் சாரதியும் செத்துக்கிடக்கக் கண்டார்கள். பின்பு பல சூரியர் பாரில் விழுந்து கிடந்தாற்போன்ற பல கிரீடங்களையும் தோளணிகளையும் பார்த்தார்கள்.*

*அப்போது இராமன், 'கிரீடங்கள் தோளணிகள் மிகப் பலவாயிருத்தலால், எதிர்த்தோர், தொகை மிகுத்தோரா யிருத்தல் வேண்டும்' என, இலக்குமணன், 'தலைகள் பல, தோள்கள் பல வென்றால், நம் தந்தையை இத்துணைத் தூரம் தொடர்ந்து போர் புரியச் செய்தவன் ஒருவனே, அவன் இராவணனும்' என்றான். இளையோன் ஊகித்துரைத்ததை நன்குமதித்துக்கொண்டு விரைந்து சென்ற இராமன், தென்சமுத்திரத்தில் வெள்ளிமலை கிடந்து விளங்கினாற் போல, இரத்த வெள்ளத்துள் சடாயு கிடக்கக் கண்டான். உடனே கண்கள் நீர்சொரிய, அவன்மீது, வெள்ளிமலை மீது நீலமலை விழுந்தாற்போல, வீழ்ந்தான். வீழ்ந்தவன், மூர்ச்சித்து, விழிமூடி, மூச்சின்றி நெடுநேரம் கிடந்தான். இலக்குமணன் சீதநீர் தெளிக்கத் தெளிந்து வருந்திப் புலம்புவானானன்.*]

### சடாயு சாதம் நிலைகண்டு இராமன் இரங்கல்

**71.** தந்தா தையரைத் தனயர் கொலைநேர்ந்தார்
முந்தாரே யுள்ளார் முடிந்தானே முன்னொருவன்
எந்தாயோ வெற்காக நீயு மிறந்தனையால்
அந்தோ வினையே னருங்கூற்ற மானேனே

கொண்டுகூட்டு: *'தம் தாதையரைக் கொலைநேர்ந்தார் தனயர் முந்து ஆர் உள்ளார்! முன் ஒருவன் (யான் பிரிதலால்) முடிந்தானே! எந்தாயோ! எற்காக நீயும் இறந்தனை! அந்தோ! வினையேன் அருங்கூற்றம் ஆனேனே!*

பொருள்: *'தமது தகப்பன்மாரைக் கொலைக்குக் கொடுத்தவராகிய புத்திரர் எனக்குமுன் யாருளர்! முன்பு (யான் பிரிந்தது காரணமாக) ஒரு தந்தை இறந்துபோனானே! என் தந்தையே! என் பொருட்டு நீயும் இறந்துபோனாயே! அந்தோ! பாவியேன் உங்கள் இருவருக்கும் இயமனானேனே!*

தாதை - தகப்பன். தனயன் - புத்திரன். நேர்தல் - கொடுத்தல் 'கொலைநேர்தல்' என்பது, குவ்வுருபு தொக்குநிற்கப்பெற்றுக் கொலைக்குக் கொடுத்தல் என்ருவது, ஆக என்பது தொக்குக் கொலையாககொடுத்தல் என்ருவது பொருள்பட நின்றது, 'பலிநேர்தல்' 'பலிகொடுத்தல்' என்பவை போல. கொலைநேர்ந்தார் என்பதற்கு முந்திய உரைகாரர்க ளிருவரும் 'கொலைசெய்தார்' என்று பொருள்கொண்டனர். 'நேர்தல்' என்பது 'செய்தல்' என்னும் பொருளில் வரக் கண்டதில்லை. 'எந்தாய்' எந்தை யென்பதன் விளி: எந்தை - என்தந்தை. 'எந்தாயோ' என்பதில் ஓகாரம் புலம்பலில் வந்த விளியுருபு.

பாட பேதம்: முடிந்தான் முனையொருவன்: இறந்தனையோ. (எக)

72. மாண்டேனே யன்றே மறையோர் குறைமுடிப்பான்
பூண்டேன் விரத மதனு லுயிர்பொறுப்பேன்
நீண்டேன் மரம்போல நின்றேழிந்த புன்றேழிலேன்
வேண்டேனிம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே

கொண்டுகூட்டு: 'மாண்டேனே அன்றே! மறையோர் குறை முடிப்பான் விரதம் பூண்டேன். அதனால், உயிர் பொறுப்பேனாய் நீண்டேன். மரம்போல நின்று ஒழிந்த புன் தொழிலேன். இம் மாயப் புன் பிறவி வேண்டேன்! வேண்டேன்.

பொருள்: (இவ்வளவு இழிந்த நிலையை அடைந்த யான்) செத்த பிரேதத்தை ஒத்தேனேயன்றே! (அவமானத்தால் உயிர் தானே ஒழிந்திருத்தற்பாலேன். அது தானு யொழிய வில்லை யாயினும், அதனைத் தற்கொலைசெய்து போக்கி இறந் திருத்தற்பாலேன். ஏன் இறவாதிருக்கின்றே னென்றால்,) மறையவர் குறை முடிக்கும்பொருட்டு ஒரு விரதத்தை மேற் கொண்டேன். அதனால், (வெறுக்கப்பட்டுச் சுமையாயிருக்கிற) உயிரைத் தாங்கினவனாய் வாழ்நாள் நீளலுற்றேன். (எனக்குத் தீங்கு செய்தார்க்கு எதிர்த்தீங்கு செய்யேனாய்த் தன்னை வெட்டு வாரையும் ஒன்றும் செய்யாத) மரம்போல நின்ற, (வீரர் வெறுக் கும்) ஈனமான செய்கையுடையேன். இத்தனைக்கும் இடமான இந்த மாயப் பிறப்பை வெறுக்கின்றேன்! (மிகவும்) வெறுக்கின் றேன்!

பொறுத்தல் - தாங்குதல் - சுமத்தல். 'நின்றெழிந்த' என்பதில் 'ஒழி' வெறுப்பைக் குறித்து நின்றது: ஒருவர் ஒருவனை அல்லது ஒருத்தியைக்

கோபித்துப் 'போயொழி' என்பதில் உள்ள 'ஒழி' போன்றது. புன்மை - குற்றம் - சிறுமை.—இ. அ. மாயம் - பொய்.—பரிபா.; கனவு.—சிலப்.; வஞ்சம்.—புறப். வெண். மாலை. பிறவி, மெய்யாய்ப் பிறவாநிலையான முத்திக்கு மறுதலையாதலால், 'மாயப் பிறவி' என்பதற்கு (1) பொய்யான பிறப்பு என்றும், (2) பிறவாத நிலையோடு பிறப்பு நிலையை ஒப்பிட்டால், அது சாக்கிர நிலையோடு சொப்பன நிலையை ஒப்பிடுதல்போலா மாதலால், கனாப் போன்ற பிறப்பு என்றும், (3) பொய்யாய்க் கனவுபோன் றிருந்தும் மெய் யென்று நம்பும்படி செய்தலால் வஞ்சப் பிறப்பு என்றும் பொருள் கூறலாம். வேண்டாமை - வெறுப்பு.—குறள் ௪.

தூக்க மயக்கம் அபினி தின்ற மயக்கம் போன்ற மயக்கத்துக் குள்ளானொருவன், தேட்கொட்டுத் துன்பம் போன்ற துன்பமுற்றபோது, திடீரென மயக்கந் தெளிந்து தன்னுணர்வு வரப்பெறுதல் போல, மாயன் 'மாயப் புன்பிறவி' மயக்கத்துக்குள்ளாகிச் சடுதியாகக் கொடுமையான துயருற்ற போது, பிறவி மயக்கம் நீங்கப்பெற்றுப் பூர்வநிலை ஞாபகத்துக்கு வர, 'ஏன் பிறப்பெடுத்தேன், பிறவாதிருந்தே னில்லையே, இப்போது தவறிப் பிறக்கலுற்றது போல இனி எப்போதும் பிறவிக்குட்படேன்' என்று கருதினாற் போல, அம் மாயன் அவதாரமான இராமன், தன் மனைவி கவரப்பட அவளை மீட்க முயன்ற தன் பெரியதந்தை கொலையுண்ண உண்டாகிய கொடுந் துயரடைந்தபோது, கருதினானைக் கவி பாவித்து, மற்றெல்லாரையும் மாயைக் குட்படுத்தும் மாமாயனான மகா விட்டுணுவே இராமனாக மனிதப் பிறப்பெடுத்தபோது பிறவித் துன்பந் தாங்கமாட்டாது வருந்தி 'வேண்டேன் இம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே' என்றா னென்று கூறிப், பிறவி, பெரு மயக்கத்தையும் மிகு வருத்தத்தையும் விளைவிக்கும் இயல்பின தென்பதை நன்குணர்த்தியிருக்கும் நயம் பாராட்டத்தக்கது. (எஉ)

**73.** என்றாரம் பற்றுண்ண வேன்றாயைச் சான்றோயைக்
கோன்றானு நின்றான் கோலையுண்டு நீகிடந்தாய்
வன்றாட் சிலையேந்தி வாளிக் கடல்சுமந்து
நின்றேனு நின்றே னேடுமரம்போ னின்றேனே

**கொண்டுகூட்டு :** 'என் தாரம் (ஒருவனால்) பற்றுண்ண, (அவனை) என்றாயை—சான்றோயை—கொன்றான் நின்றான்! நீ கொலையுண்டு கிடந்தாய்! வல் தாள் சிலை ஏந்தி, வாளிக் கடல் சுமந்து, நின்றேனும் நின்றேன்! நெடுமரம்போல் நின்றேன்!'

பொருள் : '(காக்குங் கடமையுடைய நான் காக்கத் தவறியதனால்) என் மனைவி ஒருவனாற் பிடிக்கப்பட, (அவளைப் பிடித்தவனிடமிருந்து மீட்க அவனை) எதிர்த்துப் போர்செய்த உன்னைக்

கொன்றான் (அன கொடியோன் கொல்லப்படாமல் உயிரோடு) இருக்கின்றான்! (சாந்தசீலனானை) நீ கொலையுண்டு கிடக்கின்றாய்! (உன்னைக் கொன்றவனைக் கொல்லுதற்கு உபயோகப்படாத) வலிய வில்லை ஏந்திக்கொண்டு, தொகை மிகுந்த அம்புகளையுஞ் சுமந்துகொண்டு நிற்கின்ற நான் (தோற்றத்தில் வீரன்போல) நின்றேன்! (உண்மையில்) நெடுமரம் போல ஒருசெயலுமின்றி நின்றேன்!'

தாரம் - மனைவி. மலைவு - எதிர்த்தல். ஏன்றாயை - எதிர்த்தாயை - எதிர்த்தவனாகிய உன்னை. சான்றோர் - பெரியோர். சான்றோயை - பெருந்தகைமையுடைய உன்னை. வல் தாள் - வலிய (கால்க ளென்னும்) அடிப்பக்கங்களாகிய (விற் குதை யுள்ள) முனைகள். சிலை - வில். வாளி - அம்பு. 'கடல் என்றது, தொகுதியென்ற மாத்திரமாய் நின்றது. கீழ் களஙு-ம் கவியில் "மழை" என்பது போல.'—வை. மு. கோ.

இப் பாட்டில், இராமன், தன் மனைவியைத் தான் பாதுகாக்கத் தவறினமைக்கு வெட்கத்தோடு கூடிய கழிவிரக்கமும், அவளை மீட்கப் போர் செய்து உற்றுழி உதவிய சடாயுவுக்கு நன்றியறிவோடு கூடிய அன்பும், அவன் கொலையுண்டமைக்குப் பரிதாபத்தோடு கூடிய துக்கமும், அவனைக் கொலைசெய்தவனைத் தான் கொல்லாமைக்கு மானத்தோடு கூடிய கோபமும், இவைகட் கெல்லாம் பரிகாரமாகத் தான் ஒன்றுஞ்செய்யாது வாளா இருத்தற்குத் தன்னைத்தானே பரிகசித்து இழித்தலோடு கூடிய வெறுத்தலும் நன்குணருமாறு நயம்படக் கூறியுள்ள கவித்திறம் களிப்பொடு கருதுதற் குரியது. (எ௬)

[ 'என்னைப்போல நிந்தனைக்காளானோர் யாருள்ளார்! ஆயுதமில்லாத உன்னை ஆயுதமுடையான் கொன்றுபோய்விட, ஆயுதம் படைத்த யான் யாதுஞ் செய்யாது நிற்கின்றேன்! மகா வீரனேயன்றோ!' என்று இராமன் புலம்ப, இலக்குமணனும் இரங்கி அலறச், சடாயு உணர்ச்சி சிறிது உண்டாக, அவர்கள் அழுகுரல் கேட்டு, மெல்லக் கண் திறந்து, இருவரையும் பார்த்து இதயங் குளிர, இழந்த இறகுகளையும் இன்னுயிரையும் எழுலகோடு எய்தப் பெற்றான் போன்று இன்புற்று இயம்புகின்றான். ]

ச்டாயு இராம லக்துமணரை உச்சிமோத்தல்

**74.** பாக்கியத்தா லின்றேன் பயனில் பழியாக்கை
போக்குகின்றேன் கண்ணுற்றேன் புண்ணியரே வம்மினென்று
தாக்கி யரக்கன் மகுடத் தலைதுமித்த
மூக்கினு லுச்சி முறைமுறையே மோக்கின்ருன்

கொண்டுகூட்டு : *'புண்ணியரே! பயன்இல் பழி (உடைய) என் யாக்கையைப் போக்குகின்றேனுன (யான்) பாக்கியத்தால் இன்று (உங்களைக்) கண்ணுற்றேன். வம்மின்!' என்று, அரக்கன் மகுடத்தலை(களைத்) தாக்கித் துமித்த மூக்கினுல், முறைமுறையே உச்சிமோக்கின்ருன்.*

பொருள் : *'புண்ணியவான்களே! சீதையை மீட்கும் பயன் அடையாமற்போனதனுல் பழிப்புடைய எனது உடலைப் போக்குவேனுய் உயிர்விடுகின்ற யான், முன்செய்த நல்வினைப் பயனுல், (அப்படி உயிர்விடும்) இப்பொழுது உங்களைக் காணப்பெற்றேன். என் அருகே வாருங்கள்!' என்று (சொல்ல, அவர்கள் அருகுற்ற போது, அவர்களிருவரையும்) இராவணனது கிரீடத் தலைகளைத் தாக்கித் துண்டம் (செய்ய முயன்று கொத்துதல்) செய்த மூக்கினுல் (அன்புமீதூர) மாறி மாறிப் பலமுறை உச்சிமோந்தான்.*

*இன்று - இப்பொழுது.—ந. அ. வம்மின் - வாருங்கள். துமித்தல் - துண்டம் செய்தல் - அறுத்தல். தலைகளைத் துமிக்க முயன்று கொத்தியதைத் துமித்த என உபசரித்துக் கூறினுர்.*

*'உச்சிமோத்தல் - புத்திரவாற்சல்லிய முடையார் மிக்க அன்பினுற் செய்யுஞ் செயல்'. ' "புண்ணியரே" என்றது, "எனது நல்வினைப் பயன்போல எதிரில் வந்து வாய்த்தவர்களே" யென்று கொண்டாடி விளித்தவாறும்.' ' "பாக்கியத்தாற் போக்குகின்றேன்" என்று இயைப்பின், உற்றுழி உதவலுற்ற போரிற் போக்க நேர்ந்ததையே பாக்கியமென்றதாகக் கொள்ளவேண்டும்.' —வை. மு. கோ.*

*சத்துருவின் உச்சியை வன்மையாகக் கோபத்தோடு தாக்கிய அதே மூக்கினுல் புத்திரரின் உச்சியை மென்மையாக அன்புடன் மோந்தா னென வியப்புத் தோன்றக் கூறிய கவி சாதுரியம் மெச்சத்தக்கது.*

*'மோந்தனுல்' என்னுது 'மோக்கின்ருன்' எனப் புத்திர வாற்சல்லியத்தைப் புலப்படுத்தும் உச்சிமோத்தற் செயல் கண்முன் நிகழ்ந்துகொண்டிருக்கக் காண்போன் கண்டுகொண்டிருக்கும் போதே கூறுவது போலக் கூறிய நயம் கவனிக்கத்தக்கது.*

பாட பேதம் : *தலைதகர்த்த.* (எச)

சடாயு இராமனைத் தேற்றுதல்

[ பின்பு சடாயு, 'குறைவற்ற பலமுற்ற நீங்கள் இருவிரும் சீதையை நீங்கியிருந்தபோது நீங்கு நேர்ந்ததென முன்னமே ஊகித்துணர்ந்தேன். ஏன் நீங்கினீர்கள்?' என, இலக்குமணன் நிகழ்ந்த வரலாற்றைக் கூறச், சடாயு இருவரும் தேறுமாறு கூறு வானானான். 'ஊழினால், "இவ்வாறு நிகழ்வதாக" என ஏற்படுத் தப்பட்டிராத காரியம் ஒருவராலும் செய்ய முடியாதது. ஆத லாற் சீதையை இராவணன் கவர்ந்த செயல் அவனைக் கருவியாகக் கொண்டு ஊழ் செய்ததாம்.' ]

**75.** அதிசய மொருவரா லமைக்க லாகுமோ
துதியறு பிறவியி னின்ப துன்பங்கள்
விதிவச மென்பதை மேற்கோ ளாவிடின்
மதிவலி யான்விதி வெல்ல வல்லமோ

கொண்டுகூட்டு : '(இராமா!) *அதிசயம்! (இது, விதியன்றி வேறு) ஒருவரால் அமைக்கல் ஆகுமோ! துதி அறு பிறவியின் இன்ப துன்பங்கள் விதி வசம் என்பதை மேற்கொளாவிடின், மதி வலியால் விதி (வலி)யை வெல்ல வல்லமோ!'*

பொருள் : *'(இராமா! சீதை கவரப்பட்டது எதிர்பாராத) புதுமை(யான சம்பவம்! இது, பழவினைப் பயனாக, விதியின் செய லால் நிகழ்ந்தது; விதி இராவணனைக் கருவியாகக்கொண்டு நிகழ் வித்தது: விதியா லன்றி, இராவணனால் அல்லது வேறு) ஒருவ ரால் உண்டாக்கக் கூடிய தாகுமோ! (ஆகாது, சீதை பிரிவினால் உனக்கு உண்டாயிருக்கிற துன்பம் பிறப்புக் குரியதாய்ப் பிறந்த வர்கள் அடைவது சகசம். ஆதலால், வருந்தாதே. இத்தகைய எதிர்பாராத புதுமையான சம்பவங்களால் உண்டாம் இன்பமும் அத் துன்பம்போலப் பிறப்புக் குரியதே.) பிறப்பினது இன்ப துன்பங்கள் விதிவசப்பட்டவை (-விதியின் செயலால் உண்டா குபவை; பிறப்பை ஒழித்தாலன்றி ஒழிக்கக்கூடாதவை) என்ற கொள்கையை (நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஒப்புக்கொண்டு விதியோடு முரணாது அதற்கிணங்கி முயற்சி செய்வோமானால் விதி வசமான இன்ப துன்பங்களை நமக்கிணங்கியவைக ளாக்கலாம். விதி வலியைக் கொண்டே விதிவலியை வெல்லும் மதிவலியாலன்றி*

வேறு) மதிவலியால் விதி வலியை வெல்லவல்லே மாவோமோ!' ('ஆகோம்' என்றான் சடாயு).

அதிசயம் - புதுமை. திருக்கு - கண். திருசியம் - காணப்பட்டது. அதிருசியம் காணப்படாதது. அதிருசியம், அதிசயமென மருவியது. அதிசய மென்பது, இங்கே, முன் காணாதது, எதிர்பாராதது, புதுமையானது என்ற பொருளில் வந்தது. சீதை எவ்வாறு கவரப்பட்டா ளென்பதைக் கேட்ட சடாயு, அது எதிர்பாராத புதுமையான சம்பவமென மனத்துள் நினைத்து, அதனை 'அதிசயம் (ஆனது)' என்றான். துதி அறு பிறவி - புகழற்ற சென்மம். முத்திக்குத் தடையா யிருப்பதால், பழித்தற் குரிய பிறவி யென்பான் 'துதி அறு பிறவி' என்றான்.

காரணமின்றிக் காரிய மின்று. யாவும் காரண காரியத் தொடர்ச்சி நியதி கடவாதவை. எந்த நிகழ்ச்சிகளின் திறத்தில் காரணகாரியத் தொடர்ச்சி தெரியப்படவில்லையோ, அந்த நிகழ்ச்சிகளைத் தெய்வச்செய லென்பது சகசம். தெய்வச்செய லென்பதற்குப் பிரதியாக விதியின் செயல், ஊழின்செய லென்று உரைப்பதும் உலக வழக்கம். இதனால் விதி யென்பது தெய்வசம்பந்த முடைய தென்பது தெளிவாம். இது காரணமாக, 'விதி' 'தெய்வம்' எனப்படுவதுண்டு. 'ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி யென்பன ஒரு பொருட்கிளவி.'—குறள் உரை. விதி, நன்மைசெய்யும் உயிர்கள் நன்மைப்பயனை அடையு மென்ற தெய்வத் தின் விதியாம். தெய்வத்தின் விதியைத் தெய்வம் என்றது உபசாரம். தெய்வம் ஆகுபெயராய்த் தெய்வத்தின் விதியை யுணர்த்திய தெனலுமாம். கடவுளின் அடிகள் சுருக்கமாக 'அடிகள்' எனப்படுதலும், 'அடிகள்' 'கடவுள்' எனப்படுதலும் போலத் தெய்வத்தின் விதி 'விதி' எனப்பட லும், 'விதி' 'தெய்வம்' எனப்படலும்ஆயின வென்க.

விதி யென்பது பிரமன் பெயர்களிலும் ஒன்று. 'விதியின் தலை அரிந்த விதி' என்பதில் முந்திய விதி பிரமனாகிய தேவனையும் பிந்திய விதி ஊழாகிய தெய்வத்தையும் உணர்த்தும். இந்த விதி, மும்மூர்த்திகள் முத லிய எல்லாச் சமயத் தெய்வங்களுக்கும் மேற்பட்டது. அதன் தன்மையை ஆராய்ந்து பார்த்தால், அது மேற்கூறியவாறு மனிதர் அறியாத காரணகாரி யத் தொடர்ச்சி நியதியா யிருப்பதனோடு அவர்கள் அறிந்த காரணகாரியத் தொடர்ச்சி நியதியாயும் இருப்பதாம். அது கடவுளின் விதி, முறை, நியதி என்னலாந் தன்மைபற்றி அதற்கு விதி முதலிய பெயர்கள் வழங்கலுற்றன.

'ஸயன்ஸ்'* என்ற சாஸ்திர விதிகளை அறிந்தோர், அவ்விதிகளைக் கொண்டே அவ்விதிகளினுலாம் விரோதங்களை விலக்குதலும், அநுகூலங்களை

* Science.

அடைதலும் செய்தல்போல, (உதாரணமாக, மின்சார * சக்தியால் நிகழும் இடியினால் கேடடையாதபடி மின்வாங்கி † அமைத்துக் கட்டடங்களைக் காத்தல் போன்ற பிரதிகூல நீக்கமும், மின்சார விசிறி, விளக்கு, முதலியன உண்டாக்குதல் போன்ற அநுகூல ஆக்கமும் பெறுதல்போலக்), 'கடவுளின் விதிகளை அறிந்து அவ்விதிகளை உபயோகித்தே, அவற்றாலாம் தீமைகளை நீக்குதலும் நன்மைகளை ஆக்குதலும் செய்ய வல்லோமாவோ' மென்பான், 'பிறவியின் இன்பதுன்பங்கள் விதிவச மென்பதை மேற்கொண்டால், மதி வலியால் விதியை வெல்ல வல்லோமாவோம்' என்பதை உணர்த்துதற்கு 'பிறவியின் இன்பதுன்பங்கள் விதிவசமென்பதை மேற்கோளாவிடின் மதிவலியான் விதி வெல்ல வல்லமோ' என்றா னென்க.

'சீதையை இராவணன் கவர்ந்தது விதியினால் நேர்ந்தது. அது உன் பிழையால் நேர்ந்ததென்று வருந்தாதே' யென்ற கருத்துப் புலப்பட, 'அதிசயம் ஒருவரால் அமைக்கலாகுமோ' என்று சடாயு இராமன் தேறுமாறு கூறினான். இராமன் தான் சீதையை நீங்கிய பிழையினாலேயே அவள் கவரப்பட்டா ளென்று கொண்டிருந்த எண்ணம் நீங்கினாலன்றி, அவன் துன்புறுதல் நீங்கா தென்று கருதி, அவ்வெண்ணம் நீங்க இவ்வண்ணங் கூறினா னென்க.

இராவணனால் சீதை கவரப்பட்டதுபற்றிச் சடாயு 'அதிசயம் ஒருவரால் அமைக்கலாகுமோ' என்றது, கைகேயி சூழ்வினையால் இராமன் காட்டுக்குப் போகுதல்பற்றி வசிட்டன் 'ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ' ‡ 'வெவ்வினை அவள்தர விளைந்ததேயுமன்று—இவ்வினை இவன்வயின் எய்தற் பாற்றுமன்று' § என்றதை நினைவுக்குக் கொண்டுவருகின்றது. (எரு)

[ மேற்கூறியவாறு சடாயு கூறிப் பின்னுங் கூறுவானாய், 'விதியின் வன்மை மிகப் பெரிது. பிரமனைத் தலை அரிந்து, உலகங்களனைத்தையும் படைத்த அவன் தன் அரியுண்ட தலைக்குப் பிரதியாக ஒரு தலை படைக்க முடியாது செய்த விதிக்குச் செயற் கரியதுண்டோ? தன்னை வணங்கினார்க்குச் சகல ஐசுவரியமும் தருதலால் ஈசுவர னெனப் பேர்பெற்ற சிவனைத் தரித்திரருள் தரித்திரனாய் மண்ணோடுங் கிடையாமல் மண்டையோட்டில் இரந்துண்ணச்

* Electricity.　　† Lightning Conductor.

‡ க. ரா. சா. அயோத்தியா காண்டம் 65-ம் பாட்டு.

§ „ „ 66-ம் „

செய்த விதியின் வலி பெரிது, பெரிது, மிகவும் பெரிது! * அப்படிப்பட்ட விதியின் செயலால் உனக்கு இந்தத் துன்பம் நேர்ந்தது. துன்பம் வந்தபோது அது சிந்தையைத் தபிக்கச்செய்தற் கிடங்கொடுத்தல் அறியாமைப்பாலது. தேறுதல் அடைவாயாக; சீதை கவரப்பட்டது, அவளை மீட்டற்கு நீ இராவணனாதி யிராக்கதரை யழிப்பா யாதலால், அரக்கர் கொடுமையால் தளர்ச்சியுற்றிருக்கும் தருமம் கிளர்ச்சியுறுதற்கும், துன்பமடைந்திருக்கும் தேவர் இன்ப மடைதற்கும் ஏதுவாய்க் கேடுபோல வந்த ஆக்கமாம். அரக்க ரென்னும் களைகளைக் களைந்து தேவ ரென்னும் பயிரைச் செழித்து வளரச் செய்து சீதையை மீட்டு இன்புற்று நீடு வாழ்வாய்.' ]

### சடாயு, தன் சிறகை இராவணன் வெட்டினான் என, இராமன் கோபங்கொள்ளல்

[ 'சீதையை இராவணன் தரையோடெடுத்துச் செல்லும் போது தெரிந்து எதிர்த்துத் தடுத்துத் தாக்கி என்னாலானமட்டும் போர்புரிந்தேன். அவன் சிவனிடம் பெற்ற தெய்வ வாளால் என் சிறகுகளை வெட்டினான். இந்நிலையுற்றேன்' என்ற வார்த்தை சென்று செவிக்குட் புகவே, இராமன் புருவங்கள் நெற்றிமேலேறின; கண்கள் இரத்தங் கக்குவனபோலச் சிவந்தன; நெருப்புப் போலச் சுடுகின்ற நெட்டுயிர்ப்புப் புறப்பட்டது. ]

**76.** மண்ணகந் திரிய நின்ற மால்வரை திரிய மற்றைக்
கண்ணகன் புனலுங் காலுங் கதிரொடுந் திரியக் காவல்
விண்ணகந் திரிய மேலை விரிஞ்சனுந் திரிய வீரன்
எண்ணரும் பொருள்க ளெல்லா மென்பது தெரிந்த தன்றே†

கொண்டுகூட்டு: (கோபத்தால் இராமன் நிலைமாறியபோது) மண் அகம் திரிய, நின்ற மால்வரை திரிய, கண் அகல் புனல் கால் கதிர் திரிய,

---

* குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலைகொண்
டிடங்க டோறு மிரப்பாயென் றேசு வார்க்கென் பேசுவனே

என்ற திருவிளையாடற் பாட்டு இங்கே நினைவுகூர்தற்குரியது.

† இப்பாட்டுடன் கம்பரது கடவுட்கொள்கை ஆராயத் தக்கது. க. ரா. சா பாலகாண்டத்திற் கடவுள் வாழ்த்துக் கவியின் குறிப்பைப் பார்க்க.

காவல் விண் அகம் திரிய, மேலை விரிஞ்சனும் திரிய, வீரன் எண் அரும் எல்லாப் பொருள்களும் (ஆனவன்) என்பது

பொருள்: (இராமன் கோபாவேசத்தால் இயல்பான சாந்த நிலை மாறியபோது) பூமி, பூமிக்குமேலுள்ள மலை, கடல், காற்று, சூரிய சந்திரர், தேவலோகம் ஆகிய இவைகள் நிலைமாற (என்பா னேன், இவைகளெல்லாவற்றையும் படைத்த) பிரமதேவனும் நிலை மாறினதனால், இராமபிரான் எல்லாப் பொருள்களும் ஆனவன் என்ற உண்மை (அறியாதாரும் அறிந்துகொள்ளும்படி) விளங்கியது.

மண் அகம் - பூமி. நின்ற - (அசைவின்றி) நின்ற. மால்வரை - பெரிய மலைகள். கண் அகல் புனல் - இடம் அகன்ற கடல். 'நீர்' என்பது போலப் 'புனல்' என்பது அடையில்லாமலே கடலை யுணர்த்தும். கடற் றெய்வமான வருணன் 'புனல்வேந்தன்' என்பதில் 'புனல்' கடலை யுணர்த்து தல் காண்க. கதிர் - சூரிய சந்திரர்கள் — ந. அ. காவல் விண் அகம் - (தேவரது) காவலையுடைய விண்ணுலகம். மேலை, 'மேல்' ஐகாரச் சாரியை பெற்றது, மேன்மை யென்னும் பொருட்டு. விரிஞ்சன் - பிரமன். அன்று, ஏ, அசைச் சொற்கள். அன்று என்பதை ஒரு பொருளுங் குறியாத அசைச் சொல்லாகவும், ஏ என்பதைத் தேற்றப் பொருள் குறிக்கும் அசைச் சொல் லாகவுங் கொள்ளலாம்: அன்றி, 'அன்று' என்பதை (இராமன் கோபமுற்ற) 'அப்போது' என்ற பொருளுடையதாகவும், ஏ என்பதை(ச் செய்யுளில் இசை நிறைக்க வந்த) ஈற்றசையாகவுங் கொள்ளலாம்.

(இராமன் கோப நிலையுற்றுச் சாந்தநிலை மாறிய) 'அப்பொழுது மண்ணகந் திரிதல் முதலியவற்றின் அநுமானத்தால், "ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்" என்றபடி உலக முழுதும் எம்பெருமான் சொரூபமாகவே யிருக்கு மியல்பு அறியப்பட்டதென்க.' — வை. மு. கோ. (எசு)

### இராமன் தேவர்மீது கோபங்கொள்ளச், சடாயு சாந்தப்படுத்தல்

[ ∴ கோபாக்கிராந்தனான இராமன், சடாயுவை நோக்கித், 'தனியா யிருந்த சீதையை அறிவற்ற அரக்கன் பற்றிக்கொண்டு போகவும், நீ இந்நிலை யுறவும், ஒன்றுஞ் செய்யாமற் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களைத் தேவலோகத்தோடு அழிப்பேன், பார்!' என்றான். இராமன் கோபங் கண்டு இலக்குமணனே

அஞ்சினு னென்றால், அதன் கொடிய தன்மையைக் கூறுவா னேன்! அப்போது சடாயு, முன்பு இராமன் தான் காவாத குற்றத்தால் சீதை பற்றுண்டாளென்று வருந்திய வருத்தம் தணியக் கூறியது போல, இப்போது அவன் தேவர் தடாத குற்றத்தால் சடாயு வெட்டுண்ணும்படி நேர்ந்ததென்று சீறுஞ் சீற்றம் தணியக் கூறுவானாய், 'இராமா! கோபியாதே. அரக்கரால் அடக்கப்பட்டு அல்லற்பட்டுக் கொண்டிருக்கும் தேவர்கள் உன்னால் அவ்வரக்கர் அழிக்கப்படுவதை எதிர்பார்த்திருக்கின்றார்கள். அப்படிப்பட்டவர்கள் எப்படி இராவணனை எதிர்ப்பார்கள்? சீதை தனிமையுறுதற்கு நீயே காரணனாய் மான்பின் சென்று இக்குலப் பழியை விளைத்துவிட்டுத் தேவரைச் சீறலாமோ? சீறாதே. சீதையையும் தேவரையும் சிறைமீட்டு, வேறுள தீங்குகளும் நீங்குறச் செய்து நீடுவாழ்வாயாக' என்றான். இராமன் சடாயு சொல்லைத் தசரதன் சொல்லாகத் தலைமேற் கொண்டு, அரக்கர் வருக்கம் அனைத்தையும் அழிப்பதே இனிச் செய்யத் தக்கதென்று சினமாறினான். பின்பு, '"தந்தை சொன்மிக்க மந்திரமில்லை." உன் சொற்படியே செய்வேன். இராவணன் எங்கே போனான்?' என்றான். ]

சடாயு சாக, இராம லக்குமணர் தகனம் செய்தல்

[ அப்போது சடாயு, உடல் சோர்ந்து, உணர்வு ஓய்ந்து, ஒன்றும் உரையானாய் உயிர் நீங்கினான். இராம லக்குமணர் அளவற்ற துயருற்று அழுதார்கள். இராமன், 'இளையோய்! நம் சனக பிதாவை நாட்டிற் பறிகொடுத்தோம். சுவீகார பிதாவைக் காட்டிற் பறிகொடுத்தோம். இனி என் செய்வோம்!' என்றான். இலக்குமணன், 'சீதையைக் கவர்ந்து தாதையைக் கொன்ற பாதகனைக் குலத்தொடு தொலைத்திடுதலே செயத்தகுவதாகும்' என்றான்.

பின்பு, இருவரும் அகிற்கட்டை சந்தனக்கட்டைகளை அடுக்கிய சிதையின்மேல் சடாயுவின் சரீரத்தை யேற்றித் தகன முதலிய சகல பிதிர்க் கடன்களையும் செய்து நிறைவேற்றினார்கள். அப்போது, சூரியன், தன் குலத்தவனான சடாயுவுக்குத் தானும் சரம கிரியை செய்தற்கு நீராடப் போவான் போல மேற்றிசைக் கடலை மேவி, அதனுள் முழுகுவான் போல மறைந்து அத்தமனமானான். ]

—ஸ்ரீ—

# 9. அயோமுகிப் படலம்

[ அயோமுகி என்னும் அரக்கியைப்பற்றிக் கூறுவது ]

### இராம லக்குமணர் ஒரு மலையை அடைதல்

[ மாலை நேரம் வந்தபோது, இராம லக்குமணர் சடாயு தகன மான இடத்தைவிட்டுச் சென்று ஒரு மலையை அடைந்து தங்கினார்கள். இரவு தொடங்க, இருள், இராக்கதர் கூட்டம் போலப் பரவலுற்றது. மலையின்கண் நீரருவி யொழுகுதல், அது அவர்கள் துன்பங்கண்டு கண்ணீர் அருவி பொழிகுதல் போன்றது.]

### இராமன் நெடிய இரவு முழுதும் துயிலாமை

**77.** யாமது தெரித றேற்று மின்னகைச் சனகி யென்னும்
காமரு திருவை நீத்தோ முகமதி காண்கி லாதோ
தேமரு தெரியல் வீரன் கண்ணெனத் தெரிந்த செய்ய
தாமரை கங்குற் போதுங் குவியலாத் தன்மை யென்னோ

கொண்டுகூட்டு: தேம் மரு(விய) தெரியல் வீரன் கண் எனத் தெரிந்த செய்ய தாமரை, கங்குல்போது குவியலாத் தன்மை, இன் நகைச் சனகி என்னும் காமரு திருவை நீத்தோ, (அவள்) முக மதியைக் காண்கிலாதோ, என்னோ, அது தெரிதலில் யாம் தேற்றும்.

பொருள்: இராமனுடைய கண் என(ப் பெயர்பெற்று) விளங்கிய செந்தாமரை மலர் (இதுவரை சென்ற இரவுகளில் தவறாது குவிந்தது போல, இந்த இரவில்) குவியாமைக்குக் காரணம், சீதை யெனப்பட்ட இலக்குமியைப் பிரிந்த காரணத்தாலோ, அவள் முகமாகிய சந்திரனைக் காணாத காரணத்தாலோ, (இவ் விரு காரணங்களுள் எதனாலோ,) அதை அறிதலில் யாம் தெளிவில்லேம்.

'தெளிவித்தல்' 'தெளிதல்' என்னும் இரு பொருள் உள்ளதாய்ப் பிறவினை தன்வினைக்குப் பொதுவாகிய தேற்றுதல் இங்கே தன்வினையாகிய தெளிதலை உணர்த்தி நின்றது. இன் நகை சனகி - இனிய (புன்) சிரிப்பை யுடைய சீதை. காமர் - அழகு: உ, சாரியை. திரு - இலக்குமி, உருவக மாய்ச் சீதையை உணர்த்தியது. நீத்தல் - நீங்குதல். தேம் மரு தெரியல் - தேன் மருவிய (-பொருந்திய) பூமாலை. 'மருவு' என வழங்குவது உகரம்

ஒழிக்கப்பட்டு 'மரு' எனப்பட்டது. தெரிந்த - விளங்கிய. '' வீரன்— எண்ணரும் பொருள்க ளெல்லாம் என்பது தெரிந்த தன்றே' * என்பதிலும் 'தெரிதல்' விளங்குதல் என்ற பொருளில் வருதல் காண்க.

' இது கவிக்கூற்று. திருவை ( - செல்வத்தை ) இழந்தவன் கண் மூடி உறங்காமைபோல, திருவை ( - சீதையை ) இழந்த இராமனும் அவ்விரவிற் கண்மூடித் தூங்கவில்லை. .........'' கண்ணெனத் தெரிந்த செய்ய தாமரை '' என்ற உருவகத்தில் '' எனத் தெரிந்த '' என்ற சொல்லாற்றலால், கண் எனவே கொண்டு அது மூடாததற்கு '' திருவைநீத்தோ '' என்றும், தாமரை யென்ற உருவகத்திற்கு ஏற்ப அது குவியாததற்கு '' மதி காண்கிலாதோ '' என்றும் காரணங் கூறின ரென்க. .........ஒரு மனைக்கு உரியளாய் அத னுள் தனியே வாழ்ந்திருந்தவள் திடீரென்று அம்மனையைவிட்டு அகன்றால், அம் மனை இரவிலும் கதவடைக்கப்படாமல் திறந்தபடியே வாளாகிடத்தல், இயல்பு; அத் தன்மையை இங்கே கொண்டு, செந்தாமரை மலர்க்கு உரிய ளாய் அதில் வாழும் திருமகளாகிய சீதை நீங்கியதனால் அத் தாமரை மலர் இரவிலுங் குவியாது கிடந்ததோ என்று சங்கித்துக் கற்பனை கூறின ரென்றல் நேர். இராமனது திருக்கண்ணுக்குத் திருமகள் வாழுஞ் செந் தாமரையை உவமை யெடுத்துக் கூறியதனால், அப் பெருமான் பிராட்டியைத் தனது கண்ணினுள் வாழுங் கருமணி(யுட் பாவை)யாகக் கொண்டு மிகப் பாராட்டி வெகு அருமையாகப் போற்றிவந்தா னென்பது விளங்கும்.' —வை. மு. கோ.

> கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
> திருநுதற் கில்லை இடம்

என்ற குறள் இங்கே கருதத்தக்கது.

'கங்குல் — எல்லைகாண்பளவும் நின்றான் இமைத்திலன் நயனம்' (குகப் படலம் சஉ) எனவும் 'வரிவில் ஏந்திக் — காலைவா யளவும் தம்பி இமைப் பிலன் காத்து நின்றான்' (கங்கைப் படலம் சஅ) எனவும் இராம சீதையரைக் காப்பதற்காக வனவாச காலம் பதினாலு வருடமும் இரவிலும் மூடாதிருந்த இலக்குமணன் கண்களைச் சீதை பிரிவாற்றாமையால் மூடாதிருந்த இராமன் கண்கள் ஒத்தன. (எஎ)

[ இராமன் சீதையை நினைந்து காதல்கூரும்படி அவள் முகம் தோன்றினாற் போலச் சந்திரோதயமானது. தனக்கே யன்றித் தன் மரபுக்கே வன்பழி வந்துசேர, மனையாளை மாற்றான் வௌவிய மானத்தால் புறத்தே துரத்தப்பட்டும், அப்பழி நீங்க

* முன் 76-ம் பாட்டு.

*மாற்றானைக் கொன்று அவளைத் திரும்ப அடையவேண்டுமென்னும் ஆசையால் அகத்தே இழுக்கப்பட்டும், அங்குமிங்கும் அலைப்புண்டு, ஆருயிர், உடலுள் நிற்கமாட்டாமலும், உடலைவிட்டுப் போகமாட்டாமலும் வருந்தாநிற்க, இராமன், 'முன் சீதையைக் காக்காமலும் இப்போது அவளை மீட்காமலும் வீணேயிருக்கும் வில்லை ஏனோ தரித்திருக்கிறேன்!' என்று வில்லையும் தன்னையும் வெறுத்துக் கூறினான்.*

**78.** பிரிந்த வேதுகோல் பேரபி மானங்கோல்
தெரிந்த தில்லை திருமலர்க் கண்ணிமை
பொருந்த வாயிரங் கற்பங்கள் போக்குவான்
இருந்து கண்டிலன் கங்குலி னீறரோ

**கொண்டுகூட்டு:** *திருமலர்க் கண் இமை பொருந்தக் கற்பங்கள் ஆயிரம் போக்குவான், இருந்து கங்குலின் ஈறு கண்டிலன். (சீதையைப்) பிரிந்த ஏதுகொல்? பேர் அபிமானங்கொல்? தெரிந்ததில்லை.*

**பொருள்:** *கண்ணிமைகள் பொருந்தக் கற்பங்கள் ஆயிரம் கழிப்பவன், (எனவே இமைப்பொழுது கற்பகாலம் போலத் தோன்ற இராப்பொழுதைப் போக்குவானான இராமன், படுக்கையிற் படுக்கமாட்டானாய், இருப்பிலேயே) இருந்து இரவின் முடிவைக் கண்டானில்லை. (அவனுக்கு அன்றை யிரவு அபாரமாக நீண்டதா யிருந்தது. அவ்வாறிருந்தது,) சீதையைப் பிரிந்த காரணத்தாலோ? அவள்மீது கொண்ட ஆசை மிகுதியாலோ? எதனாலென்று எமக்குத் தெரியாது.*

*ஏது - காரணம். 'பிரிந்த பேதங்கொல்' என்ற பாடத்துக்கு, (சீதையோடு கூடியிருந்த முந்திய இரவுகளோடு ஒற்றுமையின்றி இந்த இரவு அவளைப்) பிரிந்த(தனால் ஏற்பட்ட புதிய மாறுபாடான) வேற்றுமை(யுடையதா யிருந்தமை)யினாலோ எனப் பொருள் கொள்க. பேர் அபிமானம் - பெருவிருப்பு. அபிமானம் - விரும்புதல். —ந. அ. கற்பம் - பிரமன் வாழ் நாட்களில் ஒருநாள் - நானூற்றுமுப்பத்திரண்டுகோடி வருடம்.—ந. அ. கங்குலின் ஈறு - இரவின் முடிவு. அரோ, அசை.*

*'பேரபி மானங்கொல்' என்பதற்குப் பேர் [இரா(வுக்கு)மன் (- இராசா) என இருத்தலால், இராத்திரியை விழிப்பா யிருந்து காக்கவேண்டும் என்ற] அபிமானத்தாலோ என்பது தொனி அருத்தம்.*

**பாட பேதம்:** *பிரிந்த பேதங்கொல்.* (எஅ)

[ இராமன், 'இளையோய், நாம் நகர் நீங்கிய நாள்தொட்டு இந் நாள் மட்டும் சென்ற எல்லா இரவுகளிலும் இருப்பில் இருத்த லின்றி நிலையில் நின்று நித்திரை நீக்கி என்னைக் காக்கின்றாயன்றே; இன்றை யிரவு போல என்றை யிரவும் இவ்வளவு நீடித்த தில்லையே; இன்றை யிரவு இவ்வாறு நீளுதற்குக் காரணம் யாது? நம் குல முதல்வனான சூரியன் இன்னும் தோன்றவில்லையே. இவ் வளவு பொழுது தோன்றாமல், அவன் இன்றுபோல என்றும் தாமதித்ததில்லையே. தன் குலத்தில் ஒரு பெண்ணைப் பகைவன் பற்றிக்கொண்ட பழிக்கு நாணிப் பலர் காணத் தோன்றப்படா தென்று நாடுகடந்து போய்விட்டானோ? அல்லது இராவணனாற் சிறைவைக்கப்பட்டுத்தான் விட்டானோ?' என்று பகர்ந்து வருந்தி னான். அப்போது விடிந்தது. ]

### சூரியோதய வருணனை

[ விடியவே, மிருகங்களும் பறவைகளும் தத்தம் சேக்கை களை * விட்டு நீங்கி வெளியே புறப்பட்டன. பெண் மயிலும் ஆண் மயிலும் பிணைந்தும், மானும் கலையும் மருவியும், களிறும் † பிடியும் ‡ கலந்தும் களித்துத் திரியக் கண்டு, சீதையின் பிரிவாற் றாமைத் துயர் மிகுதியாக, இராமன் வருந்தினான். சூரியன் உதயமானான்.

சூரியன், 'இராமா! "தாமரை தவிரப்போந்தாள்" § ஆகிய திருமகளான சீதையைக் காண்கின்றிலை யாதலால், அவள் திரும் பிச்சென்று தாமரையிற் குடிபுகுந்திருக்கின்றாள் போலும்; "எல் லாத் தாமரைகளும் மூடப்பட்டிருத்தலால், அவள் எந்தத் தாமரையி லிருக்கின்றா ளென்று காணமுடியவில்லையே" என் றெண்ணவேண்டா. இதோ, எல்லாத் தாமரைகளையும் திறந்து காட்டுகிறேன்! அவள் அவைகள் ஒன்றிலுமில்லை. பார்த்துக் கொள்' என்று, தான் முதனாள் அத்தமிக்கும்போது மூடிய தாமரைகளை யெல்லாம் தன் கரங்களால் §§ திறந்துகாட்டினாற் போலத் தாமரை மலர்கள் மலர, உதயமானான். ]

* சேக்கை - மிருகங்கள் பறவைகளின் படுக்கை. † களிறு - ஆண் யானை.
‡ பிடி - பெண்யானை. § இந்நூல் 40-ம் பாட்டு.
§§ கரங்கள் - கைகள்; கிரணங்கள்.

## இலக்குமணன் அயோமுகியை எதிர்தல்

[ உதயமானவுடன், இராமலக்குமணர் திரும்பவும் சீதையைத் தேடுவாராய்ப், பல காடுகளும் ஆறுகளும் கடந்து சென்றார்கள். அன்று அத்தமனமாகுமளவும் தேடியுங் கண்டிலர். இரவு வர, எங்கும் இருள் மூடலுற்ற போது, ஒரு பளிங்குப் பாறையைக் கண்டு அங்கே தங்கினார்கள். அப்போது இராமன், 'தண்ணீர் கொண்டுவா' எனத், தம்பி தனியனாய்ச் சென்று தண்ணீர் தேடித் திரியும்போது, அவனை அயோமுகி என்னும் அரக்கி கண்டு, ஆசைப்பட்டு, 'என்னைத் தழுவும்படி இவனை இரப்பேன், இணங் கானேல் எடுத்துக்கொண்டுபோய், என் குகைக்குள் வைத்து வலி யத் தழுவுவேன்' என்று எண்ணிக்கொண்டு வந்து அவனெதிரே நின்றாள். அவன் 'ஆரடீ! சொல்' என, 'யான் கல்யாணமாகாத கன்னிகை. என்னைக் கலந்து என் உயிரைக் காப்பாயாக' என, வெறுத்து விழி சிவந்து, 'இனி இவ்வாறு கூறிடுவாயேல், உன் உடலைக் கூறிடுவேன்' * என்றான். அவள் மோக மிகுதியால் கோபமுறாமல், 'உன்னால் உயிர்கொள்ளப்பெற்று இறந்தேனேல், பிறந்தேன்' † என்றாள். அவன், 'இனி நிற்பாயேல் காதையும் மூக்கையும் களைந்திடுவேன், ஓடிப்போ!' என்றான். அவள், மாயையால் மயக்கி, மகவை ‡ யெடுத்தல்போல வாரியெடுத்து மார்போடணைத்துத் தாங்கிக்கொண்டு போனாள். கரிய இராட்சசி யின் கைகளுக்கும் மார்புக்கும் இடையே உடம்புமுழுதும் மறைந்த இலக்குமணன் யானைத்தோல் போர்த்த ஈசனை ஒத்தான். ]

## இலக்குமணனைக் காணாமல் இராமன் வருந்தல்

[ இராமன், நீர் கொணரச் சென்ற இலக்குமணன் நிரம்ப நேரமாகியும் திரும்பிவாராமையால், வருந்தி, 'இலக்குமணா! இன் னும் வந்தாயில்லையே! சீதையைக் கவர்ந்த இராவணன் உன்னையும் கவர்ந்தானோ! யான் சானகியைப் பிரிந்து வருந்துதல் சகிக்கமாட் டாமல் தற்கொலை செய்துகொண்டாயோ! என் கண்ணாயிருந்த உன்னை இழந்த யான் உன்னை எவ்வாறு தேடிக் காண்பேன்'! என்று பின்னுங் கூறுவான்: ]

---

* கூறிடுதல் - பிளந்திடுதல். † பிறந்தேன் - பிறந்ததனாலாய பயன் பெற்றேன்.
‡ மகவு - குழந்தை.

**79.** என்னைத்தரு மெந்தையை யென்னையரைப்
பொன்னைப்பொரு கின்ற பொலங்குழையாள்
தன்னைப்பிரி வேனுளே னாவதுதான்
உன்னைப்பிரி யாத வுயிர்ப்பலவோ

கொண்டுகூட்டு: *'என்னை (ஈன்று) தரும் என் தந்தையை, என் அன்னையரைப், பொன்னைப் பொருகின்ற பொலம் குழையாள் தன்னைப் பிரிவேன் (ஆகியும்) உளென் ஆவது உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ!'*

பொருள்: *'என்னை (ஈன்று) அளித்த என் தந்தை தாயரையும் இலக்குமியை நிகர்த்த சீதையையும் பிரிந்தேன் ஆகியும் இறந்தேனாகாது உயிர் உள்ளேனா யிருப்பது உன்னைப் பிரியமாட்டாத உயிரை அடைந்திருத்தல் அல்லவோ!'*

*'எந்தை', 'என்னை' என்பன முறையே 'என் தந்தை', 'என் அன்னை' என்பவற்றின் மரூஉ. பொன் - இலக்குமி. பொருதல் - போலல். பொலம் - அழகு; பொன். குழை - குண்டலம். உயிர்ப்பு - உயிரடைகை.* —தி. அ.

*தந்தை, தாயர், தாரத்தைப் பிரிதலோடு சகோதரரான பரத சத்துருக்கரைப் பிரிந்தமையும் உபலக்கணத்தாற் கொள்க.*

*'இராமன் இலக்குமணனைப் பிரியாமலிருந்தது மற்றையோரைப் பிரிந்த வருத்தத்தை மறைத்தது என்றபடி; இதனால், இராமன் மற்றையோரினும் இலக்குமணனிடத்து மிக்க அன்புகொண்டமை நன்கு விளங்கும்.'* —வை. மு. கோ.

*இராமன், இதன்முன்னர், சீதையைப் பிரிந்தபோது,*

*'மாண்டேனே அன்றோ, மறையோர் குறைமுடிப்பான்*
*பூண்டேன் விரதம்; அதனால் உயிர்பொறுப்பேன்'* *

*என, மறையோர் குறைமுடிக்கும் விரதத்தை மறவாதிருந்தவன், பின்வருமாறு, இலக்குமணன் பிரிந்த வருத்தம் தாங்கமாட்டாமல் 'வடிவாள் கொடுமன் உயிரைத் துறப்பான்'† ஆகித் தற்கொலைசெய்யப் புக்கபோது மறந்துவிட்டமையாலும்; பின்னர், இந்திரசித்து எய்த பிரமாத்திரத்தால் இலக்குமணன் இறந்தானென்று இராமன் எண்ணியபோது,*

* சடாயு உ படலம் கஅசு. † இப்படலம் எஎ.

'இளையவன் இறந்தபின் எவரும் என்? எனக்
களவறு சீர்த்தி என்? அறிவென்? ஆண்மை என்?
கிளையுறு சுற்றம் என்? அரசென்? கேண்மை என்?
விளைவுதான் என்? மறை விதிஎன்? மெய்ம்மை என்?' *

என்றமையாலும்; இராமன் மற்றெல்லார்பாலும் வைத்த அன்பினும் இலக்குமணன்பால் வைத்த அன்பு மிக்க தென்பது வலியுறுதல் காண்க. (எக)

## இராமன் தற்கொலை செய்யப்புக்கபோது அயோமுகியின் அலறுதலைக் கேட்டல்

[ 'உன்னை இழந்தபின் உயிர் வாழேன்! நம் உறவினரனைவரும் இறந்திடுவார்! உன் கிளையான எங்களையெல்லாம் கொன்றாயாய்!' என்று புலம்பி, இராமன், துன்பம் தாங்கமாட்டானாய் எழுவான், விழுவான், இருப்பான், ஓடுவான், தேடுவான், வாடுவானாகி, 'இப்போது இறப்பேன், அடுத்த ஜென்மத்தில் உனக்கு அண்ணனாகப் பிறப்பேன்' என்று தற்கொலை செய்யத் தொடங்கிய தற்சமயத்தில், மயக்கம் தெளிந்த இலக்குமணனால் அங்கபங்கப்படுத்தப்பட்ட அயோமுகி, 'ஐயோ! ஐயோ!' என் றலறிய குரலைக் கேட்டான். அக்குரல் தம்பியோடு சண்டை செய்யும் அரக்கர் குரலன்றென்றும் ஊறுபட்ட அரக்கி ஒருத்தி அரற்றிய கூக்குரலென்றும் அறிந்தான். ]

## இராமன் இலக்குமணனைச் சந்தித்துத் தழுவுதல்

[ உடனே, அவன் அக்கினி அத்திரத்தைச் சுழற்ற, இரவு பகல்போலாயிற்று. சத்தம் கேட்ட திக்கு நோக்கி மிக்கு விரைந்து செல்ல, இலக்குமணன், 'வருந்தாதே! வருந்தாதே! வந்தேன்! வந்தேன்!' என்று, வந்து வணங்கினான். இழந்த கண்ணை அடைந்த அந்தகன் போலவும், பிரிந்த கன்றை அடைந்த பாற்பசுப் போலவும், மிகுந்த மகிழ்ச்சியுற்றுத், தம்பியை எடுத்துத் தழுவினான். தழுவித் தாரை தாரையாக ஒழுகும் ஆனந்தக் கண்ணீரால் அபிடேகம் பண்ணி, நிகழ்ந்தது யாது?' என, அதனைத் தம்பி சாற்றக் கேட்டு, அவன் அபாயத்துள் அகப்பட்டதற்கு வருத்தமும் அதனினின்று தப்பியதற்குச் சந்தோடமும் அடைந்து, 'எனக்குத் தேவர்களே பகைவராயினும் ஆகுக; தேவர்கள்

---

* மருத்துமலைப் படலம் ௩௭.

கிடக்க, திரிமூர்த்திகளே பகைவராயினும் ஆகுக; நீ இருக்கும் போது வேறு காவல் யாது வேண்டும்!' என்று கூறிப் பின்னும் கூறுகின்றான். ]

## இராமன் இலக்குமணன்பால் கொண்ட அன்பைப் பாராட்டுதல்

80. பிரிபவர் யாவரும் பிரிக பேரிடர்
வருவன யாவையும் வருக வார்கழற்
பெருவலி வீரநிற் பிரியி னல்லது
பருவர லென்வயிற் பயிலற் பாலதோ

கொண்டுகூட்டு: *'வார் கழல் பெருவலி வீர! (என்னைப்) பிரிபவர் யாவரும் பிரிக; வருவன பேர் இடர் யாவையும் வருக; நின் பிரியின் அல்லது, பருவரல் என்வயின் பயிலல் பாலதோ?'*

பொருள்: *'மகா வீர! என்னைப் பிரிபவர்களெல்லாரும் பிரிந்திடுக; வரக்கடவனவாகிய ஆபத்துக்களெல்லாம் வந்திடுக; (அப்பிரிவுகளாலும் ஆபத்துக்களாலும் என்பால் துன்பம் அணுகாது.) உன் ஒருத்தனைப் பிரிந்தாலல்லது, துன்பம் என்பால் நெருங்கற்பால தாமோ? (ஆகாது)' என்றான் இராமன்.*

*பேர்இடர் - பெரிய ஆபத்து. வார்கழல் - நீண்ட வீரகண்டை. பருவரல் - துன்பம். பயிலல் - நெருங்கல்.*

*'"திண்பொருள் எய்தலாகும் தெவ்வரைச் செருக்கலாகும்
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையும் நண்ணலாகும்
ஒண்பொரு ளாவதையா உடன்பிறப் பாக்கலாகா
எம்பியை யீங்குப் பெற்றேன் என்னெனக்கு அரியதென்றான்"*

*என்ற சீவகசிந்தாமணிச் செய்யுள் இங்கே நோக்கத்தக்கது.'*

பாட பேதம்: *செருவலி வீரநிற் நீரு மல்லது.* (அ0)

## இராமன் சீதையின் உருவெளித்தோற்றங் கண்டு மயங்கல்

[ *பின்பு, இராமன் வருண மந்திரத்தைச் செபிக்க, வானம் நீர் பொழியப் பருகித் தாகவிடாய் தணிந்து, தம்பி தளிர்களும் மலர்களுங் கொண்டு பரப்பியமைத்த படுக்கையிற் பள்ளிகொண்டான். சீதையினது பிரிவாற்றாமையால் உணவு கொள்ளாதிருந்தவன் உறக்கமுங்கொள்ளானாய் வருந்தி, இடைவிடாமல் அவளே*

நினைவாயிருந்ததனால், அவள் உருவெளித்தோற்றம் உண்டாகக் கண்டான். கண்டவன் அவ்வுருவைத் தழுவ முயன்றபோது அது கைக் ககப்படாமையால் கவன்று, சீதைக்கு இடை யில்லா மற் போனதுபோல* எல்லா உறுப்புக்களுமே இல்லாமற் போயி னவோ என்று மயங்கினான்.

அதன்பின், அவன், தான் விழித்திருப்பதாக நினைத்திருக் கும்போது நிகழ்ந்த நித்திரையில்† சீதையைக் கலந்ததாகக் கனவு கண்டு, அந்த அறியாது தூங்கிய தூக்கம் அறியாமலே அகன்ற போது அவளைக் காணாமையால், 'இப்பொழுதுதானே தழுவிக் கொண்டிருந்தேன், எப்படி வழுவிப்போயினாள்? தழுவியது, சாக்கிரமோ? கனவுதானோ? கண்ணுறங்காமல் கனவுண்டா குமோ?' என்று கருதி வருந்தினான். ]

சூரியன் உதித்தல்

[ இரவு காரணமாக விரக வேதனைகூரும் இராமனுக்கு விர கம் தணிய இரவை அகற்றுவான் போலச் சூரியன் தோன்றி னான். ]

# 10. கவந்தப் படலம்

[ கவந்தன் என்னும் இராக்கதனைப்பற்றிக் கூறுவது ]‡

இராம லக்குமணர் கவந்தன் தோள்களை வெட்டுதல்

[ சூரியோதயமாகவே, இராம லக்குமணர், சீதையைத் தேடிச் செல்வாராய், உச்சிநேரம் உற்றபோது, கவந்தன் இருந்த காட்டை அடைந்தார்கள். அவன், உலகத்தில் உள்ள பாவமெல்லாம்

---

* எழில் மிகுத்த மாதருக்கு இடை சிறுத்திருத்தல் குறிக்க இடையில்லை யெனல் கவிமரபு.

† இங்கே 'சிவராத்திரிப் — போதுதுயி லோமென்ற விரதியரும் அறிதுயில் போலே யிருந்து துயில்வார்' என்ற தாயுமானவர் வாக்கு நோக்குதற் குரியது.

‡ 'கவந்தம் - கபந்தம் என்ற வட சொல்லின் திரிபு; இதற்கு – தலையற்றதும் தொழிலுடன் கூடியதுமான உடல் என்று பொருள்.'

ஒருங்கு திரண்டு ஓர் உருவெடுத்தாற் போன்ற கரிய பெரிய காத்திரம் படைத்தவன்; மலைபோலும் தலை, கழுத்திலன்றி வயிற்றிலுள்ளவன்; தலையில் வெப்பம் மிக்கு விளங்கிய விழிகள் மலையிற் பதிக்கப்பட்ட இரண்டு சூரியர் போன்றன; கைகள் மந்தர மலையான மத்தினைச் சுற்றின வாசுகிப் பாம்பாகிய வடத்தினது (வாலுந் தலையுமான) இருபுறமும் நீண்ட இரு பகுதிகள் போன்றன. அவன் அக் கைகளிரண்டையும் இருபுறத்தும் விரிய நீட்டி வளைத்து நடுவில் அகப்பட்ட பிராணிகளெல்லாவற்றையும் பிலம் போன்ற வாயுட் பெய்யப்போகும் சமயத்தில், இராம லக்குமணரும் அவன் கைகளினுள்ளே அகப்பட்டனர். அகப்பட்டவர்கள், அவன் கண்ணெதிருற, அவன், 'தீவினைப் பயனால் என் கைக்குட் சிக்கிய நீவிர் யாவிர்?' என, அவர்கள் அவன் கூறியது கேட்டுக் கோபங்கூர, அவன் 'உங்களை விழுங்குவேன்' என வெகுண்டு கூற, அவர்கள், ஆளுக்கொரு தோளாக அவனுடைய இரண்டு தோள்களையும் வெட்டி வீழ்த்தினார்கள். ]

கைகள் களையப்பட்ட கவந்தன் காட்சி

**81.** கைக ளற்றுகு குருதியா றொழுகிய கவந்தன்
மெய்யின் மேற்கொடு கிழக்குறப் பெருநதி விரவும்
சைய மாநெடுந் தாழ்வரைத் தனிவரை தன்னோ
டைய நீங்கிய பேரெழி லுவமைய னானான்

கொண்டுகூட்டு: கைகள் அற்று உகு குருதி யாறு ஒழுகிய கவந்தன், மெய்யின் மேற்கொடு கிழக்கு உறப், பெருநதி விரவும் சையம் மாநெடுந் தாழ்வரைத் தனிவரையோடு ஐயம் நீங்கிய பேர் எழில் உவமையன் ஆனான்

பொருள்: கைகள் அறுபட்டு உடலின் இருபக்கமும் இரத்த வெள்ளம் பெருகியோடப்பெற்ற கவந்தன், ஒன்று மேற்குத் திசையையும் ஒன்று கிழக்குத் திசையையும், அடையும்படி இரண்டு பெரிய ஆறுகள் போகுதல் பொருந்திய மலையோடு உவமையுடையவனானான்.

உகுதல் - சிந்துதல். ஒழுகுதல் - பெருகியோடுதல் — த. அ. மெய் - (மலையின்) உடல். உறுதல் - அடைதல். விரவுதல் - கலத்தல் - சேர்தல்.

*சையம் - கல். தாழ்வரை - மலைச்சரிவு ( - சாரல்.) சையம் மா நெடு தாழ் வரை தனி வரை - கற்கள் (நிறைந்த) மிகப் பெரிய சாரலை (மலைப் பக்கத்தை) யுடைய ஒப்பற்ற மலை. ஐயம் - சந்தேகம். பேர் எழில் - மிக்க அழகு.*

*தெளிவான மிகப் பொருத்தமான உவமை யென்பார் ஐயம் நீங்கிய பேர் எழில் உவமை யென்றார்.*

*'கவந்தனது உடலுக்கு மலையும், தோள்கள் அறுபட்ட இரண்டு பக்கங் களிலும் பெருகுகிற இரத்த வெள்ளத்துக்கு மலையின் கிழக்கு மேற்கு என் னும் இரண்டு பக்கங்களிலும் பெருகுகிற ஆற்று வெள்ளமும் உவமை. சையமால்வரை, பெரிய ஸஹ்யகிரியுமாம்.'*

*கிழக்கே செல்லும் ஆற்றை நதியென்றும் மேற்கே செல்லும் ஆற்றை நதமென்றும் கூறுவர்.*

பாட பேதம் : *வெங்குருதி.* (*௪௧*)

[ *இராமனால் தீண்டப்பெற்றதனால் தீய இராக்கத தேகம் நீங்கித் தூய கந்தருவ சரீரம் பெற்ற கவந்தன், கூட்டினின் றெழும் பறவை போல, இறந்த உடலினின் றெழுந்து, ஆகாயத்தை அடைந்து, இராமனை நோக்கித், 'தேவாதி தேவனே! நீ எனக்குச் சாப சரீரத்தைத் தவிர்த்துத் தரும சரீரத்தைத் தந்தாய். எளி யேன் உங்க ளிருவருக்கும் உரைப்பது ஒன்று உள்ளது. கேளுங் கள். நீங்கள் துணை வேண்டாத சூரராயினும், துணை தேடிக் கோடல் சூழ்ச்சித் திறமாம். உக முடிவு காலத்தில் ஒருதானே உலகங்க ளனைத்தையும் ஒருங் கழிக்கும் உருத்திரமூர்த்தி, பூத கணங்களைத் துணையாகக்கொண்டு, பூதநாத னெனும் பெயர் பூண்டுள்ளான். சமீபத்துள்ள சவரி யென்னும் தவமகளைச் சந்தித்து, அவளால் ருசியமூக பருவதத்துக்கு வழி தெரிந்து, அங்கே வாழும் சுக்கிரீவனைத் துணையாகக்கொண்டு அவனால் சீதை யைத் தேடுதல் சிறந்த தென்று செப்பித் தெண்டனிட்டுச் சென் றான். இராம லக்குமணர் வழிச்சென்று இரவில் மதங்காச்சிரமத் தில் தங்கினார்கள்.* ]

## 11. சவரி பிறப்பு நீங்கு படலம்

[ சவரி என்னும் தவவேடம் தாங்கிய வேடமாது இராமனால் பிறப்பு நீங்கி வீடு சேர்ந்ததைக் கூறுவது. ]

---

### இராமன் சவரியின் விருந்தாதலும் அவள் வீடு பெறுதலும்

[ *மதங்காச்சிரமத்தில் உள்ள தவசிகளுக்குத் தொண்டுசெய்து கொண்டு சந்நியாசினியாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்த சவரி யென்பவள், அங்கே இராமன் வருதலை முன்னதாக அறிந்து, அவனுக்காக அருமையான தீங்கனிகளைச் சேர்த்து வைத்திருந்தாள். அவன் அவளைக் கண்டு சேமம் விசாரிக்க, அவள், ஆனந்தக் கண்ணீர் பெருக அன்புமீதூர வணங்கிச், சித்தமாக வைத்திருந்த தீங்கனிகளை இனிதளித்து உபசரித்து விருந்தருந்தச் செய்தாள். பின்பு சுக்கிரீவனிருக்கும் இடத்துக்குச் செல்லும் வழியைச் சொல்லிவிட்டு, இராமனைத் தொழுதுகொண்டு யோக முயற்சியால் தேகத்தைவிட்டு முத்தியையுற்றாள். இராம லக்குமணர் அவள் சொல்லிய வழியே செல்லுபவராய்ப் பம்பைப் பொய்கைப் பக்கம் வந்துசேர்ந்தார்கள்.* ]

ஆரணிய காண்டம் முற்றுப்பெற்றது.

**காண்டம் மூன்றுக்கு விருத்தம் 422.**



ராவ் ஸாஹிப்

# வே. ப. சுப்பிரமணிய முதலியார், G. B. V. C.

## இயற்றிய நூல்கள்

1. சுவர்க்க நீக்கம் முதற் காண்டம் .... 0 12 0

   *('பாரடைஸ் லாஸ்ட்' என்னும் ஆங்கில நூலிலிருந்து விருத்தப்பாவில் மொழி பெயர்த்தது; திண்மையான அட்டையுடன்)*

   ஷை காலிகோ கட்டிடம் 1 4 0

2. கோம்பி விருத்தம் (2-ம் பதிப்பு) 0 8 0

   *(சென்னைச் சர்வகலாசாலை 1934-ம் வருஷத்து இண்டெர்மீடியேற்றுப் பாட புஸ்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.)*

3. நெல்லைச் சிலேடை வெண்பா (2-ம் பதிப்பு) 0 6 0

   *(இதிற் சில வெண்பாக்கள் சென்னைச் சர்வகலாசாலை 1936-ம் வருஷத்து B. A. பாட புஸ்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.)*

4. அகலிகை வெண்பா (2-ம் பதிப்பு) 1 0 0

5. இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம் .... 2 0 0

   *(ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தது.)*

6. இந்தியாவில் கால்நடைகளுக்குக் காணுகிற அதிக பிராணபாயமான வியாதிகளைப் பற்றிய புஸ்தகம்

   *(ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்து, கவர்ண்மென்றால் பிரசுரிக்கப்பட்டது. சென்னைக் கவர்ண்மென்று அச்சுக்கூடம் சூப்பிரிண்டண்டுக்கு எழுதிப் பெறலாம்.)*

7. இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய ஜாதி வரலாறும் (2-ம் பதிப்பு) .... 0 6 0

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | கல்வி விளக்கம் முதற் பாகம் (ஸ்பென்ஸர்ஸ் எஜுகேஷன் என்ற ஆங்கில நூலிலிருந்து ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஸ்ரீ S. V. கள்ளபிரான் பிள்ளை அவர்கள், B. A., ஸ்ரீ அப்பாவு பிள்ளையவர்கள், L. M. & S. ஆகிய மூவர்களும் மொழிபெயர்த்தது.) | .... 1 | 0 | 0 |
| 9. | ஜான் மில்டனுர் சரித்திரம் (மேற்குறித்த சுவர்க்க நீக்கம் முதற் காண்டத்தின் ஒரு பகுதி. 1911-ம் வருஷத்து இண்டர் மீடியேற் பரீக்ஷா பாடபுத்தகம்.) | .... 0 | 4 | 0 |
| 10. | கால்நடைகளுக்கு வியாதி வராமல் அம்மை குத்தலும் அதன் உபயோகங்களும் | .... 0 | 1 | 0 |
| 11. | சருவ சன செபம் (சென்னைச சர்வகலாசாலை 1937-ம் வருத்துப் பிரவேசப் பரீக்ஷா பாடபுத்தகத்திற் சேர்ந்தது) | .... 0 | 1 | 0 |

### கம்பராமாயண சாரம் :

*இந்நூல் தனித்தனிக் காண்டமாக வெளியிடப்பெறுவது. இது வரை பால காண்டமும், அயோத்தியா காண்டமும், ஆரணிய காண்டமும் வெளியாகி யிருக்கின்றன. கிஷ்கிந்தா காண்டமும், சுந்தர காண்டமும் அச்சிலுள்ளன.*

*இந்நூல் 'கம்பராமாயண இன்கவித் திரட்டு' என்ற பெயருடன் 'செந்தமி'ழில் வெளிவந்த காலத்திற் கிடைத்த நிருபங்களுள் இரண்டி லுள்ள அபிப்பிராயங்கள் :*

ஸ்ரீ C. V. கிருஷ்ணஸ்வாமி அய்யரவர்கள், B. A., B. L. ( Retired District Judge ) :

*'இன்றயதினம் எனக்கு கிடைத்த "செந்தமிழ்" 21-ம் தொகுதி 1-ம் பகுதியில், நீங்கள் எழுதியிருக்கிற "கம்பராமாயண இன்கவித் திரட்"டின் முன்னுரையைப் படித்து வெகு ஆனந்தமடைந்தேன். நேற்றிரவு இவ்வூர் ஆனந்த நடராஜகான சபையின் முதல் வருடாந்தக் கொண்டாட்ட சபையில், நான் அவைத் தலைமை வகித்தேன்.........என் முடிவுரையில், கம்ப ராமாயணம் வெகு மேன்மையான காவியமா யிருந்தபோதிலும், அது வெகு விரிவாக இருப்பதினால் இக் காலத்தில் தமிழபிமானிகளும் படித்து ஆனந் திக்க சாவகாசமில்லை என்றும், — அந்தப் பெரிய காவியத்தில் உள்ள*

இன்கவிகளை, ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியர் மகாகவியின் கவிகள் "Beauties of Shakespeare" என்று தேர்ந்தெடுத்து பதிப்பித்ததுபோல், பதிப்பிக்க வேண்டுமென்றும், இந்த சத்கர்மத்தை செய்யும்படி ஈச னருள்புரிய வேண்டுமென்றும் நடராஜாவைப் பிரார்த்தித்தேன். இவ்வளவு சீக்கிரம் என் பிரார்த்தனை நிறைவேறுமென்று நான் கனவிலும் எண்ணவில்லை. தாங்கள் எத்தனித்த காரியம் வெகு மெச்சத்தக்கது. இனி ஒவ்வொரு மாதமும் "செந்தமிழ்" பத்திரிகையை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன். சர்வேஸ்வரன் தங்களையும், தாங்களெடுத்துக்கொண்ட காரியத்தையும் அநுக்கிரகிப்பாரென்று நம்புகிறேன். தங்களை யெனக்கு முன் தெரியாதபோதிலும் தங்களுடைய நன் முயற்சியினால் ஆனந்தப்பட்டு எழுதினேன்.' 4—1—1923.

மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலைத் தலைமை யாசிரியர் ஸ்ரீ திருநாராயணையங்காரவர்கள்:

'கம்பராமாயண இன்கவித் திரட்டைப் பற்றி எனக்குண்டாகும் மகிழ்ச்சிக்கு அளவில்லை. அதனை நான் தங்களுக்குத் தெரிவித்தால் முகமனென்றெண்ணக் கூடுமோ என்று ஐயமுடையவனாகி இதுகாறு மெழுதா திருந்தேன்.

பல பிரதிகளை ஒப்புநோக்கி நன்கு பரிசோதித்தெழுதப் பெறுதலால் பல சுத்தமான பாடங்களும், பொருணயங்களும் நன்கு புலப்படுத்தப்படு

தொடர்மொழிகளுக்கு இடையிடையே இசையெச்சத்தானும், பிற குறிப்புக்களானும் விரித்துக் காட்டவேண்டிய சொற்களை இருபிறைக் குறிகளுக்கிடையே அமைத் தெழுதியிருப்பதை யுற்றுநோக்குந் தோறும் உள்ளம் களிப்புறுகின்றது. காவியச்சுவை நுகர விரும்பும் ஒரொருவரும் தங்கள் உரைநயங் கண்டு களியாதிரார்.

இக்காலத்துச் சிலர் போலத் தத்தம் கொள்கைகளை நூலிடை நுழைக்க விரும்பாது கவி கருதிய கருத்தெதுவோ அதனையே புலப்படுத்திச் செல்லும் தங்கள் பொது நோக்குடைமையும் புலமைத் திறமையும் பாராட்டத்தக்கன.

இத்தகைய புத்துரையை முற்றுவித்துப் புத்தக ரூபமாகப் பதித்துதவினால் அது தமிழ்நாடு செய்த தவப்பயனென் றெண்ணத்தகும்.' 2—2—1926.

12. கம்பராமாயண சாரம் : பாலகாண்டம்(ராப்பர்)... 1 10 0
(காலிகோ) .... 2 0 0

13. ,, அயோத்தியா காண்டம்
(ராப்பர்) .... 1 6 0
(காலிகோ) .... 1 12 0

14. ,, ஆரணிய காண்டம்
(ராப்பர்) ... 1 6 0
(காலிகோ) ... 1 12 0

15. ,, கிஷ்கிந்தா காண்டம் (அச்சில்)

16. ,, சுந்தர காண்டம் (அச்சில்)



5, 6, இலக்கப் புஸ்தகங்கள் கையிருப்பில்லை,

மற்றப் புஸ்தகங்கள் கிடைக்குமிடம்:—

**தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் Ltd.,**
**திருநெல்வேலி & சென்னை.**

ஹிலால் பிரஸ், திருநெல்வேலி,—5–'37.